மேற்கூறிய அச்சேடங்களுள்.

| | | |
|---|---|---|
| ஒன்றாயின் | தினகரனங்கிஷம் | அல்லலுண்டாம் |
| இரண்டாயின் | சோமனங்கிஷம் | போகபாக்கியமுண்டாம் |
| மூன்றாயின் | குஜனங்கிஷம் | சீலமுண்டாம் |
| நான்காயின் | புதனங்கிஷம் | தானியவிருத்தியாம் |
| ஐந்தாயின் | குருவங்கிஷம் | இலாபமுண்டாம் |
| ஆறாயின் | சுக்கிரனங்கிஷம் | இராஜபோகமுண்டாம் |
| ஏழாயின் | சனியங்கிஷம் | ஜனப்பகை கலகமுண்டாம் |
| எட்டாயின் | இராகு அங்கிஷம் | மத்திமபலனாயிருக்கும் |
| ஒன்பதாயின் | கேது அங்கிஷம் | சகல நன்மையுமுண்டாம் |

## 8-வது

## ஜாதிப் பொருத்தம்.

முன்னிற்கும் ஆயத்தை யொன்பதின் மூட்டியே
நன்னிறகுங் குணிதத்தை நான்கினுக் கீயவே
பின்னிற்கு மொன்றெனிற் பிராமண சாதியாம்
மன்னற்கும் வைசியர் வாழ்சூத் திரர்களே. 39

இ-ள். முன்சொல்லிய ஆயத்தை ஒன்பதிற் பெருக்கி, நாலிற் கழிக்க, நாலுக்குள்ளாகவந்தது—சாதியாம், அதில் ஒன்றாகில்—பிராமண சாதி, இரண்டாகில்—க்ஷத்திரிய சாதி, மூன்றாகில்—வைசிய சாதி, இந்த மூன்று சாதிக்கும் சகல காரியமும் வசியமாம். நான்காகில்—சூத்திர சாதியாம், அது என்னளுஞ் சுகமில்லாமல் துயரத்தையே கொடுக்கும், எ-று.

மேற்கூறிய அச்சேடத்துள்.

---

| | | |
|---|---|---|
| ஒன்றாயின் | பிராமணஜாதி | நல்லபலனுண்டாம் |
| இரண்டாயின் | க்ஷத்திரியஜாதி | ஜெயகீர்த்தியுண்டாம் |
| மூன்றாயின் | வைசியஜாதி | உத்தமபலனுண்டாம் |
| நான்காயின் | சூத்திரஜாதி | துயரமுண்டாமென்பதாம் |

---

## 9-வது
## திதிப் பொருத்தம்.

என்னுமுன் னயத்தை யேய்ந்த வொன்பதிற்
கன்னிய முப்பதிற் கழிக்கச் சேடமே
நன்னிய முதற்றிதி நவமி ரண்டினில்
அன்னிய திரிதிகை யணுகும் நற்செயம். 40

இ-ள். முன்சொல்லிய ஆயத்தை ஒன்பதிற் பெருக்கிப் பூர்வ பக்ஷம் பதினைந்தும், அமரபக்ஷம் பதினைந்தும் ஒன்றாய்ச்சேர்த்து ஒன்பதிற் பெருக்கிய தொகையை முப்பதிற் கழிக்க அதற்குள்ளாக முன் பதினைந்து வரைக்கும் பூர்வபக்ஷத் திதி, பதினைந்துக்கு மேல் முப்பது வரையில் அமரபக்ஷத் திதி, அதன்பலன் ஒன்றுக்குப் பிரதமை திதி உத்தமம், இரண்டுக்குத்—துதிகை நன்மையுண்டாம், மூன்றுக்குத்—திரிதிகை ஜெயமுண்டாம், எ-று.

சயமிலே சதுர்த்தியைச் சார்ந்த பஞ்சமி
நயமுள சிறுவராம் நந்தை யாயுளாம்
வயமுள சஷ்டியேல் வயங்கு மூற்பலன்
வியம்பிணி நவந்தனில் நாசஞ் சாருமே. 4

இ-ள். நாலுக்கு—சதுர்த்தி, அபஜெயமாம். ஐந்துக்குப்—பஞ்சமி, புத்திரசம்பத்துண்டாம். ஆறுக்கு—சஷ்டி, புத்திரவிருத்தியுண்டாம். ஏழுக்குச்—சப்தமி, அதனல் நல்ல யோகபாக்கியமுண்டாம். எட்டுக்கு—அஷ்டமி, அந்த மனையில் எந்நாளும் வியாதியே பெருகும். ஒன்பதுக்கு—நவமி, அந்தமனை தீபமில்லாமற் பாழடைந்துபோம், எ-று.

சார்தசம் பாக்கியந் தங்குமே காதசம்
சீறு மத்திமந் துவாதசஞ் செம்மலாம்
பார்திரை யோதசி பகரிற்சம் பத்ததாம்
ஓர்பதி னன்கதேல் நாசஞ் சாருமே. 42

இ-ள். பதுதுக்குத்—தசமி, அதனல் பாக்கிய முண்டாகும் பதினென்றுக்கு—ஏகாதசி, அதனலந்தமனையில் கோபமுஞ், சிறுமையு முண்டாகும். பனிரண்டிற்குத்—துவாதசி, அதனல் அன்னவஸ்திரங் குறைவில்லாமல் நடக்கும், பதின்மூன்றுக்கு—திரயோதசி, அதனல நாளுக்குநாள் சம்பத்து பெருகும், பதினன்குக்கு—சதுர்த்தசி, அதனல் அந்தமனை பாழடைந்துபோம், எ-று.

ஏறிய பூரணை யாகிலுத்தமம்
கூறிய குருவுமேற் கொள்கை யாமிதில்
ஏறிய விருகதிர் சேர வோர்திதி
வேறிய விலையென விளம்பி னரோ. 43

இ-ள். பதினைந்துக்கும்—பௌர்ணமி, அதனல் எல்லாக்காரியமும் உத்தம பலனய்நடக்கும். பதினைந்துக்குமேல், பதினறுமுதல் முப்பதுவரையில்—அமரபக்ஷத்திதி அதற்குப் பூர்வபக்ஷப் பிரகாரம் நடக்கும். அதற்குமேலில்லை, எ-று.

மேற்கூறிய அச்சேடங்களுள்.

| சுக்கிலபட்சத்திதி சங்கியை | கிருஷ்ணபட்சத்திதி சங்கியை | பலன்களின் விபரம். |
|---|---|---|
| 1–பிரதமை | 16–பிரதமை | நன்மையுண்டாகும் |
| 2–துதிகை | 17–துதிகை | நலமுமுண்டாகும் |
| 3–திரிதிகை | 18–திரிதிகை | ஜெயமுண்டாகும் |
| 4–சதுர்த்தி | 19–சதுர்த்தி | அபஜெயமாகும் |
| 5–பஞ்சமி | 20–பஞ்சமி | புத்திரபாக்கியமுண்டாம் |
| 6–சஷ்டி | 21–சஷ்டி | சர்ந்திவிர்த்தியுண்டாம் |
| 7–சப்தமி | 22–சப்தமி | மிகநலமுண்டாகும் |
| 8–அஷ்டமி | 23–அஷ்டமி | பிணிகளுண்டாம் |
| 9–நவமி | 24–நவமி | அம்மனைக்ஷீணித்துப்போம் |
| 10–தசமி | 25–தசமி | மங்களகரமாயிருக்கும் |
| 11–ஏகாதசி | 26–ஏகாதசி | தீமையுண்டாம் |
| 12–துவாதசி | 27–துவாதசி | அன்னவஸ்திரங் குறையாதிருக்கும் |
| 13–திரயோதசி | 28–திரயோதசி | செல்வந்தழைக்கும் |
| 14–சதுர்த்தசி | 29–சதுர்த்தசி | அம்மனைபாழடைந்துபோகும் |
| 15–பூரணை | 30–அமாவாசி | பூரணபலனுயிருக்கும். |

## 10-வது

## இராசிப் பொருத்தம்.

நாட்டிய வாயத்தை நாலி லேற்றியே
ஈட்டிமுன் ளுன்கினுக் கிய நின்றது
கூட்டிய தொன்றதேல் குலவு மேஷமாம்
மீட்டிய விரண்டினில் ரிஷப மாகுமே. 44

இ-ள். முன் சொல்லிய ஆயத்தை நாலிற்பெருக்கிப் பன்னிரண்டிற் கழிக்க, அதற்குள்ளாக வந்தசேடம் ஒன்றுக்கு—மேஷம் அதனுல் குடும்ப விருத்தியாம். இரண்டிற்கு—ரிஷபம், அதனுல் சகலரும் மதிக்கத்தக்க பெருமை யுண்டாகும், எ-று.

மதித்தமூன் றதில்மிதி மன்றும் நண்டெனிற்
கதித்தநற் செயமரி வசியங் காட்டுமே
துதித்த பெண்ஞானமாந் துலாமும் யோகமாம்
பதித்ததேள் நலந்தரும் பலவும் நன்மையே. 45

இ-ள். மூன்றுக்கு—மிதுனம், அதனால் தனமுண்டாம். நாலுக்கு—கடகம், அதனால் ஜெயமுண்டாம் ஐந்துக்கு—சிங்கம், அதனால் வசீகரமுண்டாம். ஆறுக்குக்—கன்னி, அதனால் ஞானம் பொருந்தும். ஏழுக்குத்—துலாம், அதனால் போகபாக்கிய முண்டாம். எட்டுக்கு—விருச்சிகம், அதனால் சகலமும் நன்மையாய் நடக்கும். ஒன்பதுக்குத்—தனுசு, அதனால் சுபகாமுண்டாம், எ-று.

நன்மையே மகரமென் றுரும் நல்குமே
துன்மையே கும்பமுந் தினமுங் கூட்டுமே
வன்மையி லாதமீன் வளமை யீயுமென்
தன்மைசேர் மயனிவை சாற்றி னனரோ. 46

இ-ள். பத்துக்கு—மகரம், அதனால் நாளுக்கு நாள் நன்மையான பலனுண்டாம். பதினொன்றுக்குக்—கும்பம், அதனால் எந்நாளுந் துன்பமுண்டாம். பனிரண்டிறகு—மீனம், அதனால் சுகமுண்டாமென்று மயனனவர் சொன்னர், எ-று.

## மேற்கூறிய அச்சேடங்களுள்.

| | |
|---|---|
| 1—மேஷம் | குடும்பவிர்த்தியாம் |
| 2—ரிஷபம் | யாவரும் மதிக்கத்தகுந்த பெருமையுண்டாம் |
| 3—மிதுனம் | அதிக தனமுண்டாகும் |
| 4—கடகம் | ஜெயமுண்டாகும் |
| 5—சிம்மம் | வசீகரமுண்டாம் |
| 6—கன்னி | ஞானம்பொருந்தும் |
| 7—துலாம் | போகபாக்கியமுண்டாம் |
| 8—விருச்சிகம் | நன்மையாய்நடக்கும் |
| 9—தனுசு | சுபகாமுண்டாம் |
| 10—மகரம் | நாளுக்குநாள் பலனுண்டாம் |
| 11—கும்பம் | துன்பமுண்டாம் |
| 12—மீனம் | சுகமுண்டாம் |

என்பதாம்.

## 11-வது

# வயதுப் பொருத்தம்.

ஓதுமா யத்தைமூ வொன்பதி லேற்றியே
நீதியாய்ச் சதந்தனிற் கழிக்க நின்றது
சோதிசேர் மனைவிக்கா யுள் சேர்ந்ததே
வேதையாம் நாலுபத் தைந்து ளென்பரே. 47

இ-ள். முன்சொல்லிய ஆயத்தை இருபத்தேழிற் பெருக்கி நூறிற்கழிக்க அதற்குள்ளாக நின்ற சேடம் மனைக்கு ஆயுள். ஒன்று முதல் நாற்பத்தைந்துக்குள்ளாக—வந்த வயது எந்நாளும் வேதையுண்டாம். நாற்பத்தைந்துக்குமேல் நூறுக்குள் எவ்வளவு உயருகிறதோ அவ்வளவும் விசேஷம் என்பதாம், எ-று.

### வேறு.

ஆதாயம் அதிகப்பட்டு விரையங் குறைவாயிருந்தால் வீட்டுக்குடையவன் தனவானவான். ஆதாயங் குறைவாயிருந்து விரைய மதிகமா யிருந்தால் தரித்திரனவான். ஆதாயமும் விரையமுஞ் சரியாயிருக்கில் சமனயிருக்கும்.

### பஞ்சபூத பலன்.

மேற் சொல்லிய துருவ பதத்தை, 3-ல் பெருக்கி, 5-ல் கொடுக்க மிருந்த சேடம், 1—ஆயின், பூதத்துவம். இதன் பலன்-பாக்கியப்பிரதம். 2—ஆயின், ஜலதத்துவம் சந்தோஷம். 3—ஆயின், அக்கினிதத்துவம்—மிருத்துயுபயம். 4—ஆயின் வாய்வு தத்துவம்—சுகம். 5-ஆயின், ஆகாசதத்துவம்—தரித்திரம், என்பதாம்.

## திக்குகளுக்கு ஆகாத ராசிகள்.

மன்னு மேவுங் கிழக்குத் துவசாயம்
மின்னும் விருச்சிக ராசிக்கு மாகாது
துன்னு மேவுதென் கிழக்குது மாயமாம்
என்னு மீனரா சிக்குமே யாகாதே. 48

அறியுந் தெற்கு அலவற்குச் சிம்மாயம்
செறிதென் மேற்கு தெரிவைக்குச் சுனகாயம்
பொறியு மேற்கு புகல்ரிஷ பாயமும்
நறியுந் தனுசு ராசிக்கு மாகாதே. 49

அச்சமான தரையும் வடமேற்கு
நிச்ச காயும் நேருந்து லாத்துக்கு
உசச மான தொருபோதுங் கூடாது
தச்சு மாமயன் சாற்றிய வாறிதே. 50

உன்னு மேவும் உரையும் வடக்கதாம்
நண்ணுங் கெஜாயம் நவில வுரைக்கிறேன்
சின்னும் மேஷரா சிக்காரர்க் காகாது
அண்ணல் மாமய னறிய வுரைத்ததே. 51

கலங்கு மேவட கிழக்குகா காயமாம்
இலங்கு கும்பரா சிக்காரர்க் காகாது
நலங்கொள் தண்டும் நவிலுஞ் சுருவுடன்
பலங்கொள் சிங்கம் பகரு மிடபமே. 52

சொல்லும் வேதந் துலங்கும் ராசிக்காரர்
மல்லும் ஊர்நடு மத்தியிற் றுனுமே
புல்லும் மாடம் புகலவே கட்டொணு
வெல்லும் மாமயன் விளங்க வுரைத்ததே. 53

கட்டி னல்மாட மாளிகை பின்னமாம்
கட்டி னல்தோஷங் காணு மாளியாம்
கட்டி னல்மனை விருத்தியு மாகாது
கட்டி னல்சினங் கடுக வடைவதே. 54

---

கிழக்கு

| | | | | |
|---|---|---|---|---|
| | முயல் | கருடன் | பூனை | |
| வடக்கு | யானை | திசை | சிங்கம் | தெற்கு |
| | எலி | பாம்பு | நாய் | |

மேற்கு

| | | |
|---|---|---|
| கிழக்கு | துவசாயம் | விருச்சிகராசிக்காருக்காகாது |
| தென்கிழக்கு | தூமாயம் | மீனராசிக்காருக்காகாது |
| தெற்கு | சிம்மாயம் | கர்க்கடகராசிக்காருக்காகாது |
| தென்மேற்கு | சுனகாயம் | கன்னிராசிக்காருக்காகாது |
| மேற்கு | ரிஷபாயம் | தனுசுராசிக்காருக்காகாது |
| வடமேற்கு | காளையம் | துலாராசிக்காருக்காகாது |
| வடக்கு | கெஜாயம் | மேஷராசிக்காருக்காகாது |
| வடகிழக்கு | காகாயம் | கும்பராசிக்காருக்காகாது |

ரிஷபம், மிதுனம், சிங்கம், மகரம் இந்த நான்கு ராசியுடை யோர் கிராம மத்தியில் வீடு கட்டலாகாது.

இப்போது சொல்லிய பிரகாரம் வீடுகட்டினல் ஹானியாகும்.

---

## திக்கு நிலையறிய.

இந்திரன் கிழக்கேயாகும் எரிக்குத்தென் கிழக்குத்திக்காம்
அந்தக னிருப்புத்தெற்காம் அரிவையுந் தென்மேற்காகும்
சந்தித்த வருணன்மேற்குச் சமீரணன் வடமேற்காகும்
மந்திரி வடக்கதாகும் ஈசானன் வடகிழக்கே. 55

இதன் பொருள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1—வது | இந்திரன் | கிழக்கு | கெருடன் | எரி |
| 2—வது | அக்கினி | தென்கிழக்கு | பூனை | புகை |
| 3—வது | இயமன் | தெற்கு | சிங்கம் | நிழல் |
| 4—வது | நிருதி | தென்மேற்கு | நாய் | சேறு |
| 5—வது | வருணன் | மேற்கு | பாம்பு | நீர் |
| 6—வது | வாய்வு | வடமேற்கு | எலி | பூமி |
| 7—வது | குபேரன் | வடக்கு | யானை | நீறு |
| 8—வது | ஈசான்யன் | வடகிழக்கு | முயல் | தணல் |

இவர்கள் எட்டுப் பேர்களுக்கும் தானிருக்கும் ஸ்தானத்திலிருந்து 5-ம் ஸ்தானம் சத்துரு ஸ்தானமாகையால் அவ்விடத்தில் வீடுகட்டக்கூடாது. கட்டினால் ஹானியாகும்.

## ஏகாதசப் பொருத்தம்.



மனையு முழக்கோலாலளந்து வந்தகுழியின் பேராயம்
இனைய வெட்டிற்பெருக்கிப் பன்னிரண்டிற் கழிக்கவாதாயம்
பனைய தொன்பதுடன்பெருக்கிப் பத்திற் கழிக்கச்செலவாகும்
நினைய மூன்றுக்கேற்றியெட்டுக் கீய்ந்தசேடம் நிலையோனி 56

நிலைகொள் ளாயமெட்டேற்றி நெறிமூவொன்பான் கழித்ததுநாள்
பலைகொள் நாலிற்பெருக்கியேழுப் பானிற்கழித்த ததுதிதியாம்
இலகுமொன்பா னுடன்பெருக்கி யேழிற்கழித்த ததுகிழமை
உலகில்நான்கு தனிற்பெருக்கி யொன்பான்கழித்த தங்கிஷமே. 57

அஞ்சமூலிவான் பதிமேற்றி யமையும்னுமிற் கழியையது
கஞ்சநவத்தினாற் பெருக்கிக் கழிக்கசேடம் சாதியதாம்
மிஞ்சுகாசி னும்பெருக்கி வியத்திற் கழிக்கவிராசியாதாம்
மஞ்சுகிகர்த்த குழலாளே மயனுரைத்த மனைநூலே. 58

---

வேறு

## ஆயம் எட்டுக்கும் விபரம்.

முதற்பத மென்கிற துருவ ஆயத்தை எட்டிற்கொடுக்க மிகுந்த சேடம்.

---

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1—வந்தால் | துவசாயம் | இந்திரன் | கெருடன் | கிழக்கு | எரி | காரியசித்தி |
| 2—வந்தால் | தூமாயம் | அக்கினி | பூனை | தென்கிழக்கு | புகை | மரணம் |
| 3—வந்தால் | சிம்மாயம் | எமன் | சிங்கம் | தெற்கு | நிழல் | ஜெயம் |
| 4—வந்தால் | சிவனுயம் | நிருதி | நாய் | தென்மேற்கு | சேறு | ரோகம் |
| 5—வந்தால் | ரிஷபாயம் | வருணன் | பாம்பு | மேற்கு | நீர் | ராச்சியம் |
| 6—வந்தால | கானுயம | வாயுவு | எலி | வடமேற்கு | பூமி | துக்கம் |
| 7—வந்தால் | கெசாயம் | குபேரன் | யானை | வடக்கு | நீறு | சுபம் |
| 8—வந்தால் | காகாயம் | ஈசானியன் | முயல் | வடகிழக்கு | தணல் | நிஷ்புலம் |

### அருக்கன் நிலையறிய.

அருக்கனிற் கெருடனுகும் அக்கினிதி சையிற்பூனை
செருக்கிய எமன்சிங்கம் நிருதியிற் செங்காயாகும்
தருக்கமே வருணன்பாம்பு தாரணியெலியும் வாயு
இருக்குமே குபேரன் யானையீசனும் முயலதாமே 59

சித்திரை மூன்றுமாதம் சிற்றெலி பூனையாகும்
மத்தொரு மூன்றுமாதம் வருமுயல் நாயதாகும்
அத்துசொல் மூன்றுமாதம் அரியெதிர் யானையாகும்
சத்துதை மூன்றுமாதம் சர்ப்பமுங் கெருடனுமே. 60

அருக்கனொடு நற்கெருடனொடொரு பூனை
உருக்கியெழு சிங்கமறி னற்றதொரு நாய்தான்
மருக்கவெழு நாகமெலி வாரணமாம் யானை
இருக்கியெழு முயலா ரிடங்தெரிய வென்றே. 61

திக்கு நாலிற் சிறந்த அருக்கனைத்
தக்க ராசியிற் றூழ்வரச சாற்றினேம்
மிக்க நாளைச் சரத்திற் கழித்திட்த்
தக்க தோர்வய தாகவி ளம்பினேம் 62

வேறு

யோனியிற் பருந்துமுதிக்கவே நன்மையுள்ளதுக் குள்ளதேயுறுதி
மானிடர்தமக்கு மாடுகண்றோங்கும் மக்களும் மூன்றுடனிரண்டாம்
மேனியாம்பூமிவயலில்வெள்ளாண்மை விளைந்திடுமதிகமாய்த்தானே
பூனிதம்புகழுப்பொருளிலையொன்றே புகன்றனர் கணிதவல்லோரே.
சிங்கமே யுதிக்கச் சிநேகித ரதிகஞ் சேர்ந்திடும் பந்துவுந் தானே
பொங்குமே செல்வம் பூமிதா னுள்வன் புத்திரா ளைந்துமூன் றுகும்
தங்குமே வீடு மாடுகன் றுவுந் தனமுடன் வாழ்வுமுள் ளவனாய்
எங்குமே புகழுக் கீர்த்திவா னென்றே இயம்பினர் கணிதவல்லோரே

நாகமே நன்று நற்குண முள்ளோன்
நல்லனூண் பாரியு மிரண்டாம்
யோகமே யுடையோன் வாணிபம் பூமி
யுள்ளமட் டிருந்தது போதும்
தேகநோ யில்லான் பெருமையும் படையான்
சென்றிடம் செல்லனு யிருப்பன்
பூகமே லுடையோன் உதவியாம் பிறர்க்கென்
றுரைத்தனர் கணிதவல் லோரே. 65

கர்முக னென்னும் யோனி வந்துதிக்கக்
கயிலைவா ழீசன்போல் வாழ்வன்
சரிவா வெவர்க்குந் தனங்களைக் கொடுப்பன்
சகலமும் படைத்திடுந் தருமன்
விரிவுறப் பாடும் பைந்தமிழ்க் கிசைந்தோன்
வீரவை ராக்கிய முடையோன்
பரமனைப் பணிவோன் பத்தியா னென்றே
பகர்ந்தனர் கணிதவல் லோரே. 66

## வேறு.

பூதலத்திற் பூனையோனி புனிதமாக வந்திடில்
வாதுசூது வம்புண்டாகி வந்தபொருளும் நாசமாம்
சேதஞ்சேதம் மாடுகன்று தேவிபுத்தி ராதிகள்
நாதமில்லை யென்றறிந்து நாட்டினார் மயனுமே. 67

சுணங்க னென்ற யோனியாலே சுற்றியே யலைக்குமே
வணங்கிடா னெவர்க்குமே வணங்கிடில் வணங்குவன்
குணங்களில்லை குடியுமில்லை கோவுபாலில் லாதவன்
மணங்களில்லை மதியுமில்லை வாழ்வுமில்லை யென்பரே. 68

வாலுற் றெலிரும் எலியுதிக்க வந்துமின் றிடத்திலே
காலுங் கையுங் கட்டுப்பட்டுக் கால்விலங்கு காணுமே
நாலுமூலை யோடித்தேடி நலியும் பெண்டு பிள்ளைகள்
கோலமாகும் பரமனை கூறினார்க ளுண்மையே. 69

ஐயமென்ற முயலின் யோனி அம்மனை யுதித்திடில்
தையலென்ற பெண்களுக்குத் தரித்திரத்தைக் காட்டுமே
கையும்மெய்யும் நோய்களாற் கனவருத்த மாகுமே
வையகத்தோ ருய்யவே வழுத்தினார் மயனுமே. 70

## வேறு.

பாரினிற் பருந்து அரிகரிநாகப் பாங்குட னிவ்வகை யோனி
காரினில் மனைக்கு வந்திடத்தானே கலியுக ஜனங்களுக் கெல்லாம்
மாரியும் மனையுங் கல்வியும் பொருளும் மாடுகன் றுயுபால் மக்கள்
நாரியோடிருந்து வாழ்குவனென்றே நவின்றனர் கணிதவல்லோரே

# யோனி நிலைகாண.

பார்க்குங் கிழக்கு கொடியாகும் பகருந்தென் கீழ்ப்புகை யதுவாம்
சேர்க்குந் தெற்கு சிங்கமதாம் தென்மேல் மூலை நாயாகும்
ஏர்க்கு மிடபம் வடமேற்கு மிசைந்த கழுதை வடக்கானை
காக்கை வடகீழாகு மதிற்கண்ட வெட்டும் யோனியதே. 72

இதன் பொருத்தம்.

கொடியே யாகிற் றிருவாகுங் கொலையே காட்டும் புகையாகில்
நெடிய சிங்கம் வெற்றியதாம் நின்ற நாயே கூற்றமதாம்
கொடியி லிடபம் மிகநன்றாம் நோக்குங் கழுதை நோயாகும்
படியக் கரியு மிகநலமாம் பரவுங் காகம் பொல்லாதே. 73

# சிற்பாசாரி லட்சணம்.

பன்னிய பொற்பூ ணூலும் பவித்திரங் கையிற் பூண்டு
சென்னியிற் சிகையு மாகித் தேவபூ சையில் விரும்பும்
மன்னிய குலமும் மிக்க மனம்பரி சுத்த னாகி
அன்னிய சாதி கூடா தறிந்தவன் சிற்ப னாமே. 74

இ-ள். உருத்திராட்சமாலையும், பூணுநூலும், பவித்திர மோதிரமும் தரித்து, தலையிற் குடுமியும் வைத்து தேவபூசையில் விருப்பமும், தன் தேவி தவிர அன்னிய மாதர்களைக் கருதாமல் குல உண்மையுடையவனும் களங்கமற்ற மனத்தினனுமாகிய உத்தமன் சிற்பனென்று சொல்லப்படும், எ-று.

சுத்தமா மறைக ளோதித் தூய்நல் லாடை சாத்தி
சித்தமே தெளியும் வண்ணம் சிறப்புடை யவனு மாகி
நித்தமு மனுஷ்டா னங்கள் நெறிதவ றாமற் றெய்வ
பத்தியாய் நூற்க ளாய்ந்த பண்பினன் சிற்ப னாமே. 75

இ-ள். பரிசுத்தமாகிய வேதங்களை யோதி பல ஆடைகளை அதாவது, துய்யவெள்ளைப்பட்டு வஸ்திரங்களையாவது, கார்மடிப் பட்டாவது பூண்டு அனுஷ்டான விதிகளை தெரிந்து முறைமற் செய்து தெய்வபக்தியுடனே பற்பல சாஸ்திரங்களை பயின்றுணர்ந்தவன் சிற்பனென்று சொல்லப்படும், எ-று.

வேறு.

சிகையுமேக் ஞோப வீதரமுந் தரிகத் திருந்திய சகவேட்டியுமாம்
சுகமுயர் கர்ண குண்டலங் கரத்திற் றலங்கிய மண்டல மதுவாம்
அகமதிற் கெந்த வட்சதை பூசை யருள்ஜெப மாலையுங் கூர்ம
உகமைசேர் பீடம் வேதபாடமுமா யுதிப்பவன் சிற்பனு முணர்வே

இ-ள். சிகையாகிய உச்சிக்குடுமியும், முந்நூலும் உடையாகிய வஸ்திரமும், உத்தரீகமும் ஏகவஸ்திரமும், காதிற் கவச குண்டல மும், கையிற் கமண்டலமும், நெற்றியிற் கெந்த வட்சதையும் சிவ பூசையும் ஜெபமாலையும் கூர்மாசனத்தோடும் விளங்கப்பட்டவன் சிற்பனென்று சொல்லப்படும், எ-று.

## சிற்பன் தொழிலளவு.



சிற்பனு முழக்கோல் மட்டந் திரள்சங்கு கலன்பெய் பேழை
கெற்பமரங் கயிறி னோடு திளர்மூலை தளத்தின் செய்கை
வற்கமா மரங்கள் வெட்டும் வகையதன் குறியிடங்கள்
நிற்குந்தா னுத்தி ரந்தான் நேரிசை யனைத்துஞ் சொல்வாம். 77

இ-ள். சிற்பன் முழக்கோல், மட்டக்கோல், சங்கு, கலன், பேழை, கெற்பம், பிடிக்கயிறு, மூலையளவு, தளத்தின் செய்கை, மரவகை, வெட்டும் வகை, மரத்தின் குறியிடங்கள், தூண்மட்டம், உத்தரமிசைத்தல் முதலியவைகளைச் சொலலத்தொடங்கியதென்ற வாறு.

வளையொடு விட்டஞ் சட்டம் மற்றபல் வினைகள் நல்ல
அளவுகால் கைமரங்கள் அதின்முது குயரஞ் சத்தி
விளைவிடு வாசற்கூறு முகுதிலே கதவு தாளும்
உளவுத னியற்கை தன்னை யுள்ளவா றெடுத்துரைப்பாம். 78

இ-ள். வளை, விட்டம், சட்டம், பரப்பல், இசைத்தல் அளவு கால் மரங்கள், கைமரங்கள், மூகட்டுயர்ச்சி, சத்தி, வாசலின் அகல அளவு நிலையினியல்பு, கதவு, தாப்பாள் முதலான பற்பல வகையி னியல்பு கூறுவா மென்றவாறு.

நல்லதோர் சிற்பனுக்கு நன்மனை கோலும் போது
சொல்லுநற் றுகிலும் பொன்னுஞ் சுகந்தமு மிகவளித்து
வல்லவர் வகுத்துக்கேட்டு வருந்தியே பொருத்தம் பார்த்துச்
செல்லவம் மயனுஞ் சொன்ன சிற்பநூல் பலிக்குந் தானே. 79

இ-ள். ஒருவன் மனைகோலும் நாளில் சிற்பநூலாசிரியனுக்குப் புதிய சோமனும் கைப்பொருளும் சந்தனம், புட்பம், முதலான வெகுமதியு மளித்து வருந்திக் கேட்கவென்று மயனால் சொல்லிய தென்றவாறு.

## வீட்டுக்குக் கருப்பம்வைத்தல்.

தருமணி சிறந்த தாது தனமொடு தானி யங்கள்
புகழுமண் கிழங்கி னோடு புகல்மருந் தினைய யாவும்
வகையுட னடைவி னாலே வாஸ்துவுக் கினிய தாகத்
துகளறக் கருப்பம் வைக்கிற் சுகம்பல வெய்து மன்றே. 80

அகம்புக வுரைத்த மாத மயனவா ரங்கள் நாளிற்
புகழ்ந்திடு திரமா யூர்க்குப் பொருந்துநல் லிராசி தன்னில்
நிகழ்ந்தசக் கரத்தின் மேவி நின்றநற் கோட் பதத்தின்
மகிழ்ந்துயர் கங்குல் தன்னில் வைத்திடக் கருப்பம் நன்றே.

## பூமியைத் தன்கைவசமாக்கல்.

விரித்தவான் பரணி யோணம் விசாகமோ டத்தம் நாளிற்
கருத்துடன் நாலாங் காலிற் கடகம்வந் துதிக்கக் கண்டு
திருத்திய செய்யில் மண்ணைத் தின்றிடச் செல்வம் மிஞ்சிப்
பொருத்தமும் புகழு முண்டாய்ப் பூமியுந் தன்ன தாமே. 82

இ-ள். பரணி, திருவோணம், விசாகம், அஸ்தம் இவை பீற்றிலே காலங் காலிலே கற்கடகம் உதயமாகப் பூமியைப் பார்த்து மண்டின்றபோக அந்தப்பூமியும் தனதானியச்செல்வமும் உண்டாமென்றவாறு.

---

## மூழக்கோல் இலட்சணம்.

---

குன்னிய அணுவோ ரெட்டுக் கொண்டது பஞ்சின் றூளாம்
எண்ணிய பஞ்சின் றூளோ யெட்டது மயிர்மு னையாம்
நுண்ணிய மயிரு மெட்டாம் நுண்மண லாகு மெட்டு
திண்ணிய கடுகோ ரெட்டு செப்பிடுந் துவரை யெட்டே. 83

இ-ள். அணுவு 8-கொண்டது—ஒரு பஞ்சின்தூளாம், பஞ்சின்தூள் 8-கொண்டது—ஒரு மயிர் முனை, மயிர் முனை 8-கொண்டது—ஒரு நுண்மணல், நுண்மணல் 8-கொண்டது—ஒரு கடுகு, கடுகு 8-கொண்டது ஒரு துவரை, எ-று.

துன்னிய துவரை யெட்டுத் தோன்றிய விரல தாகும்
கன்னிய விரலீ ராறு கண்டது சாண தாகும்
மன்னிய சாணி ரண்டு வந்தது முழம தென்பர்
அன்னிரு முழமுந் தச்சு முழமென வறிந்து கொள்ளே. 84

இ-ள். துவரை 8-கொண்டது—ஒரு விரல், விரல் 12-கொண்டது—ஒரு சாண், சாண் 2-கொண்டது—ஒரு முழம், முழம் 2-கொண்டது—ஒரு தச்சு முழம், எ-று.

துளங்குமா ணுங்கு லந்தான் சூத்திரற் குற்ற தாகும்
வளம்பிர சாபத் யந்தான் வணிகருக் குதவி யாகும்
அளந்தனு மூட்டி யென்மூ லாசருக் காகும் பாரில்
விளம்பனுக் கிரகந் தானே வேதியர்க் கேற்ற தாமே. 85

இ-ள். விரலளவு அல்லது அங்குலம், இருபத்திநைகுகொண்டது—ஒரு முழமென்றும், அதற்கு சாதியென்றும், மானுங்குலமென்றும், கிடகு அல்லது கிஷ்க்கு மென்றும் பெயராம், எ-று.

| | |
|---|---|
| மானுங்குலம் | 24-விரலளவுகொண்டது சூத்திரர்க்காகும் |
| பிரசாபத்தியம் | 25-விரலளவுகொண்டது வைசியர்க்காகும் |
| தனுமுஷ்டி | 26-விரலளவுகொண்டது க்ஷத்திரியர்க்காகும் |
| தனுக்கிரகம் | 27-விரலளவுகொண்டது பிராமணர்களுக்காகும் |

என்பதாம், எ-று.

## கோயில் கோபுரம் மாடகூடம் மனை முதலியதற்கு அளவு முழக்கோல்.

தாபர முதலா யுள்ள சமயத்தோர் மனையு மிக்க
மாபர மாடந் திவ்ய மாளிகை யளக்கச் சொன்ன
தாபர சமய மெல்லாந் தனுக்ரக விரல்க ளாலே
கோபுரங் கூடஞ் சாலை குருமனுங் குலத்தி னாலே. 86

இ-ள். தாபரமாகிய சமயமாறுக்கும் மனை, மாட மாளிகைகளுக்கு அனுக்கிரகங் கொண்ட கோலால் அளக்கவும். கோபுரம், கூடம், சாலை, இராஜர்களாயுதம், சுவேலாயுதம், சத்திரம், சாமரை, இவைகளெல்லாம் மானுங்குலத்தினா லளக்கலாம். இதன்றி, சாதி, சந்தம், விகற்பம், ஆபாசமென்றும் நான்குகோல் சாதி ஒருமுழம்-சந்தம், முக்கால் முழம் — விகற்பம், அரைமுழம் — ஆபாசம், கால்முழமென்றவாறு.

தந்தியின் மருப்பு வேணு தருகருங் காலி தேக்கு
சந்தனத் தாலந் தென்ன மாமுந்தா மரையு மாகும்
விந்தைசேர் முழக்கோல் செய்வர் மேவிய சிரசில் வில்வம்
அந்தமத் தியிலே ராஜ லட்சுமி யடியிற் கூவே. 87

## முழக்கோல் செய்யும் விபரம்.

இ-ள். யானையின் கொம்பு, மூங்கில், கருங்காலி தேக்கு, சந்தனமரம், செஞ்சந்தனமரம், [illegible]மரம், [illegible] இவைகளால் முழக்கோலுண்டாக்கி வைக்கலாம். சிற்பசாஸ்திரத்தின்விதி—சிரசில் வில்வம், மத்தியம - [illegible], பாதத்தில்-பூமாதேவி, எ-று.

இதுவுமது.

### சாதிக்குத் தக்க முழக்கோல்.

---

சிறந்தசாதி நான்கினுக்குஞ் சிறுகோல் வரிசை செப்பிடுங்கால்
அறைந்த மூங்கில் மறையவர்க்காம் ஆச்சாமரமு மரசருக்காம்
நிறைந்த தேக்கு வணிகருக்காம் நெடிய வேங்கை சூத்திரர்க்காம்
முறிந்திடாம லவரவர்க்கு முழக்கோ லதுகொண் டளப்பதுவே.

### ஜாதி நான்குக்கும் விபரமாவது.

இ-ள். மூங்கிலாற் கோலுண்டாக்கி பிராமணர்களுக் களக்கலாம். ஆச்சாமரத்தினாற் கோலுண்டாக்கி-அரசர்களுக் களக்கலாம். தேக்கினாற் கோலுண்டாக்கி - செட்டிகளுக்களக்கலாம். வேங்கை மரத்தாலே கோலுண்டாக்கி - சூத்திரர்களுக் களக்கலாம், எ-று.

மூங்கிலிற் செய்த கோல்கள் மூதுமறை வேதியர்க்காம்
தீதிலா ஆச்சா வின்கோல் திறைகொளு மரசர்க்காகும்
வேங்கையிற் செய்த கோல்கள் வேளாளர்க் குரியதாகும்
பாயகுறு தேக்கு வின்கோல் பகர்ந்திடில் வணிகர்க்காமே. 49

இ-ள். மூங்கிலிற் செய்த முழக்கோல்—பிராமணர்க்காம், ஆச்சாவின் கோல்—அரசர்க்காம், வேங்கையின் கோல்—வேளாளருக்காம், தேக்குவிற்செய்த கோல்—வைசியர்க்காம், எ-று.

---

## மட்டக்கோல் மரங்கள்

பொருந்திய மட்டக்கோல்தான் புளிவேங்கை தேக்கோ டாச்சா
வருந்திய புளிபார்ப் பார்க்காம் மன்னவர்க் காச்சா வாகும்
விரும்பிய வணிகர் தேக்கு வேளாளர் வேங்கை யாகும்
இரும்புதான் தேவர்க்காகும் இயல்புடன் சமைத்துக் கொள்ளே.

### மட்டகோலுக் குரியவை.

இ-ள். புளிவேங்கை தேக்கு, ஆச்சா இந்நான்கு மரங்களாற் செய்த கோல்கள் நான்கு வருணத்தாருக்கும் ஆகும். அவற்றுள் புளியமரத்தின்கோல்—மறையோர்க்காகும், ஆச்சாவின்கோல்—அரசர்க்காகும், தேக்குமரத்தின்கோல் - வணிகர்க்காகும், வேங்கையின்கோல் — வேளாளருக்காகும், இரும்பினாற் செய்தகோல்—தேவர்களுக்கும், நான்கு வருணத்தாருக்கும் பொதுவா யளக்கலாம், எ-று.

## மூலை மட்டக்கோலளவு.

மட்டமது கோலினை வளம்பட வுரைக்கில்
விட்டபடி பத்துவிரன் மேவுமொரு தலையாம்
எட்டுவிர லொருதலை யதின்படி கொள்மூலை
பட்டுவளை சதுரமெனப் பார்த்து விரல் வரையே. 91

இ-ள். மூலைமட்டக் கோலளவு சொல்லுமிடத்து ஒருதலை பத்து விரல் நீளம், ஒருதலை எட்டுவிரல் நீளம், நடுமூலைபட்டுவளைந்து சதுரமாக்கி விரலளவு பார்த்து வரைந்துகொள், எ-று.

## அளவுநூற் கயிறு.

தாலமருள் கேதகை சணற்றேற் டிலத்தி
ஆலினவை மேலுறிகல் லாத்தியரி நூலால்
வாலிய கயிற்றினை வளம்பட முறுக்கி
ஏலவிர லின்னுனியதாக மொழி மின்னே. 92

இ-ள். பனை, மருள், தாழை, சணல், இலந்தை, ஆல், ஆத்தி, இவைகளின் நாரினோடு, பருத்திநூல் கூட்டி விரல்நுனிப் பிரமாணத்தில் கயிறு முறுக்கிக் கொள்ளவும், எ-று.

முப்பிரிய தாயொரு கயிற்றினை முறுக்கில்
விப்பிரர்கள் விண்ணவர்கள் மன்னவருக்காகும்
வைப்பிரி யிரண்டுபிரி வணிகருழு வார்க்கே
யொப்புறுசி றொன்மையிலி போதிப்புகாக் கின்றேன். 93

இ-ள். முப்பிரிக்கயிறு—தேவர்களுக்கும், மறையோருக்கும், மன்னவருக்கு மாகும், இரண்டு பிரிக்கயிறு—வணிகருக்கும் வேளாளருக்குமாம், எ-று.

பகர்ந்தபோர் மூளைக்குகேளாம் பதினொரு விர லடக்கி
இகழ்ந்தநேர் விரலா லேற்றி யிருபத்து நாலுங் கொள்க
மகிழ்ந்தவை கிடாவும்போது வாஸ்துவின் வயிற்றைக்கெல்லி
யுகந்ததென் மூலைமுன்னை யுத்தமுன்னிடமாய்க் காக்கே. 94

இ-ள். மூளையளவு கொள்ளும்படி மனையொழுங்குமூளை பதினொரு விரல்அடக்கி ஒவ்வொன்றைத்தி யிருபத்துநாலு விரலளவு கொள்ளலாம். அதை யிரட்டித்து வாஸ்துவயிற்றில் முதல்மூளை யடித்துத் தென்மூலையை முதலிட்டுத் தொடங்கி யிடமாக மனை யொழுகுவாம்.

## மூளையளவு கொள்ளும்படி.



மூளையது சொல்லிற் பதினொர் விரற்கடை நீளந் தானும்
விளைவுறு வித்து நான்கு விரலள வாகக் கொண்டு
வளைவறக் கிடக்கு மந்த வாஸ்துவின் வயிற்றிற் கெல்லி
மூளையது தென்மேன் மூலை முதலிட மாகத் தாக்கே. 95

இ-ள். மூளையின் பிரமாணம், 11-விரகடையளவு, கனமும் 24-விரற்கடை நீளமும் கொள்ளவும், மூளைகடாவும்போது வாஸ்துவின் வயிற்றிற் கெல்லி தென்மேல் மூலையிலும், தென்கீழ் மூலையிலும் வடகீழ் மூலையிலும், வடமேல் மூலையிலும் கடாவவும் எ-று.

மூளை தன்னை யிடத்தில் வாங்கி மூலமே குருவே யென்று
தளர்விலா ஆசிநதித் தாக்கி யெட் டடி யடித்து
கிளைவளர்க் கயிறுபூட்டிக் கிளர்ந்த பால் மஞ்ச ளிட்டு
அளைப்பலா மூளைய டிப்ப தாமென மயனுஞ் சொன்னர். 96

இ-ள். மூளையை இடதுகையினல் வாங்கி ஆதிமூலமே சற்குருவே யென்று துதித்து வாழி வாழியென்று தொழுது எட்டடியடித்துக் கயிற்றைப்பூட்டி பாலும் மஞ்சளுந் தெளித்து மூளையை இறுத்துவதென்று மயனுரைத்தார், எ-று.

அடித்ததோர் மூளையி னுச்சி யலறிடி லிலலம்பாழாம்
பிடித்ததோர் மூளையின் கண்டம் பிளக்கிலோ பிணிவந்தெய்தும்
படித்ததோர் மாதே சிந்திப் பறந்திடிற் பதிசா வாகும்
செடித்தவர் மூளை தெறிக்கிற் செல்வமுஞ் சிதறு மென்னே. 97

இ-ள். இப்படி யடித்த மூளையினுச்சி யவறிடில் அந்த வீடு பாழாகும். அடித்த அடியால் மூளையின் தலை பிளக்கில் வியாதி வரும். தெறித்துப்போனல் வீட்டுக் கெஜமான் சாவான். அடித்த அடியால் அம்மூளை தூள்பறக்கில் அவன் செல்வங்கள் சிதறுண்டு போம், எ-று.

கொட்டிய மூளைபிடுங்கல் கோர்த்திடுங் கயிறறுத்தல்
நட்ட கால்தனைப்பறித்தல் நடுவாணி மரமிசைதல்
விட்டவா யலையடைத்தல் வேறுவா யலைவிடுத்தல்
கட்டமா மனையாளும்போய் தரிப்பது மரிதுதானே. 98

இ-ள். இப்படி நட்டமூளையைப் பிடுங்குதலும், கயிறறுத்துக் கட்டுதலும், நட்ட கால்களைப் பிடுங்குதலும், நட்ட நடுவில் மரம் வைத்தலும் வாசற்படிவிட் டதைப் பேர்த்து வேறு வாசற்படி விடுதலும், இவை முதலியவை மறுத்துசெய்யில் எஜமான் பெண் சாதி மரித்து எஜமானும் சீவிப்பது அரிதாகும், எ-று.

தேரோடு தெருவொழுங்கு தெண்டக சாலையெல்லாம்
வாரோடு அகலமச்சம் வடிவது வாகாய்க் கொள்ள
கேரொடு அகலந்தன்னில் நீண்டொன்று குறையுமாகில்
ஊரொடு மனையிற்புக்கா தோடுவரிருக்கை விட்டே. 99

இ-ள். தேர் நடத்தப்பட்ட வீதி. ஒழுங்கு தப்பி மங்காது சாலை பொருத்தம் அகலம் அச்சம் அளவு பிரமாணம் இவைகள் குறைவுபடுமாகிலும், நீண்டும் அகன்றும் ஒன்றுக்கொன்று மாறை வழுவி பேதப்படுமாகிலும், அந்த வீதியிலும், மனையிலும் புகுதாமல் தேசாந்திரியாக ஓடிப்போய் விடவும், எ-று.

## மனைகோல ராசியறியும்படி

---

ஏறுங்கன்னி மகரங் கிடந்தது
கூறும் விற்கயல் கொச்சை நடந்தது
தேறும் நண்டரி தேளிவை நின்றது
மீறுங் கோல்குடம் மிதுன மிருந்ததே. 100

| | | | |
|---|---|---|---|
| ரிஷபம் | கன்னி | மகரம் | கிடந்தது |
| தனுசு | மீனம் | மேஷம் | நடந்தது |
| கடகம் | சிங்கம் | விருச்சிகம் | நின்றது |
| துலாம் | கும்பம் | மிதுனம் | இருந்தது |

இருந்தது இன்பஞ் சேரும் இயல் நடை பூசல் காட்டும்
பொருந்தவே நின்ற தெல்லாம் பொன்னுடன் வரவுண்டாகும்
வருந்தவே கிடந்த தெல்லாம் மத்திபஞ் சாவா மென்று
திருந்திய மொழிநன் மாதே செப்புநீ தெளிந்து கொண்டே. 101

## மனை முகூர்த்தஞ் செய்ய,

---

ஆலயம் நகரம் பட்டணங் கிராமம் அருளிய தடாககூ பமுமாம்
சிலமாம் சிற்பன் செய்கின்ற கிரியைச் செயலதைத் தப்பியவேறு
தாலத்தி லன்ய சாதியோன் செய்தாற் றாணி மன்னவர் தமக்கும்
சாலவே கர்த்தன் றனக்குமே தோஷச் சஞ்சலந் தான்மிகவுண்டே.

இ-ள். ஆலயங்கள், நகரங்கள், பட்டணங்கள், கிரகங்கள், தடாகங்கள், கிணறுகள் இவையெல்லாம் சிற்பன்கையாற் செய்யாமல் அன்னிய வர்னத்தான் கையினால் முகூர்த்தஞ் செய்தால் இராஜர்களுக்கும் யஜமானனுக்கும் ஆகா தென்றவாறு.

## மனைக்கோலுகும்போது சகுனம்.

மனையது கோலவென்று வந்தவ னோடு சிற்பி
கனிவுடன் வழிச்செல் போது காணுமேற் காம ரூபி
வனிதையர் தனைக் கண்டாக்கால் வந்தது பாக்ய மென்றே
நனிவுடன் சிரத்தை யாக நன்மையாய் நடக்க நன்றே. 103

இ-ள். மனைகோல வேண்டுமென்று யாதாமொருவர் வந்தழைக்க அவரோடு சிற்பியானவர் போம்போது காமரூபியாயிருக்கும் ஸ்திரீகள் எதிர்ப்படில் நல்லயோகமென்று விரைவிற்போய் மனைகோல நன்மையுண்டாம், எ-று.

மன்னிய நிறைகுடங்கள் மாராயஞ் சொல்லும் வண்ணன்
மின்னிய தயிர்பால் சோறு விடக்குடன் மதுக்குடங்கள்
கன்னியர் தாசி வேசி கரும்புகட் டெதிரே காணில்
இன்னிய விரட்டைப் பார்ப்பா ரெதிர்வரக் கருமம் நன்றே. 104

சகுனமாவது.

இ-ள். நிறைகுடம், வண்ணான், தயிர்க்குடம், பாற்குடம், அன்னம், மதுக்குடம், எவ்வர்ன ஸ்திரீ, தேவதாசி, வேசி, கரும்புக்கட்டு இரட்டைப் பார்ப்பார். இவர்களெதிரே வந்தால் மகாவுத்தமம், எ-று.

கொடிநரி கிள்ளை வேங்கை கூர்முயல் கோழி கொக்கு
வடிவுள மஞ்ஞை யோந்தி மரையொடு பசுக்கள் மீதே
கடிகமழ் நாரை நாவி கடுத்துவாய்ச் செம்போத் தென்னில்
படிமிசை வலத்திற் சென்றால் பலன்பெறுங் கருமம் நன்றே. 105

இ-ள். காக்கை, நரி, கிளி, வேங்கை, முயல், கோழி, கொக்கு, மயில், ஓந்தி, மான், பசுமாடு, நாரை, நாவிப்பிள்ளை, கடுத்துவாயேறு, செம்போத்து, இவையெல்லாம் வலதுபக்கஞ் சென்றால் மகாவுத்தமம்.

வானரஞ் சுணங்கள் பூனை வலியனுங் கோட்டான் டேகை
ஏனமாம் மூஞ்சூரொட்டை எலியுடன் சாரை கூகை
கானமார் கருடனுந்தை காடைநல் லுடும்பு கீரி
தானும்வந்திடத்தே போகிற்றுன்செயுங் கருமம் நன்றே 106

இ-ள். குரங்கு, நாய், பூனை, நந்து நரி, கோட்டான், டேகை பன்றி, நந்தூரு, ஒட்டகம், எலி, சாரைப்பாம்பு, கூகை, கருடன், ஆந்தை, காடை, உடும்பு, தீ இவைகளெல்லாம் பக்ஷிபோர்க்கப் போம்போது வலப்புறமிருந்து இடப்புறம் போனால் மிகவும் கஷ்டமாம், எ-று.

செப்பபுச் செப்ப வாடை செம்பட்டை சுருட்டை நொண்டி
செப்பரிற் மயிரி லாதான் விரிதலை ஒற்றைக் கண்ணன்
தையலா விழந்த மாது தடிக்கொம்பு காண்பா றுயில்
கையிலே கயிறு காணக் காலன் வாய்ப் பதிவன்றுனே. 107

இ-ள். அழுக்கு வஸ்திரத்தையுடையவன், செம்பட்டத்தலை, சுருட்டைத்தலை, நொண்டி, முகத்தில் மயிரில்லாதவன், விரித்த தலையையுடையவன், ஒற்றைக்கண்ணன், விதவைப்பெண், தடிக் கொம்பையுடையவன், கயிறுடையவன் இவர்களெதிரே வந்தால் உயிர்க்குச் சேதமுண்டாகும், எ-று.

தலைவிரி மொட்டை மட்டை தவசிசன் யாசி பார்ப்பான்
முலையிலாக் கன்னி கும்பம் மூக்கறை விறகு கட்டு
நலமிலா முதுநோ யாளன் நாவிதன் குருடன் செக்கான்
பலரும்வந் தெதிரே காணிற் பலனிலாக் கரும மாமே. 108

இ-ள். விரித்த தலையையுடையவன், மொட்டைத்தலை, தவசி சன்னியாசி, ஒற்றைப் பிராமணன், ஸ்தன்னியமில்லாப்பெண், புதுப்பானை, மூக்குப்போனவன், விறகுக்கட்டு, நோயாளி, நாவிதன், கண்ணில்லாதவன், வாணியன் இவர்கள் எதிரே வந்தால் ஆகாது. என்றவாறு.

---

## மனையில் நிற்கும்போது சகுனம்.

வலமிகச் சொலினும் பல்லி யல்லது இடத்திற் கூறப்
பலமிக வுடையதாகும் பணித் திடுங் கருமம் நன்றும்
குலமிக வளரு நாளுவ கோற்குறு காதன் மைந்தர்
பலமிக வுடைய ராவர் பல்லியி னிபல்பு தானே. 109

இ-ள். சிற்பியும் அம்மனைக்கு எஜமானனும் அந்த மனையில் சென்று நின்றால் பல்லிமுன்பு வலமாகச் சொல்லில் நன்மையாம். பின்பு இடமாகச் சொல்லில் அம்மனைக்குரியவன் அரசர்களுக்குப் பிரியமுள்ளவனாய்ப் புத்திர களத்திரத்துடன் சுகித்து வாழ்வன்.

வெள்ளிய புருவி னோடு விளங்கிய பசுவும் ஏறும்
ஒள்ளிய மானும் மாதும் உருவுடன் காணு மாகிற்
றெள்ளிய கருமம் நன்றாம் சீர்மனை கோலச சிராம்
வள்ளிவே லவர்போல் வாழ்வர் மண்ணின்மேல் மனை யுள்ளோரே.

இ-ள். வெள்ளைப் புருவும், வெள்ளைப் பசுவும், வெள்ளை ரிஷபமும், வெள்ளை மானும், மாதும், தங்கள் மனையில் நின்றபோது காணில் உத்தமம், எ-று.

கனிவுடன் வழிசெல்போது காணுமே காமரூபி
வனிதையர் நிற்கப் பொன்னும் வாலிபர் முகமன் செய்தால்
நினைவுடன் சிந்தையாலே நேயமாய் நடக்கும்போது
அனமென நடக்கும் பாவாய் அதுவுமுத் தமமென் றோதே.

இ-ள். சிற்பனும் எஜமானனும் மனைகோலம் போகும்போது அழகுபொருந்திய எவ்வர்ன ஸ்திரீயை எதிரே கண்டால் மகா உத்தமம், எ-று.

மதுக்குடம் மாங்கிஷங்கள் மதுரமாம் பால்நெய் நீரும்
கதித்திடு வாசங் கட்டுக் கழுத்திபூ ரணகும் பந்தான்
மதித்திடும் யானை கோவு மாம்பரி சிவிகை தானும்
எதிர்வரக் காணில் நன்றாம் எய்திடுங் கருமந் தானே. 112

இ-ள். கள்ளுக்குடம், மாமிசம், பால், நெய், தண்ணீர், வாசனைத் திரவியம், கட்டுக்கழுத்தி அல்லது சுமங்கலி, நிறைகுடம், யானை, அரசன், குதிரை, பல்லக்கு இவைகள் எதிர்ப்படில் நன்மையைத் தரும், எ-று.

# பறவைச் சகுனம்.

பாங்குடைப் பகன்றை யுங்கான் பண்ணொடு வலத்திற் பாடித்
தாங்கூட னிடத்தி னிற்போய்த் தனிக்கால் வசியு மாகில்
ஓங்கிய மனையும் நன்றாம் ஒள்ளிய பயனு முண்டாம்
தீங்குதான் வருவதில்லை செப்பிய வண்ணந் தானே. 113

இ-ள். சிற்பியும் எஜமானனும் மனையில் நிற்கும்போது பகன்டையென்னுங் குருவி, கவுதாரி, வலத்திற்பாடி வலத்திலிருந்து இடத்திற் போர்ந்து வசியுமாகில், மனைக்கும் எசமானனுக்கும் துன்பங்கள் நீங்கி நன்மையை யுண்டாக்கும், எ-று.

வேறு.

கரியகுயில் செய்யமயில் போற்றுநல் நரையான்
வரியமரை பரியசிவல் வசியகொடு காகம்
உரியவலம் போகவிவை யூனமிலை நரியன்
அரியபுலி யோந்தியெலி கேழலொடு நாகம். 114

இ-ள். குயில், மயில், செம்போத்து, நரையான் அல்லது வல்லூறு, மான் சிவல் அல்லது கவுதாரி, வலியன் அல்லது கரிக்குருவி காகம், நரி, புலி, ஓந்தி, எலி, பன்றி, நாகம் இவை வலம்போக நன்மை, எ-று.

ஓடுமுயல் கருடனொடு காடிநல் புல்வாய்
ஆடுபருந் தட்டையுடன் சுட்டிமுதல் சூரன்
மாடிதொடு சாரையொடு மந்தியுடன் நாயும்
ஓடியிடம் போகிலிவை யூனமில தாமே. 115

இ-ள். முயல், கருடன், காடி, புல்லைமேய்ந்து வாய்ப்புல்லுடனே வருகின்ற ஆடு, பருந்து நில அட்டை, சுட்டி, சூரைக்குஞ்சு சாரைப்பாம்பு, குரங்கு, நாய் இவைகள் குறுக்கிட்டு ஓடுமாகில் மிகவும் நன்மையாம், இதில் சாரை தரிசனம் சன்யாசிக்கும் சம்பத்தையுண்டுபண்ணுமென்று ஒருபழமொழி உலகில் வழங்கும் எ-று

வண்டுட னரணை பல்லி மண்புழு சிலந்தி வட்டம்
நண்டுதான் கிடக்கு மாகில நன்மனை யெடுக்க நன்று
கொண்டுள வுடும்பு தேரை கூருந்தே ளாமை பூரான்
விண்டெலி காணு மாகில் வெறுமனை யாகு மன்றே. 116

இ-ள். வண்டு, அரணை, பல்லி, நாங்கூழ் வட்டமிடும் சிலந்திப்பூச்சி, நண்டு இவைகளை மனைகோலும்போது காணில் அம்மனை கட்ட வுத்தமம். உடும்பு, தேரை, தேள், ஆமை, பூரான், எலி, மனைகோலும்போது காணில் அம்மனை கட்டவேண்டாம், கட்டில் வீடு பாழாகும், எ-று.

## அவ சகுனம்.

எறும்புதா னொழுங்கு விட்டே யேகிடி லியற்ற வேண்டாம்
காம்புதான் கரையா னேந்தி கண்டிடிற் கருத வேண்டாம்
பறந்துதான் சுரும்பு யர்ந்து பரவிலும் வேண்டாம் வேண்டாம்
திறம்படு மொழியி னாளே தீமையுண் டிதனாற் றானே. 117

இ-ள். எறும்புகள் ஒழுங்குவிட்டுப் பலவாறாய்ச் சிதறினும், கரையானாகிய செல்லுகள் பரவியிருக்கினும், மொய்க்கினும் ஓணான் எதிர்ப்படினும், வண்டுகள் பூமியைத் துளைக்கினும் அல்லது பறக்கினும் அம்மனையைக் கோல வொண்ணாதென்றவாறு.

தண்டுளன் வலையன் யீமத் தபசியு மூடவன் செக்கான்
கொண்டமூக் கறையன் கூனன் குருடனும் நேரதாகக்
கண்டிடில் நசித்துப் போகுங் கருதிட வேண்டாமென்று
வண்டமர் குழலின் மாதே வகுத்துரை செய்வர் தாமே.

இ-ள். தடிகொண்ட குடிகாரன், வலையன், சுடுகாட்டாண்டி, மூடவன், செக்கான், மூக்கறையன், கூனன், குருடன், இவர்களை நேரே எதிரிற் காணில் மனைகோல நசித்துப்போம், எ-று.

## மனை உயர்வு தாழ்வு லட்சணம்.

அருக்கனுஞ் சோமன் றனும் அழகுடன் மிகவே தாழ்ந்து
திருக்கிளர் மேற்குந் தெற்குஞ் செறிந்துயர் பூமிமேலாம்
வருத்தமில் லாது வாழ்வர் மனையினை யெடுத்துக் கொள்ளக்
கருத்துயர் மயனூர் சொன்ன காரணமறிந்து பாரே. 119

இ-ள். சூரியனென்பது—கிழக்கு, சந்திரனென்பது—வடக்கு, இவ்விரண்டு திக்குந் தாழ்ந்து தெற்கும், மேற்கும் உயர்ந்திருக்கும் பூமி சுகத்தைக் கொடுக்கும், எ-று.

---

## நான்குவருணத்தார் கிருக திசை.

அந்தணர் தென்றிசை யரசர் மேற்றிசை
வந்திடு வணிகர்நல் வடக்கு வான்றிசை
தொந்தமில் சூத்திரர் தோன்றுங் கீழ்த்திசை
பிந்திய நடுவது பிரமன் றனமே. 120

இ-ள். பிராமணர்களுக்குத்—தெற்கு, அரசர்களுக்கு—மேற்கு வணிகர்களுக்கு—வடக்கு, சூத்திரர்களுக்கு—கிழக்கு, இவ்விதம் இத்திசைகளில் குடியிருப்பாராகில் அவர்கள் இலட்சுமிகரம்பொருந்தி வாழ்வார்கள் நடு பிரமஸ்தானமாகக்கொள்க, எ-று.

---

## சார்புமனையின் லட்சணம்.

திடமாகிய தென்மனை மாமறை யோர்
குடசார்பெனு மேன்மனை கோலரசர்
வடசார் பெனு மாமனை வைசியராம்
குடாகிய கீழ்மனை சூத்திரரே. 121

இ-ள். தென் சார்பாய் வடக்குப் பார்த்த வாசல்மனை—மறையோர்க்காம், மேற்சார்பாய் கிழக்குப் பார்த்த வாசல்மனை—அரசர்களுக்காம், வடசார்பாய் தெற்குப் பார்த்த வாசல்மனை—வைசியருக்காம், கீழ்சார்பாய் மேற்குப் பார்த்த வாசல்மனை—சூத்திருக்காம், எ-று.

## மண்ணின் சுவைலட்சணம்.

இனிதாகிய மண்ணவை மாமறையோர்
மனதாகிய கார்ப்பது மன்னவர்தாம்
புளிதாகிய தேபுளி மண்வசியர்
சொனதாகிய சூத்திரர் கைத்தமனே. 122

இ-ள். மண் சுவையாவது இனிப்பாகியமண்-மறையோருக்காம், துவர்ப்பாகியமண்-க்ஷத்திரியருக்காம், புளிப்பாகியமண் - வைசியருக்காம், கைப்பாகியமண்-சூத்திராருக்காம், எ-று.

## மனையில் வாசஞ்செய்யுமிலட்சணம்.

நன்குலத் தோர்கள் நவிலுநா யகனும்
நன்பெறுங் கிளையுளோர் மூத்தோர்
தென்திசை யவர்கள் திரும்பிய மேற்குச்
சேய்குடி யிருக்கவுந் தீதாம்
பொன்குல வவரைத் தெற்கினில் வைத்துப்
பொருந்திய வடகிழக் கிருந்தால்
இன்மைசேர் பொருளுஞ் சுகத்தையுங் கொடுக்கும்
இயம்பிய மயனுரை யிதுவே. 123

இ-ள். தன்னிற் பெரியவர்களுக்கும், குருக்களுக்கும், தாய் தந்தையர்களுக்கும், தன் கிளைஞருக்கும், மூத்தவருக்கும், தெற்கு மேற்கு தானிருக்கலாகாது. இருந்தால் தீதாம், அவர்களைத்தெற்கு மேற்கு வைத்துத்தான் வடக்கு, கிழக்கு இப்பக்கங்களி லிருந்தால் பொன்பொருள் போகபாக்கியம் சுகபோஜனம்-இவைகளுடன் சுகமாய் வாழ்வன், நன்மையுண்டாகும், எ-று

## மனைகட்டி யிருக்கத் தானலட்சணம்.

தெற்கினிற் குப்பை நிருதியில் வைக்கோல்
திருந்திய மேற்கினி லெருமை
தக்கதோர் தொழுவம் வாயு மூலையிலே
தகைமைசேர் தானிய மிடுவாம்



மிக்கதோர் குபேரன் வடக்கினிற் பசுவும்
மேவிய தொழுவமு மதுவாம்
இக்கருவுடனே கட்டளை யிடவு மியம்பிய
மயனுரை யிதுவே. 124

இ-ள். இருந்தமனைக்குத் தெற்கே குப்பை கொட்டவும், தென் மேற்கு மூலையில் வைக்கோற் போர்கட்டவும், மேற்கில் எருமைத் தொழுவமியற்றவும், வ-மேற்கில் தானியத் தொம்பை யமைக்கவும், வடக்கில் பசுத்தொழுவங் கட்டவும், உத்தமம்.

வேறு

## வளவு கட்டியிருக்கத் தானலட்சணம்.

இயற்றுவட கீழ்த்திசை யருக்களைய மைப்பாய்
பயிற்றரு கிழக்கதனி லாடுகளை வைப்பாம்
செயிற் றெரிய வக்கினியிற் சேமமதுவைக்கப்
பயிற்பட மொழிந்தபடி பார்த்திடுதல் நன்றே 125

இ-ள். வடகிழக்கு திசையில் அடுக்களை வைப்பது கிழக்குத் திசையில் ஆடுகளை வைப்பது, தென்கிழக்குத் திசையில புதையல் வைப்பது. இந்தப் பிரகாரம் செய்து வைப்பது மகா உத்தமம். இந்திரன் குளிக்குமிடம் - அக்கினி, சமையல் பண்ணுமிடம், நமன் திக்கில் சயன ஸ்தானம், நிருதி - சாஸ்திரம் வைக்குமிடம். வருணன்-போஜனம் புசிக்கும்வீடு வாயுவுமூலை, பசுத்தொழு, குபேரன் தனதானிய வீடு, ஈசான்யமூலை, பூசைவீடு கட்டராஜ யோகமுண டாம், எ-று.

## மனைகோல இராசிப்பொருத்தம்.

நன்மனை யெடுப்போர்க் கெல்லாம் நாளுடன் ராசிதன்னை
முன்வலங் கொள்வா ராயின் முயன்றதோர் கருமம் நன்றும்
பன்னெடுங் காலம் வாழ்வர் பயன்றரும் மக்கட் பேறும்
பின்னிடங் கொள்வா ராகிற் பிணியொடு கேடதாமே. 126

இ-ள். மனையெடுப்போர் இராசிதன்னை முன் வலமாகக் கொள்வாராகில் மகா உத்தமம், பின் இடங்கொள்வாராகில் பீடையுண்டாம்.

## மனைகோல ஆகா நாள்

நன்னாளினும் மனைகோலினும் நலதாகு மிராசி
முன்னாவது வலமாவது முளரித் திரு வுறையும்
பின்னாவது இடமாவது பேணி மனை கோலில்
பொன்னாவது பொருளாவது உயி ராவதுபோமே, 127

இ-ள். நல்லமாதங்களிலும், நல்லவாரங்களிலும், நல்லதிதிகளிலும் நல்ல நட்சத்திரஙகளிலும், நலலயோகங்களிலும், நல்ல ராசிகளிலும் மனைகோல நலமுண்டாகும். கெட்ட மாதஙகளிலும், கெட்ட வாரஙகளிலும், கெட்டதிதிகளிலும், கெட்ட நட்சத்திரங்களிலும், கெடட ராசிகளிலும், மனைகோலில் தீமையுண்டாம். மண், பெண், பொன் இவை மூன்றும் தேய்பிறைச் சந்திரனைப் போல நாளுக்குநாள் தேய்ந்துபோம், எ-று.

### வீடுகட்டவும் குடிபுகவும் ஆகாமாதங்கள்.

கூனி யானி புரட்டாசி மார்கழி
ஊன மான வொரு நான்கு மாதமும்
மானியாமல் மனை குடிதான் புகில்
ஈன மாகி யிடர் செயும் நோய்களே.

இ-ள் பங்குனி, ஆனி, புரட்டாசி, மார்கழி இந்த நாலுமாதமும், மனை கோல்வும், குடிபுகவும் ஆகாது. இதற்கு விரோதமாய்க் குடிபுகினும், அல்லது மனை கோலினும் பிணியுண்டாம்.

## தாரபலன் தினப்பொருத்தம்

பிறந்தநா ளிரண்டு நான்கும் பேறொன்பா னெட்டு மாறும்
சிறந்தசீர் கேட நல்ல சேர்த்திடுஞ் சம்பத் தாகும்
அறிந்த நூல் கற்ற வல்லோ ரைந்து மூன்றேழும் நீக்கித்
துறந்த பேர் மொழிந்த தெல்லாம் சுகமெனப் பொருந்துந்தானே.

இ-ள். ஒருவன் பிறந்த நாளுக்கு 2, 4, 9, 8, 6-இந்நாட்கள் நன்றும். இதிற் சிறப்பும் சீரும் மற்றுமுள்ள சம்பத்துக்களைத் துந் தரும், தெரிந்த பெரியோர்கள் 5, 3, 7, இவைகளை நீக்கி நன்மையைத் தருமென்று சொன்னாளில் யாவையுஞ் செய்வர்கள்.

இதை தாராபலமென்பர்.

## அவையாவென

| முதற்பரியாயம் | 2—ம் பரியாயம் | 3—ம் பரியாயம் | |
|---|---|---|---|
| 1—அசுவனி | 10—மகம் | 19—மூலம் | ஜன்மம் |
| 2—பரணி | 11—பூரம் | 20—பூராடம் | சம்பத்து |
| 3—கார்த்திகை | 12—உத்தரம் | 21—உத்தாடம் | விபத்து |
| 4—ரோகணி | 13—அஸ்தம் | 22—திருவோணம் | க்ஷேமம் |
| 5—மிருகசீரிடம் | 14—சித்திரை | 23—அவிட்டம் | பிரத்தியக்கு |
| 6—திருவாதிரை | 15—சுவாதி | 24—சதயம் | சாதகம் |
| 7—புனர்பூசம் | 16—விசாகம் | 25—பூரட்டாதி | வதை |
| 8—பூசம் | 17—அனுஷம் | 26—உத்ரட்டாதி | மைத்திரம் |
| 9—ஆயிலியம் | 18—கேட்டை | 27—ரேவதி | பரமமைத்ர |

இதிற் சிலர் முதற்பரியாயத்தில்—ஜன்மதாரையும், இரண்டாம் பரியாயத்தில்—விபத்துதாரையும், மூன்றும் பரியாயத்தில்—பிரத்தியக்கு தாரையும், மூன்று பரியாயத்திலும்—வதைதாரையும் ஆகாவென்பர், மற்றவை கூடுமென்பர்.

## இதுவுமது.

ஜென்ம நக்ஷத்திரமும், அதற்கு 10, 19, நக்ஷத்திரங்களும், ஜென்மத்திரயங்களாம் இவற்றில் அபிஷேகம், யாகம், அன்னப்பிராசனம், உபநயனம், பட்டம் பெறுதல். பூமிப்பேறு, உழவு, விதைப்பு, வீட்டுக்கருமம், நூதனபாண மணிதல், புதுவஸ்திர முடுத்தல், வித்தியாரம்பம், தருமம் என்னும் இவைகளைச் செய்ய உத்தமம். கர்ப்பாதானம், பும்ஸவனம், சீமந்தம், விவாகம், பிதிர், கருமம் க்ஷௌரம் யாத்திரை, மருந்துண்ணல், பகை முயற்சி, எண்ணெய் முழுக்கு என்னும் இவைகளைச் செய்யலாகாது. பெண்களுக்கு ஜென்மத்திரயங்களில் விவாகம் செய்யலாம்.



ஜென்ம நக்ஷத்திரமுதல் அன்றைய நக்ஷத்திரம்வரை யெண்ணிக்கொண்டு வந்த தொகையை ஒன்பதிற்—கழித்து நின்ற மிகுதி 2, 4, 6, 8—முதற் பரியாயத்தின், 9—ஆயின் நல்லன; ஏனைய 3, 5, 7—இரண்டாம் மூன்றும் பரியாயங்களின், 9—ஆயின் தீயன், மூன்றும் பரியாயத்தொன்பது ஏகாசி நக்ஷத்திரமாயின் கொள்ளலாம்.

1—வார பலன்
2—வார விசேஷம்
3—இராசி விசேஷம்
4—மடசுத்தம்

## வார பலன்.

ஞாயிறி லலையச் செய்யும் நலந்தருந் திங்களாகில்
சேயிற்றீப் படுவதாகும் செழும்புதன் மகப்பே றுகும்
வீயமாம் வியாழம் பொன்னும் வெள்ளியே விளைவுண்டாகும்
ஆயதோர்சனி பெருக்காம் அகந்தனைக் கோலுங் காலே. 130

இ-ள். ஞாயிற்றுக்கிழமை-அலையப்பண்ணும், திங்கட்கிழமை-நன்மையைத் தரும், செவ்வாய்க்கிழமை - தீப்படும், புதன்கிழமை-சந்தான சம்பத்துண்டாம், வியாழக்கிழமை - பொருள்சேரும், வெள்ளிக்கிழமை-தானியமுண்டாம், சனிககிழமை - வமிசவிருத்தியாகும். ஆகையால்நதத் தினங்களறிந்து மனைகோலவும், எ-று.

---

## மடசுத்தம் பார்க்க.

| | | | |
|---|---|---|---|
| குடிபுக | 12-ம் இடமும் | கோடியுடுக்க | 6-ம் இடமும் |
| முடிகுட்ட | 11-ம் இடமும் | யாத்திரைக்கு | 5-ம் இடமும் |
| அன்னப்பிராசனத்துக் | 10-ம் | வித்தியாரம்பத்துக் | 4-ம் இடமும் |
| மயிர் கழிக்க | 9-ம் இடமும் | தானியத்துக்கு | 3-ம் இடமும் |
| உபநயனத்துக் | 8-ம் இடமும் | விதைவிதைக்க | 2-ம் இடமும் |
| விவாகத்துக்கு | 7-ம் இடமும் | அபிஷேகத்திற்கு லக்கனமும் சுத்தமாக இருக்கவேண்டும். | |

## வாரபலன்.

| | | |
|---|---|---|
| ஆதிவாரம் | அக்கினிபயம் | துக்கப்பிரதம் |
| சோமவாரம் | கலகம் | சுபகரம் |
| மங்களவாரம் | மிருத்துவுபயம் | துக்கப்பிரதம் |
| புதவாரம் | சுபம் | தனப்பிரதம் |
| குருவாரம் | மங்களகரம் | தனப்பிரதம் |
| சுக்கிரவாரம் | தனலாபம் | சுபகரம் |
| சனிவாரம் | புத்திரஹானி | சோரபயம் |

| வார விசேஷம் | இராசி விசேஷம் |
|---|---|
| ஞாயிறு உத்தியோகஞ்செய் | மேஷம் விவாகத்துக்கும் |
| திங்கள் விதைவிதைக்க | ரிஷபம் திதிகொடுக்கவும் |
| செவ்வா போர்செய்ய | மிதுன யாத்திரைக்கும் |
| புதன் வித்யாரம்பஞ் செய் | கடகம் மரம்வைக்கவும் |
| வியாழ விவாகஞ்செய்ய | சிங்கம் குருவைக்காணவும் |
| வெள்ளி மயிர்கழிக்க | கன்னி புணர்ச்சிக்கும் |
| சனி தவஞ்செய்யஉத்தம | துலாம் வீடுகட்டவும் |
| | விருச்சிகம் உழவுக்கும் |
| | தனுசு கிணறுவெட்டவும் |
| | மகரம் கப்பல் யாத்திரைக்கும் |
| | கும்பம் மயிர்கழிக்கவும் |
| | மீனம் வித்யாரம்பத்துக்கும் ஆகாது |

## சந்திர பலன்.

ஜென்ம ராசிமுதல் அன்றையதினம் சந்திரனிருக்கிற ராசி வரைக்கும் எண்ணிக்கொண்டுவந்த தொகையில்,

1-க்கு தேகசௌக்கியம்
2-க்கு தனஹானி
3-க்கு திரவியலாபம்
4-க்கு ரோகபயம்
5-க்கு காரியவிக்னம்
6-க்கு சதுருநாசம்
7-க்கு சௌக்கியவிர்த்தி
8-க்கு ரோகவிர்த்தி
9-க்கு காரியதாமதம்
10-க்கு உத்யோகவிர்த்தி
11-க்கு இஷ்டார்த்தசித்தி
12-க்கு தனவிரயம்

மேற்கண்ட சந்திரன் அப்போது நிற்கும் ராசிவரை எண்ணியவழி இருபக்ஷங்களினும், 1, 3, 6, 7, 10, 11-ம் இராசிகளும், அமரபக்ஷத்தில் 4, 12-ம் இராசிகளும், பூர்வபக்ஷத்தில் 2, 5, 9-ம் இராசிகளும் சுபம். ஏனைய சுபம்.



## முகூர்த்தத்துக்காகா நாட்கள்.

வட்டமுங் கொடிய வாரம் மந்தாரம் மழையினோடு
தொட்டிடுங் கிராணம் பற்றல் சூழ்ந்திடும் பொல்லா நாட்கள்
விட்டியும் வெள்ளி பாடு விடமுறு கடிகை நேரம்
அட்டமி யுலா விருத்தை யாகாது நீக்கிக் கூட்டே. 131

இ-ள். சந்திரனையும், சூரியனையும் சூழ்ந்து கோட்டையாகிய பரிவேடமிட் டிருத்தல். சனி, ஞாயிறு, செவ்வாயாகிய கொடிய வாரங்கள், மந்தாரம், மழை, தூரல், கிராணந்தீண்டல், பொல்லாத நக்ஷத்திரங்கள் விட்டிகாணம், வெள்ளிபாடு, விஷகடிகை, அஷ்டமி, அமாவாசையுமா இருத்தை, இவை யாகாதென்று நீக்கி நல்ல நாட்களில் மக்கள் சோபன மாடகூடம், கோபுரம் முதலா இயதுக்கெல்லாம் முகூர்த்தஞ் செய்யலாகா தென்பதாம், எ-று.

பொல்லாத நாட்கள் வாரம் பொருந்தாத ராசி மாதம்
செல்லாத வெள்ளி பாடு தியாச்சியம் இராகு காலம்
எல்லாரும் நன்மை வாஸ்து யெழுந்தி ருக்கின்ற போதும்
வல்லாண்மை யுடையோ ரெல்லாம் மனைகோல லாகா தன்றே. 132

இ-ள். பொல்லாத நாட்கள், பொல்லாதவாரம், பொருந்தாத ராசி, பொருந்தாத மாதம், சுக்கிரன்பாடு, தியாச்சியம், இராகு காலம், வாஸ்து புருடன் விழித்தெழுந்திருக்கும் சமயம் இக்காலங் களையெல்லாம் நீக்கி நல்ல நாட்களில் முகூர்த்தஞ்செய்ய உத்தமம், எ-று.

## காலபல மறிய.

ரவிகுஜன் குருமால் சுங்கன் நற்சனி மதியே ராகு
குவிகுயக் கனிகா லையிற் கொண்டவர் கால மாகும்
பவியமா யெண்ணிப் பார்த்துப் பகர்ந்திடு மூன்றே முக்கால்
புவியினில் நன்மை தீமை பூணவே பொருந்தச் சொல்லே. 133

இ-ள். சூரியன், செவ்வாய், வியாழன், புதன், சுக்கிரன், சனி, சந்திரன், இராகு, இவ்வரிசைக் கிரமமாய் அவரவர்கள் வாரங்காலையில் அவரவர்கள் காலமாகும். இதிற் சுபர்களுடைய காலத்திற் சுபகர்மமும், பாவருடைய காலத்திற் பாவகர்மமுஞ்செய்ய உத்தமம். காலமென்பது மூன்றேமுக்கால் நாழிகையாம், எ-று.

## வாரத்தின் காலவிவரம்.

| இத்தனை நாழிகை வரையில | ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| ௩¾ | சூரியன் | சந்திரன் | செவ்வா | புதன் | வியாழன் | சுக்கிரன் | சனி |
| ௭½ | செவ்வா | இராகு | வியாழன் | சுக்கிரன் | புதன் | சனி | சந்திரன் |
| ௰௧¼ | வியாழன் | சூரியன் | புதன் | சனி | சுக்கிரன் | சந்திரன் | ராகு |
| ௰௫ | புதன் | செவ்வா | சுக்கிரன் | சந்திரன் | சனி | ராகு | சூரியன் |
| ௰௮¾ | சுக்கிரன் | வியாழன் | சனி | இராகு | சந்திரன் | சூரியன் | செவ்வாய் |
| ௨௰௨½ | சனி | புதன் | சந்திரன் | சூரியன் | இராகு | செவ்வாய் | வியாழன் |
| ௨௰௬¼ | சந்திரன் | சுக்கிரன் | இராகு | செவ்வாய் | சூரியன் | வியாழன் | புதை |
| ௩௰ | இராகு | சனி | சூரியன் | வியாழன் | செவ்வாய் | புதன் | சுக்கிரன் |
| ௩௰௩¾ | சூரியன் | சந்திரன் | செவ்வா | புதன் | வியாழன் | சுக்கிரன் | சனி |
| ௩௰௭½ | செவ்வாய் | இராகு | வியாழன் | சுக்கிரன் | புதன் | சனி | சந்திரன் |
| ௪௰௧¼ | வியாழன் | சூரியன் | புதன் | சனி | சுக்கிரன் | சந்திரன் | இராகு |
| ௪௰௫ | புதன் | செவ்வாய் | சுக்கிரன் | சந்திரன் | சனி | இராகு | சூரியன் |
| ௪௰௮¾ | சுக்கிரன் | வியாழன் | சனி | இராகு | சந்திரன் | சூரியன் | செவ்வாய் |
| ௫௰௨½ | சனி | புதன் | சந்திரன் | சூரியன் | இராகு | செவ்வாய் | வியாழன் |
| ௫௰௬¼ | சந்திரன் | சுக்கிரன் | இராகு | செவ்வாய் | சூரியன் | வியாழன் | புதன் |
| ௬௰ | இராகு | சனி | சூரியன் | வியாழன் | செவ்வாய் | புதன் | சுக்கிரன் |

## யோகினி நிற்கும் நிலை.

இந்திரன்கனக னக்கினி நிருதி யெமநீர் வாயுவீ சானன்
மூக்துமா காயம் புவியுடன் பத்து முற்பிர தமை முதலாக
வந்தபினிந்த முறைப்படி யம்மா வாசிவீ ருக்திதி தன்னில்
உக்துயோ கினியி லெதிரி டப்புவியி லோக்கும் பின்புறம் வலம்
[நன்றே. 134

இதுவுமது.

யோக பூர்வப்ர தமைமுத லட்டமி
யொன்ப தாகாயம் பூமி தசமியாம்
ஆகும் பன்னொன்று பஞ்சமி யந்தமும்
அங்கெறி சஷ்டி முன்னுவா வீறதாம்
எகு மிப்படி முப்பது பக்கமும்
இடமு னந்தமாம் பூமிதென் கீழ்த்திசை
லோக யாத்திரை நன்மைக் கிவைகளும்
நோக்கும் பூசுக் கிரன்மற்றும் நல்லதே. 135

இ-ள். கிழக்கு முதல் வலமாக எட்டுத்திக்கினும், பூர்வபட்சத்துப் பிரதமை முதலாக அட்டமியளவும், திக்கு 8-க்கும் நிற்கும். நவமி ஆகாசத்திலும், தசமிபூமியிலும் நிற்கும். முற்பக்க ஏகாதசி முதல் அமரபக்ஷத்துப் பஞ்சமி யிறுதியாக முன்போல் நிற்கும் அமரபக்ஷத்து சஷ்டி முதலாக அமாவாசை யிறுதியாக முன்போலவே நிற்கும். இப்படி முப்பது பக்கத்தையும் நிறுத்தி இதில் தென் கீழ்திசை நிற்குந் திதியும் ஆகாசம் பூமியில் நிற்கும் திதியும் எதிரும் இடமும் நிற்குந்திதியும் யாத்திரை முதலியவற்றிற்கும் விலக்கப்பட்டன. அல்லாத பக்கங்களும் வலமும் பின்னும் பூமி சுக்கிரனும் மிகவும் நன்மையாம்.

# யோகினி பூமிசுக்கிரன் நிலை.

| பூருவபக்ஷம் | திதிகள் | அமரபக்ஷம் | பூமிசுக்கிரன்நிலை |
|---|---|---|---|
| கிழக்கு | பிரதமை | மேற்கு | கிழக்கு |
| வடக்கு | துதியை | வடமேற்கு | தென்கிழக்கு |
| தென்கிழக்கு | திரிதிகை | வடகிழக்கு | தெற்கு |
| தென்மேற்கு | சதுர்த்தி | ஆகாயம் | தென்மேற்கு |
| தெற்கு | பஞ்சமி | பூமி | மேற்கு |
| மேற்கு | சஷ்டி | கிழக்கு | வடமேற்கு |
| வடமேற்கு | சப்தமி | வடக்கு | வடக்கு |
| வடகிழக்கு | அஷ்டமி | தென்கிழக்கு | வடகிழக்கு |
| ஆகாயம் | நவமி | தென்மேற்கு | ஆகாயம் |
| பூமி | தசமி | தெற்கு | பூமி |
| கிழக்கு | ஏகாதசி | மேற்கு | கிழக்கு |
| வடக்கு | துவாதசி | வடமேற்கு | தென்கிழக்கு |
| தென்கிழக்கு | திரயோதசி | வடகிழக்கு | தெற்கு |
| தென்மேற்கு | சதுர்த்தசி | ஆகாயம் | தென்மேற்கு |
| தெற்கு | பௌர்ணமை | பூமி | மேற்கு |
| தெற்கு | அமாவாசை | பூமி | மேற்கு |

இத்திதிகளில் மேற்கண்ட திக்குகளில் பூமி சுக்கிரனும் யோகினியுமிருப்பார்கள். ஆகாயம், பூமியிலும் முன்னிலும் இடப்புறத்திலுமிருக்கும்போது அத்திக்குகளை நோக்கி சுபமுகூர்த்தங் கொள்ளுதலும், குடிபுகுதலும், யாத்திரை போகுதலும் ஆகாவாம். சூது வழக்கு, யுத்தம், யாத்திரைக்குப்-பிரதானம், முன் - மரணம், பின் ஜெயம் ஆகாயம் பூமி மத்திமம்.

---

## மாடுவாங்கக் கூடா நாள்

உத்திரம் அஸ்தத் தோடும் ரேவதி மூலத் தோடும்
சித்திரை பரணி யோடும் தேய்பிறை மூன்று நாளும்
கத்தவர் காலி கொள்ளார் கருதியே கொள்வா ராகில்
வித்தவன் வீடு பாழாம் கொண்டவன் காலிசாவாம். 136

## எரிநாள்.

விரிகதிர் மாமகம் விசாகந் திங்காளம்
அருங்குஜ ஞதிரை யாயிலி யம்புதன்
விரைகுரு சதையமும் வெள்ளி ரோகணி
இரைசனி பூராட மெரிக்கும் நாட்களே. 137

இ-ள். ஞாயிறு-மகமும், திங்கள்-விசாகமும், செவ்வாய்-திருவாதிரையும், புதன்-ஆயிலியமும், வியாழன்-சதையமும், வெள்ளி-உரோகணியும், சனி-பூராடமும், எரிநாளானதால் இந்நாட்களில் புதுமனை கோலில் தீப்படும், எ-று.

---

## கரிநாள்.

சித்திரையி லாறுபதி அந்துதேதி
சிறந்தவை காசியேழ் பதினைறேடு
மத்தமொரு பதினேழாம் ஆனிமாதம்
வருந்தேதி யொன்றும் ஆடிதன்னிற்
பத்தமுள்ள விரண்டுடனே பத்தீர்பத்து
பரிவாகு மாவணியி விரண்டாந்தேதி
மெத்தவே யொன்பானும் மீர்பத்தெட்டில்
மிகமகிழ்வா யின்னமுந்தான் விள்ளுவேனே. 138

புரட்டாசி பதினாறு மிருபத்தொன்பான்
புகழான ஐப்பசியி லாறேடேதான்
காட்டான இருபானும் கார்த்திகைக்கும்
காணென்று பத்துபதி னேழுதேதி
திரட்டான மார்கழிக்கு ஆறேடொன்பான்
சிறப்பான தேதிபதி னொன்றேயாகும்
வரட்டான தைமாத மொன்றிரண்டு
மகிழ்மூன்று பதினொன்று பதினேழ்தானே. 13৮

கோரான மாசிபதி னைந்து பன்னேழ்
நேர்மைபதி னாறும் பங்குனிமாதத்திற்
பேரான ஆடிபதி னொக்திறேடு
பிறகுபத் தொன்பான்கா ளிவைகளெல்லாம்
சீராக உமைக்கீசன் சரிகாளென்று
செப்பினு ரிக்காளிற் சுபமுகூர்த்தம்
தாராள மாய்ச்செய்ய லாகாதப்பா
தாரணியோர்க் குத்தெரியச் சாற்றினேனே. 140

---

## கரிநாள் அல்லது மாதத்தியாச்சியம்.

| | | | |
|---|---|---|---|
| சித்திரைமீ | 6-15௳ | கார்த்திகைமீ | 1-10-17௳ |
| வைகாசிமீ | 7-16-17௳ | முதற் | சோமவாரமும் |
| ஆனிமீ | 1-6௳ | மார்கழிமீ | 6-9-11௳ |
| ஆடி | 2-10-20௳ | தைமீ | 1-2-3-11-17௳ |
| ஆவணிமீ | 2-9-28௳ | மாசிமீ | 15-16-17௳ |
| புரட்டாசிமீ | 16-29௳ | பங்குனிமீ | 6-15-19௳ |
| ஐப்பசிமீ | 6-20௳ | ஆக மாதம் 12-க்கு கரிநாள் 34. | |

சிலர் கார்த்திகைமீ முதற் சோமவாரம் நீக்கி ஐப்பசி மாதம் 22௳யாகக் கொள்வர். மேற்சொன்ன தேதிகளின் பகலும், அதற்குப் பூர்வத்தின் ராத்திரியும் சுபகாரியங்கள் செய்யலாகாது.

---

## கிழமை பிறந்த நாள்.

செங்கதிரோ னுதித்த நன்னாட் பரணியாகும்
செழுமதிக்குச் சித்திரை செவ்வா யுத்திராடம்
பொங்குபுத னவிட்டமென்பார் பொன்னிற் கேட்டை
புகர்பூரா டஞ்சனிரே வதியி னுளில்



மங்கையரை மணம்புணரில் விதவை யாவாள்
மனையெடுக்கிற் பாழாகும் வழி நடக்கார்
செங்கயற் கண்ணாள்சேர்மலடி யாவாள்
சிறுகுழந்தை பிறந்திடினும் மரணந்தானே. 141

இ-ள். ஞாயிறு—பரணி, திங்கள்—சித்திரை, செவ்வாய்—உத்திராடம், புதன்—அவிட்டம், வியாழம்—கேட்டை, வெள்ளி—பூராடம், சனி—ரேவதி இந்நாட்களில் திருக்கலியாணஞ்செய்யில்-பெண் விதவையாவாள், புது மனைகோலிற்-பாழாகும், ஊர்ப்பயணஞ் செய்யில-மரணமாம், நிஷேகமுகூர்த்தஞ்செய்யில்-மலடியாவாள், குழந்தைபிறந்தால்-இயமனுக்கிரையாகு மென்றவாறு.



## அக்கினி நாள்.

பரணி நட்சத்திரம் 4-ம் பாதத்தில் சூரியப் பிரவேசமாகிற நாழிகை தொடங்கி ரோகணி நட்சத்திரம் 2-ம் பாதத்தில் சூரியப் பிரவேசமாகிற நாழிகை வரையில் அக்கினி நக்ஷத்திர காலமாம், அந்த காலத்தில் மண், மரம், கல், கிரகம் முதலிய கருவிகள் செய்தால் கிரியை நஷ்டமும் கர்த்தாநாசமும் உண்டாம்.

வந்திக்கும் கதிர்க்குக் காடு மதிக்குச்சித் திரைசேய்க் காடி
புந்திக்கு விட்டம் பொன்மேற் கேட்டையாம் புகர்பூ ராடம்
சிந்திக்குஞ் சனிக்குத் தோணி கிழமைகள் பிறந்த நாளாம்
சிந்திக்குங் கருமமெல்லாந் தீமையாய் விளையும் மாதே. 142

இ-ள். ஞாயிறு—பரணி, திங்கள்—சித்திரை, செவ்வாய்—உத்திராடம், புதன்—அவிட்டம், வியாழம்—கேட்டை, வெள்ளி—பூராடம், சனி—ரேவதி நட்சத்திரம் வருவது கிழமைபிறந்தநாள். இந்நாட்களில் திருமணஞ்செய்யில் பெண் விதவையாவாள், புது மனைகோலிற்—பாழாகும், ஊர்ப்பிரயாணஞ்செய்யில்—மரணமாம், நிஷேகமுகூர்த்தஞ் செய்யில்—மலடியாவாள், குழந்தைபிறந்தால்-இயமனுக்கிரையாகு மென்றவாறு.



## காலற்றன உடலற்றன தலையற்றன நாள்

கார்த்திகையும் உத்திரமும் உத்திராடம்
காலற்ற நாளாகுங் கண்டுபாரு
சீர்த்திபுள மிருகசீரிடம விட்டஞ்
சித்திரையும் உடலற்ற நாளதாகும்
பூர்த்தியாம் விசாகமொடு பூரட்டாதி
புனர்பூசந் தலையற்ற நாளதாகும்
நேர்த்தியிலே மங்களமாங் காரியங்கள்
நீவிலக்கிச் செய்யெனவே நிகழ்த்தினோமே. 143

காலற்றன வுடலற்றன தலையற்றன நாளிற்
கோலக்குய மடவார்தமைக் கூடின்ம லடாவார்
மாவிட்டொரு மனைமாளிகை கோவினது பாழாம்
ஞாலத்தவர் வழிபோகினும் நலமெய்திடா ரவமே. 144

தலையற்றன வுடலற்றன தாளற்றன நாளில்
நிலைவைத்தவர் மனைகோபுரம் நீடும்பதி நாசம்
கலைகற்றவர் பிணியுற்றவர் கடுகிப் பயணத்தார்
வலையுற்றிடு மாறுருவர் மணஞ்செய்திடிற் பிணமே. 145

| கார்த்திகை | உத்தரம் | உத்தராடம் | காலற்றநாள் |
|---|---|---|---|
| மிருகசீரிடம் | சித்திரை | அவிட்டம் | உடலற்றநாள் |
| புனர்பூசம் | விசாகம் | பூரட்டாதி | தலையற்றநாள் |

இ-ள். இந்நாட்களில் மனைகோலில்—மனைபாழாம், பெண்திர ட்சியானல்—மலடாம், பயணமானல்—உயிர்போம், விவாகம்செய் யில் அப்பெண் விதவையாம், ஆகையால் இந்த நாட்களைக்குறித்து கற்றுணர்ந்த பெரியோர்கள் இனி எந்த நாலிலாவது இதற்குச் சமாதானமாகச் சொல்லி இந்த விதியைத் தவிழ்த்து நடாத்துவா ராயின் நாசகாலந்தவராது, எப்படி இருந்தாலும் இந்த நாட்களை நீக்கி மற்ற பரணி, அசுவனி, ரோகணி, திருவாதிரை, பூசம், ஆயி லியம், மகம், பூரம், அஸ்தம், சுவாதி, அநுஷம், கேட்டை, மூலம், பூராடம், திருவோணம், சதயம், உத்தரட்டாதி, ரேவதி, இப்பதி

னெட்டு நாளும் முழுநாளானதால் இந்நாட்களில் அவரவர்களுக்குப் பொருந்தியநாளை வைத்து மனைகோலவும், சுபகாரியங்கள் செய்யவும் உத்தமம், எ-று.

## ஒருகண் இருகண் நாளறிய.

கல்லதோர் வியாழம் வெள்ளி கற்புத விருகண்ணாகும்
வல்லதோ ரிரவி திங்கள் வருமொரு கண்ணதாகும்
கல்லவே சுபமுகூர்த்தங் கருணையாய்ச் செயவா யென்று
சொல்லினா ருமைக்கு யீசன் சுகமுளநாவி தென்றே. 146

இ-ள். குருவாரம், சுக்கிரவாரம், புதவாரம் இந்த மூன்று நாளும்—இருகண்ணுள்ள நாள், ஆதிவாரம், சோமவாரம் இந்த இரண்டு நாளும்—ஒருகண்ணுள்ள நாள், இந்நாட்களில் இருகண்ணுள்ள நாளே விசேடம். அந்நாட்களில் சுபகாரியங்கள் செய்யலாமென்று பரமசிவன் பார்வதிக்கு உபதேசித்தார். ஆகையால் நாளும் கோளும் நட்சத்திரமும் பார்த்து சுபகாரியங்கள் செய்ய உத்தமம்.

## நேத்திர நாள் பொருத்தம்.

முன்பத்தி லாதிவாரம் முகூர்த்தமிட் டாய்ந்துணர்ந்து
அன்புடன் முதனாட்கூட்டி யடைவிலே யெண்ணி நீக்கி
யொன்பது மொருகண்ணாறு முற்றபன் னிரண்டு கண்ணும்
பின்புற வாறுநாளும் கண்ணில பிரித்துப் பாரே. 147

இ-ள். ஞாயிற்றுக்கிழமையை முகூர்த்தமாகவைத்து அசுபதி முதலாக யெண்ணி நீக்கி நின்ற பாகத்தை அடைவிலே யெண்ண ஒன்பது வந்தால்—ஒருகண், பனிரண்டுக்குட்பட்டால்—இரண்டு கண், ஆறுக்குட்பட்டால்—குருடென்று சொல்வது. ஆகையால் இவ்விதியை யுணர்ந்து குருட்டுநாள் ஒருகண்ணுள்ள நாளை நீக்கி மற்ற நாட்களைக் கொள்ளவும், எ-று.

## குருட்டு நாளறிய

மற்றதோர் சனிசெவ் வாய்கள் வந்திடு மிரண்டு நாளும்
குற்றமே யுள்ளதாங் குருட்டுநா ளிதுவே யாகும்
நற்றமிழ் தேர்ந்தோ ரின்னாள் நல்லதோர் சுபமுகூர்த்தம்
உற்றபேர் செய்ய மாட்டா ரொருகண்ணு மில்லா நாளே.

இ-ள். சனிவாரம், மங்கலவாரம் இந்த இரண்டுநாளும்—குருட்டுநாளென்பதாம், இந்நாட்களில் கணிதமுணர்ந்த மேலோர்கள் சுபமுகூர்த்தஞ் செய்யமாட்டார்களென்பதாம், எ-று.

---

## சூரியன்பார்வை நாள்.

மேதகு கதிரோன் நின்ற நாளுமற் றதன்மேன் மூன்றுங்
கோதறு பின்னின் மூன்றுங் குருட்டுநா ளென்று கொள்க
ஓதிய வதற்குப் பின்முன் னான்குநா ளொருகண் காணும்
ஏதமில் நின்ற நாட்க ளிருகண் ணுண்டருக்கற் கென்றே.

இ-ள். சூரியன் நின்ற நாளுக்கு—முன் மூன்று பின் மூன்று நாட்களும் குருட்டு நாளாம், அதற்கு முன் நான்கு பின் நான்கு நாட்களும்—ஒருகண் பார்வையுள்ள நாட்களாம், மற்ற நாட்கள் இருகண் பார்வையுள்ளனவாம், எ-று.

---

## சந்திரன்பார்வை நாள்.

அருக்கனர் கிழமை யாதி சென்றவக் கிழமை யாய்ந்து
பெருக்கிமூன் றதனின் பேற்றை மாமுதற் கழித்துப்பின்னை
இருக்குநா ளொன்பா னோர்கண் பன்னிரண் டிருகண் காணும்
தருக்கிலாப் பின்னா ளாறுங் குருட்டுநாட் சந்திரற்கே. 150

இ-ள். ஞாயிற்றுக்கிழமை முதல் அன்றையவரையில் சென்ற கிழமையை மூன்றிற் பெருக்கி வந்த தொகையை அசுவனி முதலாகக் கழித்து நின்ற நட்சத்திரத்தில் ஒன்பது நட்சத்திரம்—சந்திர

னுக்கு ஒருகண் பார்வையுடைய நாளென்றும், அதற்குமேல் பனி ரண்டு நட்சத்திரம்—இருகண் பார்வையுடைய நாளென்றும், அத ற்குமேல் ஆறு நட்சத்திரம்—குருட்டு நாளென்றும் அறிந்து கொள்க, எ-று.

## பக்ஷப்பார்வை நாள்.

சந்தித்த பிற்பக்கத்தின் றசமிவிட் டதன்பின் னைந்தும்
மூந்துற்ற வாதி நான்குங் குருடுபின் னொருமூன் றோர்கண்
பிந்தியவாறுங் காணும் பின்னின்மூன் றிருகண் தானும்
சிந்தித்த வாறுங் காணும் செப்புமூன் றிருகண் காணே.

| | | |
|---|---|---|
| பூர்வ-பிரதமை திதி | பூர்வ-பஞ்சமி | பூர்வ - அஷ்டமி |
| துதிகை | சஷ்டி | நவமி |
| திரிதிகை | சப்தமி | தசமி |
| சதுர்த்தி | சதுர்த்தசி | ஏகாதசி |
| அமர - ஏகாதசி | பௌர்ணமி | துவாதசி |
| துவாதசி | அமர-பிரதமை | திரயோதசி |
| திரயோதசி | அஷ்டமி | அமர - துதிகை |
| சதுர்த்தசி | நவமி | திரிதிகை |
| அமாவாசை | தசமி | சதுர்த்தி |
| இவை-9-ம்குருட் (நாள் | இவை-9-ம் ஒருகண் (நாள் | பஞ்சமி |
| | | சஷ்டி |
| | | சப்தமி |
| | | இவை-12-ம் இருகண் |

இ-ள், பூர்வபக்ஷத்துப் பிரதமை முதல் நான்கு திதிகளும், அமரபக்ஷத்து ஏகாதசி முதல் ஐந்து திதிகளும்—குருட்டுத் திதிக ளாம், பூர்வபக்ஷத்துப் பஞ்சமி முதல் மூன்று திதிகளும், சதுர்த் தசியும், பூரணையும், அமர பக்கத்துப் பிரதமையும் அஷ்டமி முதல்

மூன்று திதிகளும்—ஒரு கண்ணுள்ளவைகளாம். பூர்வபக்ஷத்து அஷ்டமி முதல் ஆறு திதிகளும், அமரபக்ஷத்து திதியை முதல் ஆறு திதிகளும்—இருகண்ணுள்ளனவாம், எ-று.

ஒருகண்ணுண் டெனினுந் திங்கட் குத்தமங் கதிரோற் காகா
இருகண்ணுண் டாறைப்பக்கம் யாவர்க்கு மின்ப மெய்தும்
இருகண்ணு மில்லாநாளி லியற்றிய கருமமெல்லாம்
விரவிய சுற்றந்தோடுங் கெடுமென விளம்பினாரே. 152

இ-ள். சந்திரனுக்கு ஒருகண்ணிருந்தாலும் உத்தமம், சூரியனுக்கு ஒருகண்ணிருந்தாலும் ஆகாது. இரண்டுகண்ணுள்ள நாட்களில் சுபகாரியஞ் செய்யலாம், எ-று.

விளம்பிய மேடங் குண்டை வீணைமாஞ் கடகம் வில்லும்
இளம்பிறை தனத மாறும் இரவுகண் காணு மென்க
கொளுந்திடு மரிகோல் கன்னி குடங்கயல் தேளு மெல்ல
வளம்படு மருக்கன் கூறுப் பகல்விழி யுடைய மன்றே. 153

இ-ள். மேடம், ரிஷபம், மிதுனம், மகரம், கடகம், தனுசு, இவவாறும் சந்திரன்கூடும். இதுக்கு இரவு கண்விழிப்பு, சிங்கம், துலாம், கன்னி, கும்பம், மீனம், விருச்சிகம், இவ்வாறு சூரியன் கூடும். இதுக்கு பகல், கண்விழிப்பாம், எ-று.

---

## முகநிவைக்க நாள், ஏறும் நாள், இரங்கும் நாள், முகட்டு நாள்.

இலிங்கதா பரங்கள் போலே இணைந்தமூ வரையுங்கீறி
விலங்குபோ லரை நால்கீற மேலது முகட்டு நாளாம்
குலுங்குமா விரங்கு நாளிற் கோபுரம் மாடகூடம்
துலங்குமன் மனையெடுக்கிற் றுக்கமா யிடிந்து போமே. 154

இ-ள். லிங்கதாபரம் போலே மூன்றுவரைகீறி முருக்கே நாலுவரைகீற மூன்றுலிங்க சொரூபமாகும். அடிவரை முதலாக அசுவனி தொட்டு எண்ணிற் சரியாக 2(—நட்சத்திரங்களும் பொருந்தும். அதில் ஏறிவரும் நாளில் மனைமாடகூடம் அம்பலம்

கோயில எடுக்க நன்றாம். இறங்குநாளில் கோபுரம் ஆலயம் மாட கூடம் பனியெடுக்க இடிந்து பாழாகும். முகட்டுநாளில் முகடு யர்த்த நன்றாம், எ-று.

| | மி | | | சித் | | | அவி | |
|---|---|---|---|---|---|---|---|---|
| ரோக | | திரு | அஸ் | | சுவா | திரு | | சத |
| கார்த் | | புனர் | உத்தி | | விசா | உத் | | பூர |
| பரணி | | பூசம் | பூரா | | அனு | பூரா | | உத் |
| அசுவ | | ஆயிலி | மகம் | | கேட் | மூல | | ரேவ |

முன்னாளும் நவந்தசமே பதினெட்டோடு
மூலமுடன் ரேவதியுங் கடைசியாகும்
சொன்னரே காலகயிறு வாழாநாசம்
அத்தியமாவ குறவருகயி முறையக்கேளு
பன்னாக ரெண்டுதிசை பூரமாகும்
பன்னேழு இருபதோ டிருபத்தாறு
பின்னவள் மலடியென அறிவநாகப்
பேசுவீர் நிசமாக உலகத்தே 155

மீதான திரியேழு ராசியாக
மிக்கசோ டசமூழு வேழுதோடு
சூதான வையைந்தும் வயிற்றுப்பிள்ளை
சுகமில்லை சாலாகுங் கழுத்திற்கேளு
வாதான சதுரமொடு கன்னியத்தம்
மருவுபக்கந் தன்னிலு மூவேழொன்றும்
ஈதான அறுநான்கும் கொழுநன்சாவு
எண்ணிலதும் புகழாக இயம்பினீரே. 156

## பாடாவரி நாள்.

வீடா லயந்தேரும் விக்கிரகந் தோணிசந்தை
பாடா வரிநாளிற் பாழாகும்—நாடுங்கால்
சோதி முதலைந்தும் சோணை முதல்நான்கும்
ஆதிமுதல் மூன்றும் அறி. 156

சுவாதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம் ஆ 5-ம்
திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி ஆ 4-ம்
அசுவனி, பரணி, கார்த்திகை ஆ 3-ம்

இந்தப் பனிரண்டு நட்சத்திரமும் பாடாவரி நாளென்னப் படும். இதில் சுபகாரியஞ் செய்யலாகாது.

## இந்நாளில் மனைகோலும் பலன்.

கொச்சகம்,

அஞ்சு மகமும் அனுடமொரு மூன்று நவம்
மிஞ்சுகார்த் திகையுமிக்க மேவெண்ணும் ரோகணியும்
நஞ்சுநான் குத்தரமிந் நாளில்மனை கோலுமவர்
அஞ்சுவரவ் வாண்டிக்குள் துய்யமயன் சொல்லிதுவே. 157

இ-ள், பஞ்சமியும், மகமும், திருதிகையும், அனுஷமும், நவமி யும், கார்த்திகையும், அஷ்டமியும், ரோகணியும், சதுர்த்தியும் உத் தரமும் கூடின நாளில் மனைகோலில் அந்த வருஷம் முடிவதற்குள் மனைக்குடையவர் மரணமடைவார், எ-று.

## மேல்நோக்கு நாள்.

ஓண மாதிரை பூசமூ ரோகணி
யேண முத்திர மூன்று சதையமே
ஆண மான அவிட்டமோ டொன்பதும்
நாண மின்றிமேல் நோக்கிய நாட்களே. 158

இ-ள். திருவோணம், திருவாதிரை, பூசம், ரோகணி, உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி, சதையம்,அவிட்டம், இவ்வொன்பதும் மேல்நோக்கிய நாளென்னும் ஊர்த்தமுக நட்சத்திரம், இந்த நட்சத்திரத்தில் மா, பலா, வாழை, கமுகு, தென்னை, பனை, நெல் வரகு, கேழ்வரகு, கம்பு, சோளம், கடலை, துவரை, ஆமணக்கு முதலாகிய மேல்முகப் பயிர்கள்செய்வது மன்றி, ஏர்வைக்க, கொடிமரம், மதில், வாசற்படி, வீதி, யானை, குதிரை யேறுதல், கொட்டாரம், பந்தல், சாலை, சோலை, தோட்டம், கிரயம், விற்கிரயம், வியாபாரம், இராஜதரிசனம், பட்டாபிஷேகம், மாடமாளிகை, கூடகோபுரம், மெத்தை வீடுகள் கட்டவும், கிரகப்பிரவேசம், உத்தியோகஞ் செய்யவும், ஆபரணம் வாங்கவும் இவை முதலியது செய்ய உத்தமம்.

---

## பக்கநோக்கு நாள்.

போத மாம்படர் நாட்சோதி சித்திரை
பேத மின்றிய அசுவனி மான்றலை
ஆதி யஸ்தம் அனுஷமும் ரேவதி
நீதி நற்புனர் பூசமுவ கேட்டைமே. 159

இ-ள். சுவாதி, சித்திரை, அசுவனி, மிருகசிரிடம், அஸ்தம், அனுஷம், ரேவதி, புனர்பூசம், கேட்டை இவ்வொன்பதும் பக்கநோக்கிய நாளென்னும் புறமுக நட்சத்திரம். இந்நட்சத்திரத்தில் சுவர்வைக்க நிலம்வாங்கிப் பயிரிட பூசினி, பாகல், அவரை முதலாகிய கொடிவகைப் பயிர்களும் பட்சிகள் வளர்க்க, கன்றுகாலிவாங்க, கொட்டாரங்கட்ட, யாத்திரைபோக, யானை, குதிரை,கழுதை, ஒட்டகம், பசு, எருமை, மாடு, ஆடு முதலிய நாலுகால் ஜீவன்களும், பலவித வண்டிகளும் கிரயம் வாஙகுதல், மேய்க்குதல், ஏத்தம், உழவு, விதை விதைக்க, கால்வாய்வெட்ட, வாசற்கால், தூண் முதலியது நாட்டுதல் இவை யாரம்பிக்க உத்தமம், எ-று.

---

# கீழ்நோக்கு நாள்.

பரணி கார்த்திகை பாம்பும் விசாகமும்
முரணி முப்பூரம் மூலம் மகத்தொடு
தரணி மீதினிற் றுனிவை யொன்பதும்
கிரண மன்னிய கீழ்நோக்கும் நாட்களே. 160

இ-ள் பரணி, கார்த்திகை, ஆயிலியம், விசாகம், பூரம், பூராடம், பூரட்டாதி, மூலம், மகம், இவ்வொன்பதும் கீழ்நோக்கிய நாளென்னும், அதோமுக நட்சத்திரம். இந்த நட்சத்திரத்தில் நிட்சேபம் வைக்கவும், வித்தை கற்கவும், வெற்றிலைவள்ளி, சிறுவள்ளி, ஆள்வல்லி, கருணை, உருளை, சேம்பு முதலாகிய கிழங்குவகைச் செடிகளும், வெங்காயம், வெள்ளைப்பூண்டு முதலாகிய பூண்டுவகைப் பயிர்களும், மஞ்சள், இஞ்சி முதலிய வேர் வகைகளும், குளம், கிணறு, புதையல், களஞ்சியம், வேலி, சொக்கட்டான் தானியவகை வைக்கவும், சங்குஸ்தாபனம், கிரகப்பிரவேசம், கணிதம், ஆரம்பிக்கவும், இவைகளில் முதற்சாமம்—உத்தமம், 2-ம் சாமம்—சந்தோஷம், 3-ம் சாமம்—மத்திமம், 4-ம் சாமம்—அதமம் உத்தமம், என்றவாறு.

---

# விஷ்டிதோஷ மறிய.

மன்னுமுதற் சதுர்த்தியினி லேந்தாஞ் சாமம்
மருவியவட் டமியிரண்டு பன்னொன்றேழாம்
முன்னிலுவா நாற்சாமம் பிற்பக் கத்தின்
மூன்றிலிரு மூன்றேழில் மூன்றுஞ் சாமம்
பன்னியபிற் பத்தினிலே யெட்டாஞ் சாமம்
பதினொன்கின் முதற்சாமம் பகர்ந்த விஷ்டி
இன்னதனை யச்சாம மென்று மற்றை
யிரவிமுதற் றிசைகள்தீ தென்று மாமே. 161

| | | | |
|---|---|---|---|
| பூர்வபக்ஷச் | சதுர்த்தசியில் | 5-ம் சாமம் | மேற்கிலேயும் |
| | அஷ்டமியில் | 2-ம் சாமம் | தென்கிழக்கிலேயும் |
| | ஏகாதசியில் | 7-ம் சாமம் | வடக்கிலேயும், |
| | பூரணையில் | 4-ம் சாமம் | தென்மேற்கிலேயும் |
| அமரபக்ஷத் | திரிதிகையில் | 6-ம் சாமம் | வடமேற்கிலேயும் |
| | சப்தமியில் | 3-ம் சாமம் | தெற்கிலேயும் |
| | தசமியில் | 8-ம் சாமம் | வடகிழக்கிலேயும் |
| | சதுர்த்தசியில் | 1-ம் சாமம் | கிழக்கிலேயும் |

விஷ்டியுண்ணுதலால் இச்சாமங்களில் சுபகாரியங்களும் இத்திசையில் யாத்திரையுஞ் செய்யலாகாது

## பஞ்சகோள் நின்ற தோஷம்.

சூரியன் நின்ற நட்சத்திரத்திற்கு 7-ம் நக்ஷத்திரம் உற்பாதமென்றும், 10—ம் நக்ஷத்திரம், தாரகமென்றும். 15—நக்ஷத்திரம், பிரமதண்டமென்றும், 21—ம் நக்ஷத்திரம் காலனென்றும்பெயராம்.

செவ்வாய் நின்ற நக்ஷத்திரததிற்கு 7—ம் நக்ஷத்திரம் சூலமென்றும், 10—ம் நக்ஷத்திரம் சக்கரமென்றும், 15—ம் நட்சத்திரம் கண்டமென்றும், 21—ம் நக்ஷத்திரம் காலனென்றும் பெயராம்.

புதன் நின்ற நட்சத்திரற்கு 8—ம் நக்ஷத்திரமும் 18—ம் நக்ஷத்திரமும் 24—ம் நட்சத்திரமும் கண்டமென்று பெயராம்.

சுக்கிரன் நின்ற நட்சத்திரத்திற்கு 7—ம் நட்சத்திரமும் 9— நட்சத்திரமும், வியாழன் நின்ற நட்சத்திரத்திற்கு 7—ம் நட்சத்திரமும், 9—ம் நட்சத்திரமும் கொடுமையென்றும் பெயராம்.

சனி நின்ற நட்சத்திரத்திற்கு 5—ம் நட்சத்திரமும் 6—ம் நட்சத்திரமும், 10—ம் நட்சத்திரமும், 11—ம் நட்சத்திரமும், 20—ம் நட்சத்திரமும் பந்தமென்றும் பெயராம்,

இராகு கேது நின்ற நட்சத்திரங்களுக்கு 7—ம் நட்சத்திரம் பரிகமென்றும் பெயராம், இவை ஆகாவாம்.

## வாஸ்து புருஷன் சயன லட்சணம்.

மீனமும் ஆடும் ஏறும் மேற்றிசை தலையதாகி
ஊனமற் றிடக்கை கீழாய் உத்தர திசையை நோக்கி
சேனைவா சவன்றன் மேலே திசைபெறக் காலை நீட்டி
மானெனும் விழியாய் கேளாய் வாஸ்துதான் கிடக்கும் வாறே. 162

இ-ள். மீனமாதமாகிய பங்குனி மாதம்—வடகிழக்குத் திசையாகிய மீனத்திற் கால் நீட்டித் தென்மேற்குத் திசையாகிய கன்னியில் தலைவைத்து அதோ முகமாகவும், மேஷ மாதமாகிய சித்திரை மாதம்—கிழக்குத் திசையாகிய மேஷத்திற் கால்நீட்டி மேற்குத் திசையாகிய துலாராசியில் தலைவைத்து இடக்கை தலையின் கீழ் வைத்து வடக்குமுகமாகவும், ரிஷபமாதமாகிய வைகாசிமாதம்-கிழக்குத் திசையாகிய ரிஷபத்திற் கால்நீட்டி மேற்குத் திசையாகிய விருச்சிகத்தில் தலைவைத்து வலக்கை தலையின்கீழ் வைத்து மேன்முகமாகவும் வாஸ்து புருஷன் சயனித்திருப்பன், எ-று.

தண்டொடு நண்டு சிங்கம் தலையது வடக்கே வைத்து
எண்டிசை யிடக்கை கீழாய் வலக்கைதன் மேலதாகில்
திண்டிற லியமன் மேலே திசைபெறக் காலை நீட்டி
வண்டணி குழலினளே வாஸ்துவுங் கிடக்கும் வாறே. 163

இ-ள். மிதுன மாதமாகிய ஆனிமாதம்—தென்கீழ்திசையாகிய மிதுனத்திற் கால்நீட்டி வடமேற்குத் திசையாகிய தனுசில் தலைவைத்து அதோ முகமாகவும், கற்கடக மாதமாகிய—ஆடிமாதம் தென் திசையாகிய கற்கடகத்திற் கால்நீட்டி வடதிசையாகிய மகரத்தில் தலைவைத்து இடக்கை தலையின்கீழ் வைத்துக் கிழக்கு முகமாகவும், சிங்கமாதமாகிய ஆவணி மாதம்—தென்திசையாகிய சிங்கத்திற் கால்நீட்டி, வடதிசையாகிய கும்பத்தில் தலைவைத்து வலக்கை தலையின்கீழ் வைத்து மேன் முகமாகவும், வாஸ்து புருஷன் சயனித்திருப்பன், எ-று.

கன்னியுந் துலாமுந் தேளுங் கதிர்முடி திசையில் வைத்து
மன்னிய வருணன் மேலே மகிழ்பெறக் காலை நீட்டி
இன்னிசை யிடக்கை கீழா யியமன்றன் றிசையை நோக்கி
வன்னமா மாதே கேளாய் வாஸ்துதான் கிடக்கும் வாறே. 164

இ-ள். கன்னி மாதமாகிய புரட்டாசிமாதம் தென்மேற் றிசையாகிய கன்னியிற் கால்நீட்டி கீழ்த்திசையாகிய மீனத்தில் தலையை வைத்து அதோமுகமாகவும், துலாமாதமாகிய ஐப்பசிமாதம்—மேற்குத் திசையாகிய துலாத்திற் கால்நீட்டிக் கீழ்த்திசையாகிய மேஷத்தில் தலைவைத்து இடக்கை தலையின்கீழ் வைத்துத் தெற்குமுகமாகவும், விருச்சிக மாதமாகிய கார்த்திகைமாதம்—மேற்குத் திசையாகிய விருச்சிகத்திற் கால்நீட்டிக் கீழ்த்திசையாகிய ரிஷபத்தில் தலைவைத்து வலக்கை தலையின்கீழ் வைத்து மேன்முகமாகவும் வாஸ்து புருஷன் சயனித்திருப்பன், எ-று.

தனுசொடு மகரங் கும்பந் தலையது மேற்கே வைத்து
அனுவொடு விடக்கை கீழாய் வலக்கை தன்மேல தாகில்
மனமொடு முகமும் மேற்கு வடக்கினிற் காலை நீட்டி
வனமுலை மாதே கேளாய் வாஸ்துவுங் கிடக்கும் வாறே. 165

இ-ள். தனுசு மாதமாகிய மார்கழிமாதம்—வடமேற் றிசையாகிய தனுசிற் கால்நீட்டித் தென்கீழ்த் திசையாகிய மிதுனத்தில் தலைவைத்து அதோ முகமாகவும், மகர மாதமாகிய தைமாதம்—வடதிசையாகிய மகரத்திற் கால்நீட்டித் தென் திசையாகிய கற்கடகத்தில் தலைவைத்து இடக்கை தலையின்கீழ் வைத்து மேற்கு முகமாகவும்,கும்பமாதமாகிய மாசிமாதம்—வடதிசையாகிய கும்பத்திற் கால்நீட்டித் தென் திசையாகிய சிங்கத்தில் தலைவைத்து வலக்கை தலையின்கீழ் வைத்து மேன் முகமாகவும் வாஸ்துபுருஷன் சயனித்திருப்பன், எ-று.

திங்களோ ராசி தன்னிற் சிறப்புடன் சிரசை வைத்துப்
பொங்கிய ராசிக் கேழாம் புகழுய ராசி தன்னிற்
றங்கிய காலை நீட்டிச் சகப்பிர திட்டையாக
மங்கையே சொல்லக் கேளாய் வாஸ்துதான் கிடக்கும் வாறே. 166

இ-ள். மாதம் ஒரு ராசியில்—சிரம்வைத்து அதற்கேழா மிராசியில்—காலைநீட்டி ஜெகப்பிர திஷ்டையாக வாஸ்து புருஷன்கிடப்பது, எ-று.

## வாஸ்துவின்கிடை.

எத்திசை யெனினும் பாம்பு இரவிதான் நிற்கும் ராசி
அத்திசை காலை நீட்டி யதற் கெதிர் தலையை வைத்து
உத்திடு மிடக்கை கீழா மோங்கிய வலக்கை மேலாய்
மைத்தடங் கண்ணி னளே வாஸ்துவின் கிடைய தாமே. 167

எங்கே மாதந் தானென்ற வி ராசி நிலைசள் தானறிந்து
அங்கே பாதந் தனைநீட்டி யதனுட் கெதிரே தலைவைத்து
பங்கே யிடக்கை கீழாகப் பகரும் வலக்கை மேலாக
மங்கே பூத லந்தனிலே வாஸ்து புருடன் கிடப்பதுவே. 168

இ-ள். ஆதித்தனென்னு மிராசியில் கால்வைத்து அதற்கேழா மிராசியில் சிரம்வைத்து இடக்கை கீழும் வலக்கை மேலுமாய் வாஸ்து புருஷன் கிடப்பது, எ-று.

வே று.

கிடப்பது மிடக்கை கீழாய் கிடந்தவ னெழுந்தி ருந்து
நடப்பது வலமே யாகில் நல்லதோ ரிராசி தோறும்
படுக்கையால் வயிறு பார்த்துப் பரிவுடன் வாசல்தன்னை
விடுப்பது மில்லையாகில் வேதனை சூழு மென்றே. 169

இ-ள். இடக்கை கீழும் வலக்கை மேலுமாய்க் கிடந்தவனெழுந் திருந்து வலமாகில் படுக்கை வயிறறிந்து வாசற்காலா விட்டால் வேதனையினாலே வாவெவா ரென்றவாறு.

வாத்துவின் கிடையறிந்து மனைதனைக் கோலானுகிற்
சித்தவிற் பொருளுங் கேடாஞ் செய்தவ மனைத்தும்பாழாம்
ஏத்திய மனையினுள்ளே யிருந்திடும் பெரிய நோய்தான்
மூத்தன யகியாள்சேர்வள் முனியையுந் தொடரும்நோயே.

இ-ள். வாஸ்து புருஷன் இலட்சணமறிந்து மனைகோலாவிடிற் பொருளழிவும், உயிர்ச்சேதமும், மூதேவி வாசமும், எஜமான் பெண்டு பிள்ளைகளோடு வியாதியால் மெலிதலுமல்லாமல் அம் மனைகோலிய சிற்பனும் நோயால் மெலிவன், எ-று.

வாத்துபுருடன்விழிநோக்கில் மனைக்குமுகூர்த்தஞ்செயவேண்டிற்
பாத்துமனையை நாலேழாய்ப் பகுத்துகாலிற்பதினேழுஞ்
சாத்துந் தலையி லீரைந்துந் தள்ளிநடுவி லொருபங்கு
ஏத்தமாக முகூர்த்தமிட விராஜசம்பத்துண்டாமே. 171

இ-ள். வாஸ்துவின் விழிநோக்கறிந்து முகூர்த்தஞ் செய்யும்போது அந்த மனையை இருபத்தெட்டு பாகஞ்செய்து காலில் பதினேழுபாகமும், தலையிற்பத்துபாகமும்தள்ளி நடுவிலொரு பாகத்தில் முகூர்த்தஞ் செய்தால் இராஜ சம்பத்துண்டாகும், எ-று.

மேய வாஸ்து விரும்பிய நிலையன்றித்
தூய மாமனை தொடங்கி யெடுத்திடில்
நேய பன்னியும் நிறைந்த கணவனும்
ஆய்மு கூர்த்தம் வைத்தவனுஞ் சாவனே. 172

இ-ள். வாஸ்து நிதானமறிந்து மனைகோலாவிடில் எஜமானும் மனைவியும் முகூர்த்தம் வைத்த சிற்பனும் இறப்பர், எ-று.

சாமது நிட்சயந் தன்மனை கோல்பவன்
பூமலர் வாஸ்து புருடன்முன் சென்றிடத்
தாமுறு பகைவராற் சடிதியின் மாய்ந்திடும்
சேமவெண் குட்டஞ் சேருமு டம்பிலே. 173

இ-ள். வாஸ்து நிதானமறிந்து மனைகோலாவிடில் சத்துரு பகையும் ரோகமும் உடம்பிற் சேரும், எ-று.

---

## வாஸ்து நித்திரைவிட்டெழுமாதம்.

சித்திரைவை காசி யாடி சிறந்தவா வணியி னோடு
வைத்தவைப் பசியும் மிக்க மன்னுகார்த் திகையுந் தானும்
மத்தனை மாதத்தோடு மாசிதா னெட்டு மாதம்
புத்தியான் மனைகள் கோலப் புகழுடன் நன்மையாமே. 174

இ-ள். சித்திரை, வைகாசி, ஆடி, ஆவணி, ஐப்பசி, கார்த்திகை, தை, மாசி, இவ்வெட்டு மாதமும், வாஸ்து எழுந்திருப்பதி

னல் இம்மாதங்களில் மனைகோலினல் சகல சம்பத்து முண்டாகும் அதனுள் விசேஷம்—வைகாசி, ஆவணி, கார்த்திகை, மாசி, இந்நான்கு மாதங்களில் மனைகோல நன்மையாம்.

---

## ௸ மாதங்களின் தெய்தி.

கிடந்த மேட மொருபத்து கிளரும் விடையோன் மூவேழு
அடங்கோல் கடகம் பதினென்று அரிதாறு தேளெட்டு
குடந்தா னிருபதேயாகுங் கூறும் மகரம் பனிரண்டு
இடந்தா னெடுக்கவேணுமென்று மெல்லாத்திசையும் நல்லோரே

இ-ள். சித்திரைமாதம்—பத்தாந் தேதி, வைகாசி—இருபத்தோராந் தேதி, ஆடி—பதினோராந் தேதி, ஆவணி—ஆறாந்தேதி, கார்த்திகை—எட்டாந் தேதி, தை—பனிரண்டாந் தேதி, மாசி—இருபதாந் தேதி, இந்நாட்களில் வாஸ்து புருஷன் எழுந்திருப்பன் அப்போது மனையெடுக்க உத்தமம், சிலசிற்பிகள் கருத்து, இவ்வெட்டு மாதங்களினும் சிறந்த மாதங்கள் நான்காம். அதாவது வைகாசி, ஆவணி, கார்த்திகை, மாசி மாதங்களாம், எ-று.

---

## வாஸ்து எழுந்திருக்கும் நாழிகை.

குண்டமான் குடங்களெட்டு கொடிய தேள்பத்த தாகும்
நண்டுகோ விரண்டதாகும் நன்மேட மஞ்சதாகும்
திண்டிறு சிங்கந்தன்னிற் சிறந்தமூ வேழ தாகும்
மண்டல மறையோன் சொன்ன வாஸ்தெழும் நாடிதானே. 176

இ-ள். வைகாசி, தை, மாசி இம்மாதங்களில் எட்டு நாழிகை. கார்திகை மாதம்—பத்துநாழிகை, ஆடி மாதம் ஐப்பசி மாதம்—இரண்டுநாழிகை, சித்திரை மாதம்—அஞ்சு நாழிகை, ஆவணி மாதம்—இருபத்தொரு நாழிகை வாஸ்து எழுந்திருக்கும் நாழிகை.

---

## வாஸ்து நித்திரைசெய்யுங் காலம்.

மிக்கதோ ரானிபுரட் டாசி கூனி
 விரும்பு தெய்வ மார்கழிமா தங்கள் நான்கில்
தக்கதோர் வாஸ்துநித் திரைசெய் காலம்
 தானதிலே மனைத்தச்சு செய்யலாகா
பக்கமுள்ள வீடுகுடி புகவு மாகா
 பார்தனிலே வாழ்பவர்க ளிதனைப் பார்த்து
இக்கனமா தங்கள்தள்ளி யுறக்கம் விட்டே
 யெழுங்காலம் மனைக்கோல்கள் செய்ய நன்றே. 177

இ-ள். ஆனி, புரட்டாசி, பங்குனி, மார்கழி, இந்நான்குமாதமும், வாஸ்து புருஷன் நித்திரைசெய்யுங் காலமானதால் இம்மாதங்களில் மனைகோல லாகாது. குடிபுகவுமாகாது, வையகம் வாழ்பவர் மீறிச்செய்வரேல் பொருளழிவும், உயிர்ச்சேதமும், அம்மனையில் மூதேவி வாசமும், எஜமான் பெண்பிள்ளைகளோடு வியாதியால் மெலிதலும் அல்லாமல் அம்மனைகோலிய சிற்பனும் நோயால் மெலிகுவன், எ-று.

---

## வாஸ்து நித்திரைவிட்டெழுங் காலம்.

### மாதந் தேதி நாழிகையறிய.

சித்திரைமா தம்பத்துத் தேதி தன்னிற்
 சிறந்த நாழிகை யைந்திற் றெளிவ தாகும்
மத்ததொரு வைகாசி யிருபத் தொன்றில்
 வருமெட்டு நாழிகையில் விழிப்பதாகும்
சத்தியா யாடி யைப்பசி யிலுந்தான்
 தக்க பன்னோர் தேதியில்நா ழிகையிரண்டாம்
பத்தியா யாவணியி லாறுந் தெய்தி
 பகரிருபத் தொன்றின்மேல் விழிப்பான் பாரே. 178

இ-ள். வாஸ்து புருஷன் நித்திரைவிட்டெழுங்காலமும், மாதந் தேதி நாழிகைக ளறியும்படி, சித்திரைமீ 10உ ஐந்துநாழிகைக்கு

மேலும், வைகாசிமீ 21உ எட்டுநாழிகைக்குமேலும், ஆடிமீ 11உ ஐப்பசிமீ 11உயிலும் இரண்டு நாழிகைக்கு மேலும், ஆவணிமீ 6உ இருபத்தொரு நாழிகைக்கு மேலும், எ-று.

கார்த்திகைமா தந்தனிலே யெட்டாந் தேதி
கருத்தாய்ப்பார் நாழிகையும் பத்ததாகும்
சீர்த்தியுள்ள தைமாதம் பன்னி ரண்டாந்
தேதியதில் நாழிகையு மெட்டின் மேலாம்
ஆர்த்தியுள்ள கணிதவிதி மாசி மாதம்
அறிகுவா யிருபதாந் தேதி தன்னில்
பார்த்திபனே பகலெட்டு நாழிகைக்குப்
படுக்கைவிட் டெழுந்திருப்பன் வாஸ்துதானே. 179

இ-ள். கார்த்திகைமீ 8உ 10-நாழிகைக்கு மேலும், தைமீ 12உ 8-நாழிகைக்கு மேலும், மாசிமீ 20உ 8-நாழிகைக்கு மேலும் வாஸ்து புருஷன் படுக்கையைவிட்டு எழுந்திருப்பன், எ-று.

---

## வாஸ்து சமயத்தின் லட்சணம்.

செய்ய வாஸ்துவுமு தற்கால் திறமுடன் விழித்து நோக்கித்
துய்யதோர் கடிகை மூன்று அரிதமுக் காலுக் குள்ளே
உய்யவே முதலாம் வேளையு கந்ததோர் கடிகை முக்கால்
கையவே தந்த சுத்தி ராஜராற் பயமுண் டாமே. 180

இ-ள். வாஸ்துவின் சமயத்தின் அதிகார லட்சணமாவது, நாழிகை மூன்றே முக்காலுக்குச் சமயம் ஐந்து—முதற்சமயம், கடிகை முக்காலுக்குள் தந்தசுத்தி செய்வன். அதில் முகூர்த்தஞ் செய்தால் அரசர்களாற் பயமுண்டாகும், எ-று.

ஏற்றிய விரண்டாம் வேளை யெழிலுயர் கடிகைமுக்கால்
போற்றிய ஸ்நானஞ் செய்வன் பொருந்திய பீடையுண்டாம்
சாற்றிய மூன்றாம் வேளை தக்கதோர் கடிகை முக்கால்
மாற்றிய பூசை செய்வன் வறுமையால் மெலிவரென்னே. 181

இ-ள். வாஸ்து இரண்டாஞ் சமயமாகிய கடிகை முக்காலுக்குள் ஸ்நானஞ் செய்வன். அதில் முகூர்த்தஞ் செய்தால் பீடையுண்டாம். மூன்றாஞ் சமயமாகிய கடிகை முக்காலுக்குள் பூசை செய்வன். அதில் முகூர்த்தஞ் செய்தால் வறுமையால் துன்பப்படுவர், என்றவாறு.

பெருகிய காலாம் வேளை பேருயர் கடிகை முக்கால்
அருமையா யசனஞ் செய்வன் அழகிய புதல்வ ருண்டாம்
திருவுறு மைந்தாம் வேளை சேர்ந்ததோர் கடிகை முக்கால்
மருவுதாம் பூலங் கொள்வன் மகிழ்ந்து வுத்தமமென்றோதே. 182

இ-ள். வாஸ்து காலாம் சமயமாகிய கடிகை முக்காலுக்குள் போஜனஞ் செய்வன் அதிலொரு முகூர்த்தஞ் செய்தால் புத்திர சந்தான முண்டாகும். ஐந்தாம் சமயமாகிய கடிகை முக்காலுக்குள் தாம்பூலங் கொள்வன், அதில் முகூர்த்தஞ் செய்தால் மகா உத்தமம், எ-று.

---

## வாசல் நிதானம்

காலதே வாச லாகிற் கருங்குழற் சாவு சொல்லும்
சாலவே தலைய தாகிற் றனவன் சாவு சொல்லும்
ஆலமாம் முதுகே யாகில் அரசராற் பயமுண்டாகும்
வாஸிதான் வயிற்றிற் கோவில் வன்பொருள் சேருந்தானே. 183

இ-ள். வாஸ்துவின் காலில் வாசல் விட்டால் மனையாள் மரணமாவள், தலையில் வாசல்விட்டால்—யஜமான் மரணமாவன், முதுகில் வாசல் விட்டால்—இராஜபய முண்டாகும். வயிற்றில் வாசல் விட்டால் சகல பாக்கியமும் உண்டாகும், எ-று.

---

## அற்றை நாள் வாஸ்து

## தலைவைத்துப் படுக்கும் நிலை.

வெண்பா

காலை வடக்காகும் கட்டுச்சி நேர் கிழக்குச்
சால வடிசாயிற் றென்தெற்கு—மாலைப்
பொழு தெல்லாம் மேற்காகும் பூமி தலையாகப்
பழுதில்லை வாஸ்துபடுப் பன். 184



## ஷை முகமாயிருக்கும் நிலை.

காலை கிழக்குமுகம் கட்டுச்சி தெற்குமுகம்
சாலவடி சாயிற் றென்மேற்காம் மாலை
வடக்கு முகமாக வாஸ்துசய னித்தே
அடக்க முடனிருப்ப னன்று. 185

இ-ள். வாஸ்துபுருஷன் தலைவைத்துப் படுக்குந் திசையின் விபரம்—காலையில்—வடக்கே—தலையும், தெற்கே—காலும், கிழக்குமுகமாய்க் கிடப்பன். அக்காலையில் கிழக்கு வாசல் விடவும், மத்தியானத்தில் கிழக்கே—தலையும், மேற்கே—காலும், தெற்கு முகமாய்க் கிடப்பன், அவ்வேளை உச்சியானதால் தெற்குவாசல் விடவும். சூரியன் அடிப்பிரிந்து மேற்கே சாயுங்காலம், தெற்கே—தலையும், வடக்கே—காலும், மேற்குமுகமாய்க் கிடப்பன். சூரியன் சாயை அடிசாயுங்காலம் மேற்கு வாசல் விடவும். மாலையில் மேற்கே—தலையும், கிழக்கே—காலும், வடக்கு முகமாய்க் கிடப்பன். அவ்வேளை மாலைநேரமானதால் வடக்கு வாசல்விடவும் உத்தமம், எ-று.

## வாசல் வைக்கும் விதி

மன்றலார் மனையின் நீளம் வகுத்ததோர் வாசல் தன்னை
ஒன்பது கூறுசெய்து வொருமூன்று மிடத்தே போக்கி
நின்றதோர் வலத்திலைந்து நீக்கியே நின்ற கூறில்
அன்பொடு வாசலாக அறிந்தவ ருரைத்த வாறே. 186

### இதுவுமது.

ஊனமில் மனையில்வந்த முழந்தனை யளந்து கொண்டு
மானிடர்தமக்கு வாசல் மையத்தி லிடத்தே யாகும்
தேனமர் குழலினாளே தேவர்கடமக்கு மையம்
ஆனது வாசலென்றே அறிந்தவ ருரைத்த வாறே. 187

இ-ள். நெடுந்தெருவில் தனக்கேற்பட்ட மனையை அகலம் அல்லது நீளமென்பதை ஜாதியடி அல்லது தச்சுமுழம் இவையொன்றாலளந்துகொண்டு மொத்தம் இத்தனை யடியென்று தெரிந்து அதையொன்பது கூறுசெய்து வந்தயீவைக் கணக்கிட்டுப் பங்கு ஒன்றுக்கு இத்தனை ஜாதி யடியென்றும், அதில் சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, இராகு, கேது எனப் பாகித்து சந்திரன், புதன் பாகத்தில் வாசல் வைக்க உத்தமம். அதிலும், அம்மனைக்கு இடதுபுறம் மூன்று பாகமும், வலதுபுறம் ஐந்து பாகமும், நீக்கி நின்ற பாகத்தில் வாசல்விட மகா உத்தமம். தேவாலயங்களுக்கு மையத்தில் வாசல்விட உத்தமம்.

### வெண்பா.

ஒன்றாகி நின்ற வுயர்நிலமா மத்தனையுங்
குன்றாம லொன்பதுகூ றாக்கியே—நின்றநிலே
வாமத்தே மூன்றும் வலப்புறத்தே ஓரைந்தும்
க்ஷேமத்தே வாசலவிடச் செப்பு. 188

இ-ள். மனைகண்ட நீளத்தை ஒன்பதுபங்காக்கி இடப்புறத்தே மூன்று பங்கும், வலப்புறத்தே ஐந்து பங்குமாக வைத்து மையத்தில் வாசல்விட உத்தமம்.

வேறு.

நடுவீடு வாசலும் நடுமனைக் கம்பமும்
இடுசில விரட்டையும் ஏந்துகை யிரட்டை
மூடுவளைத் தாழ்தலும் மூந்துகை யுயர்தலுங்
குடியதிற் புகுந்திடிற் கொல்லும் பொல்லாததே. 189

இ-ள். இதிற் சொன்ன பிரகாரம் ஒன்றுக்கொன்று ஏறக் குறைய கையைவைத்து அந்த வீட்டிற் குடிபுகுந்தால் தப்பாமற் கொல்லும், எ-று.

விடுப்பதை யொன்பதாய் வீட்டை யளந்துகொண்
டிடப்புறம் மூன்றும் இயல்வல மைந்தும்
நடுப்புறத் தொன்றில் நலம்பெற வாசலாய்
எடுப்பது சொன்னோம் இனிக்கத விடுவதே. 190

இ-ள். மனையை ஒன்பது பங்காக்கி இடப்புறம்—மூன்றுபங்கு, வலப்புறம்—ஐந்து பங்கு, நடுப்பங்கொன்றில் வாசல் விடுவது, என்றவாறு.

---

## வீட்டிக்குள் வாயில் வகுத்தல்.

ஓதிய வீடறை யொன்பது செய்து
நீதியோ டஞ்சறை நீள்வலம் விட்டு
கோதறு மூவறை கூறிடம் விட்டால்
மேதகு வாயில் விளம்பிடை செய்யே. 191

---

## வீட்டுக்குத் தூண் நடுதல்.

உரைத்திடு மனையின் நீளம் ஒன்பது பாகஞ் செய்து
பரித்திடு நடுவிற் கூற்றைப் பங்குமூன் றுக்கு மீதிற்
றெரித்திடு மிரண்டு கூறு தெக்கணம் நீக்கி நின்ற
தரித்திடு மிடமே வாஸ்து நாபியாந் தம்பம் நாட்டே. 192

# தெருவில் வாசற்படி வைக்கும் விதி.

## நவக்கிரக பலாபலன்.

வெண்பா.

பானுவுறுங் கூறதனிற் பாங்கிலா வாசலிட்த்
தானும் பொருளுந் தடம்புரளும்—ஆனுமிலாச்
சந்ததியு மற்பமாந் தன்மனையா ளும்பிரிவள்
வெந்து மனை பாழாய் விடும். 193

### சந்திரன்.

சந்திரனில் வாசலிடச் சம்பத்து மென்மேலும்
இந்திரபோ கங்களுமே யெந்நாளும்—சந்ததியும்
பூதேவி லக்குமியும் புக்கிக் குடியிருப்பாள்
மாதேவி யாய் வந்த மர்ந்து. 194

### செவ்வாய்.

கொடியசேய் வாசலிடக் கொம்பனையே கேளாய்
மிடியும் விசனம் மிகவே—குடியிருப்பாய்
காட்டேரி வீரன் கறுப்ப னணுகுவனே
தேட்டமிலா தம் மனையின் சீர். 195

### புதன்.

மேலும் புதன்வாசல் விட்டிடவே மென்மேலும்
பாலும் பசுவுமிகப் பாக்கியமும்—தாலமதிற்
சந்தான சம்பத்துந் தானியமுஞ் செந்திருவும்
வந்தாள் மனைக்கெலவே வாழ்த்து. 196

### வியாழன்.

அரிய குருவாச லாலயத்துக் காகும்
பெரிய குடிக் காகாது பேசிற்—பிரிவிலா
நோய் மீறுந் துன்பமுமே நோக்கு மிடமனையாள்
வாய் மீறுஞ் சண்டை வரும். 197

சுக்கிரன்.

வெள்ளிதனில் வாசலிட வேண்டாங்காண் விட்டாக்கால்
கள்ளிருளிற் சோரரால் நாசமாம்—பள்ளியறை
தன்னிற் படுக்கபயந் தானாகும் அம்மனையிற்
கன்னிசுக மில்லை யது காண். 198

சனி.

காணுஞ் சனிவாசல் கண்டவுடன் சண்டைவரும்
வீணான துன்பம் விளையுமே—ஆனான
பேருக் கலைச்சலாம் பெண்டுகெடும் அம்மனையே
ஊருக்கு மாகா தொழி. 199

## இராகு கேது.

பாம்பிரண்டில் வாசலிடப் பல்கால மும்விஷங்கள்
வீம்புடனே தீண்டி வினைசெய்யும்—சோம்பலுடன்
நித்திரையு மேமிகுத்து நிஷ்டூர மேவருகும்
எத்திசையு மெனறே யியம்பு. 200

## கதவுகளினியல்பு.

நாவலுந் தேவர்க்காகும் நான்மறை யோர்க்கு வேம்பாம்
மேவுமன் னவர்க்குத் தேக்காம் மிக்கவை சியர்க்கிலுப்பை
தாவுவே ளாளர்தெங்கு தனியெட்டி யெவர்க்கு மாகா
காவிய மாகச்சொன்னேங் கதவுகளியல்பு தானே. 201

இ-ள். நாவல்—தேவர்க்காகும், வேம்பு—மறையோர்க்காகும், தேக்கு—அரசருக்காகும், இலுப்பை—வைசியருக்காகும், தென்னமரம்—வேளாளருக்காகும், எட்டிமரம் எவருக்குமாகாது, எ-று.

## இராசிக்காரர் பொருத்தம்.

ஒழுக்கிய குண்டை யாழ்கண் டுபர்கிழக் குடன்வடக்காம்
அழப்புலி யரிவை சோலுக் கழகிய கிழக்குத் தெற்காம்
விழித்திடுந் தேளும் வில்லும் மகரமும் மேற்குந் தெற்காம்
வழுத்தினர் குடமீன் மேடம் வாசலாம் வடக்கு மேற்கே. 202

இ-ள். இடபம், மிதுனம், கடகம் இந்த மூன்று ராசிக்காரரு க்கு—கிழக்கும், வடக்கும் வாசல்விடவும். சிங்கம், கன்னி, துலாம் இந்த மூன்று ராசிக்காரருக்கு—தெற்கும், கிழக்கும் வாசல் விட வும். விருச்சிகம், தனுசு, மகரம் இந்த மூன்று ராசிக்காரருக்கு— மேற்கும், தெற்கும வாசல் விடவும். கும்பம், மீனம், மேஷம் இந்த மூன்று ராசிக்காரருக்கு—வடக்கும மேற்கும் வாசல்விடவும், எ-று.

ஓங்கிய நீளந்தன்னை யொன்பது கூறுசெய்து
பாங்குடன் வலத்திலைந்து பரிவுட னிடத்தின்மூன்று
நீங்குறத் தோன்றுகின்ற நேர்நடு வாகக்கண்டு
தீங்கிலா வாசல்வைக்கச் சிறந்திடும் வாழ்வுதானே. 203

இ-ள். தனக்குற்ற மனையின் அகலம் நீளங்களை யளந்து அதை ஒன்பதுபாகஞ்செய்து அம்மனையின் வலப்புறத்தில் ஐந்துபாக மும், இடப்புறத்தில் மூன்றுபாகமுங் கழித்து, நேர்நடுவாகக்கண்டு வாசல்வைக்க வீட்டு எஜமான் சகல சம்பத்துடன் சுகமாகவாழு வான், எ-று.

### வேறுவிதம்.

வீட்டின் அளவுக்கு மையங்கீறி நடுவாகப் பாதியில் இரண்டு நிலையில் ஒரு நிலையை நடுவாக வைத்துத் தெற்கேயாவது வட க்கேயாவது வாசல்வைக்க உத்தமம்.

---

## திசையறிந்து வாசற்கால்வைக்கும் விதி.

கிழக்குப்பார்த்த வாசற்படியுள்ள வீட்டுக்கு ஈசானியம் முதல் அக்கினி மூலைவரைக்கும் அளந்து அதை எட்டுப்பாகஞ்செய்தால்,

| | | | |
|---|---|---|---|
| 1-வது பாகம் | ஆனி | 5-வது பாகம் | புத்திர விர்த்தி |
| 2-வது பாகம் | சோரம் | 6-வது பாகம் | சுகம் |
| 3-வது பாகம் | தனப்பிராப்தி | 7-வது பாகம் | துக்கம் |
| 4-வது பாகம் | இராஜஅநுமானம் | 8-வது பாகம் | ரோகம் |

மேற்குப் பார்த்த வாசற்படியுள்ள வீட்டுக்கு நிருதி மூலை முதல் வாயுமூலை வரைக்கும் அளந்து அதை எட்டுப்பாகஞ்செய்தால்,

| | | | |
|---|---|---|---|
| 1-வது பாகம் | ஆனி | 5-வது பாகம் | பாக்கியம் |
| 2-வது பாகம் | சத்துருவிர்த்தி | 6-வது பாகம் | சுகம் |
| 3-வது பாகம் | சுகம் | 7-வது பாகம் | பயம் |
| 4-வது பாகம் | தனம் | 8-வது பாகம் | நாசம் |

வடக்குப்பார்த்த வாசற்படியுள்ள வீட்டுக்கு வாயுமூலை முதல் ஈசானிய மூலைவரைக்கும் அளந்து அதை எட்டுப்பாகஞ்செய்தால்,

| | | | |
|---|---|---|---|
| 1-வது பாகம் | மனையாள் நாசம் | 5-வது பாகம் | தனம் |
| 2-வது பாகம் | பலயீனம் | 6-வது பாகம் | சௌக்கியம் |
| 3-வது பாகம் | தன ஆனி | 7-வது பாகம் | துக்கம் |
| 4-வது பாகம் | தானிய விர்த்தி | 8-வது பாகம் | பாதகர்மம் |

தெற்குப் பார்த்த வாசற்படியுள்ள வீட்டுக்கு அக்கினி மூலை முதல் நிருதி மூலைவரைக்கும் அளந்து அதை எட்டுபாகஞ் செய்தால்,

| | | | |
|---|---|---|---|
| 1-வது பாகம் | தன ஆனி | 5-வது பாகம் | பாக்கியம் |
| 2-வது பாகம் | சத்துரு விர்த்தி | 6-வது பாகம் | நன்மை |
| 3-வது பாகம் | சுகம் | 7-வது பாகம் | பயம் |
| 4-வது பாகம் | தன வரவு | 8-வது பாகம் | நாசமாம் |

இந்த பாகங்களின் இயற்கையறிந்து நல்லபாகத்தைப்பார்த்து வாசற்கால் வைக்கவேண்டியது.

## நவக்கிரக பலன்களறிந்து வாசற்கால்வைக்கும் நிர்ணயம்.

கிழக்குப பார்த்த வாசற்படிக்கு ஈசானிய மூதல் அக்கினி மூலை வரைக்கும் அடியளந்து ஒன்பது பாகஞ் செய்யவும்.

தெற்குப் பார்த்த வாசற்படிக்கு அக்கினி மூலை மூதல் நிருதி மூலைவரைககும் அடியளந்து ஒன்பது பாகஞ் செய்யவும்.

மேற்குப் பார்த்த வாசற்படிக்கு நிருதி மூலை மூதல் வாயுவு மூலைவரைக்கும் அடியளந்து ஒன்பது பாகஞ் செய்யவும்.

வடக்குப்பார்த்த வாசற்படிக்கு வாயுவு மூலைமுதல் ஈசானிய மூலைவரைக்கும் அடியளந்து ஒன்பதுபாகஞ் செய்யவும்.

இந்நான்குதிக்குக்கும் 1-வது பாகம்—சூரியன், 2-வது பாகம்—சந்திரன், 3-வது பாகம்—அங்காரகன், 4-வது பாகம்—புதன், 5-வது பாகம்—குரு, 6-வது பாகம்—சுக்கிரன, 7-வது பாகம்—சனி, 8-வது பாகம்—ராகு, 9-வது பாகம்—கேது, இந்த நவக்கிரக பாகத்தில் பிரகஸ்பதியிருக்கிற பாகத்தில்-பிரதானம், கோயிலுக்கு வாசற்கால் வைக்கலாம், சுக்கிரன் பாகத்தில்—வீட்டிற்கு வாசற்கால் வைக்கலாம், புதன் பாகத்தில்—மாட்டுத் தொழுவத்திற்கு வாசற்கால் வைக்கலாம், மேலும் புதன், குரு, சுக்கிரன் இவர்கள் பாகத்தில் கோயிலுக்கும், வீட்டிற்கும், மாட்டு தொழுவத்திற்கு வாசற்கால் வைக்கலாம்.

---

## வாசற்காலுக்கு இடதுபாகத்தில் கதவு வைக்கப்படும்.

இப்பால் ஏழுசாண் நீளமும், மூன்றுசாண் அகலமுமுள்ள வாசற்காலும், ஒன்பதுசாண் நீளமும், ஐந்துசாண் அகலமுமுள்ள வாசற்காலும், உத்தமமாம்.

இரண்டுவித மரத்தினல் வாசற்கால் செய்யலாகாது. மூன்று வித மரத்தினல் கட்டில் செய்யலாகாது.

கதவுக்கு ஒற்றைப்பட பலகை சேர்த்துச் செய்யவேண்டும். இரட்டைப் பலகை சேர்த்துச் செய்யலாகாது.

## வீட்டில்நுழையும்போது தூலகுத்தாகாது.

வீட்டு வாசற்படிக்கு எதிரில் கட்டைச்சுவரிருந்தால் சத்துரு பயமாம், தெருவாசற்படி யுயர்ந்து உள்வீட்டு வாசற்படி தாழ்ந் திருக்கக்கூடாது. அப்படி யிருக்கில் வரும்பலன் நீங்கிவிடும்.

## எந்த மாதங்களில் வாசற்கால்வைத்தாலும் திசையறிந்து வைக்கவேண்டும்.

கடகம், சிங்கம், இந்த இரண்டு ராசியில் சூரியன் நிற்க வீடு கட்டில் கிழக்குப் பார்த்த வாசற்படி வைக்கலாம்.

துலாம், விருச்சிகம், இவ்விரண்டுராசியில் சூரியனிருக்க வீடு கட்டினுல் தெற்குப் பார்த்த வாசற்படி வைக்கலாம்.

மகரம், கும்பம், இவ்விரண்டு ராசியில் சூரியனிருக்க வீடுகட் டினுல் மேற்குப் பார்த்த வாசற்படி வைக்கலாம்.

கன்னி, மிதுனம், தனுசு, மீனம் இந்த ராசிகளில் சூரியனிரு க்க வீடுகட்டினுல் வாசற்கால் வைக்கலாகாது.

விருச்சிகம், மீனம், கடகம் இந்த மூன்று ராசிக்காரருக்கும் கிழக்குப்பார்த்த வீடு உத்தமம்.

ரிஷபம், மகரம், கன்னி, இந்த ராசிக்காரருக்குத் தெற்குப் பார்த்த வீடு உத்தமம்.

துலாம், மிதுனம், கும்பம் இந்த மூன்று ராசிக்காரருக்கு மேற்குப் பார்த்த வீடு உத்தமம்.

தனுசு, மேஷம், சிங்கம் இந்த மூன்று ராசிக்காரருக்கும் வடக் குப் பார்த்த வீடு உத்தமம்.

அலாம் இருந்த திக்கிலிருக்கின்ற ராசிக்கும் கர்த்தன் நாம ராசிக்கும் மித்துருவ மாகையால் நல்லது.

## தாய்ச்சுவர் நிர்ணயம்.

மனைக்குத் தாய்ச்சுவரைச் சேர்த்தே ஆயங்கணக்கிடவேண்டும், ஓர் மனைக்கு இரண்டு சுவர் இருக்குமாயின் அவ்விரண்டையுமே கணக்கிற் சேர்க்கவேண்டும், மற்றும் வீட்டுக்கட்டடத்தில் தெருப் புறத்திலும், பின்புறத்திலும் அமையுந் தாவாரங்களைக் கணக்கிற் சேர்ப்பதற்கு விதியிலலை. ஆயினும் ஒருவாறு சேர்ப்பதாயின் அஃது மத்திமபட்ச மென்பதாம்.

## தோஷம்.

மனை நடுவில் வாசல் விடுதல், ஷை தானிய கெர்ப்பம், ஷை உத்திரம் வைத்தல், கிணறு எடுத்தல், அடுப்பு இயற்றல்கூடாது. ஒற்றைக் கம்பம், ஒற்றை உத்திரம், தோணிமத்தியிலுத்திரம், நிலை வாசல், வாரைகருத்தல், வாசற்படிக்குநேர்,வாரைச சலம்விழுதல் சாலகம்விடுதல, மணபடைவைத்தசுவர், இரட்டைப்படை ஆகாது. கை ஒறறைப்படலாகாது.

## கதவின் சத்தம்,

### வெண்பா.

ஓடி யடக்கி லுயிர்போகும் ஓடாமற்
பாதியடக் கின்மனையும் பாழாகும்—பாடாதே
நின்றநிலை நிற்குங்கால் நீடூழி வாழ்வாரே
கன்ற கதவடைத்தக் கால். 204

இ-ள். கதவைத் திறந்து வைத்தவுடன் அது தானே ஓடி யடைத்தால் உயிர்சசேத முண்டாகும். பாதி யடைத்ததனுல் மனை பாழாகும், நின்ற நிலையில் நின்றதாலுல் நீடூழி காலம் வாழ்வாம், என்றவாறு.

பந்தமாம் வாதபித்தம் மருவியே நடக்கு மாகிற்
சிந்தையாற் கதவுசத்தங் கிளிமொழி போலே சீறும்
அந்தமாம் நடுச்சட்டத்தி லாணியொன் றூனமாகும்
தொந்தமா யிருக்கும் நோய்தான் றீராது துணிந்து சொல்லே.

இ-ள். கதவானது மந்தங்கொண்டு வாதம் பித்தம் என்னும் இரண்டு நாடிபோல் நடக்குமாகில் நடுச்சட்டத்தில் ஆணியொன்று ஊனமென்று சொல்லவும், நோய் தொந்தமாயிருக்கும், எ-று.

வெண்பா.

கன்னியரே வாசற் கதவு சிக்கிச் செக்கோசை
மன்னிடிலோ புத்திரனும் மத்திபமாம்—முன்னமே
கன்னியரைப் போக்குங் கவலை மிகப்படுத்தும்
அன்னமே சொன்னே னறி. 206

இ-ள். கதவானது சிக்கிச் செக்கோசைபோல் இறைச்சலிட்டு நடக்குமாகில், புத்திர பாக்கியமில்லை. மனையாள் மரணமாவாள், மனக்கவலையு முண்டாகும், எ-று.

கரும்பாலை போலே தானுங் கதறியே கத்து மாகில்
வரும்பால கர்க்கு நாசம் மங்கைய ரிடத்திற் குற்றம்
பெரும்பாடு மெத்த வுண்டு பெண்பழி தனையே வாங்கும்
அரும்பான கொங்கை மாதே யவத்தை யுண்டாகும் பாரே.

இ-ள். கதவைச் சாத்தும்போது கரும்பாலைபோற் சத்தமிடில் புத்திர நாசமும் பெண்பழியும் அதிக அவஸ்தையு முண்டாகும், என்றவாறு.

ஆளவே ஒன்று மூன்று மைந்தின்பால் கதவு நிற்க
மீளவே தாங்க பாடம் விடுமத னோசை வேறு
காளமாங் கழுதை செக்கு குரலது கவலை யாக்குந்
தாளம்வே ழத்தி னோசை சங்கொலி மிகவும் நன்றே. 208

இ-ள். கதவைச் சாத்தும்போது கழுதைக் குரல்போலும், செக்கின் ஓசைபோலும், சத்தமுண்டாகில் தீராக் கவலையுண்டாம். யானைக் குரல்போலும், சங்கொலிபோலுஞ் சத்தமுண்டாகில் சகலபாக்கியமு முண்டாம், எ-று.

## ஆகா மண்ணின் லட்சணம்.

தயிரொடு நெய்தே னென்னெய் தாக்கிய வுதிரத் தோடு
மயிர்பல சிறுமீன் பட்சி மற்றுமோர் பொல்லா நாற்றம்
பயிரொடு பலமுங் காணூர் பாழ்படு மனையெ டுக்கில்
வயிரவேல் விழியி னுளே மண்களின் குணங்கள் தானே. 209

இ-ள். மண்மணமாவது தயிர்மணம்போலும், நெய்மணம்போலும், தேன் மணம்போலும், இரத்த மணம்போலும், மயிர்சிக்கு மணம்போலும், மீன்கவுச்சி மணம்போலும், பட்சிமணம்போலும், மோர் மணம்போலும், இவ்வண்ணமாகிய மணமுள்ள பூமியில் பயிரிட்டாலும் பலியாது மனையெடுக்கினும் பாழாகும், எ-று.

---

## குழியின் மண் லட்சணம்.

ஆக்கிய குழியை வெட்டி யகன்றமண் ணதனை மீளத்
தேக்கியே நிறப்பும் போது சிறிதுமண் தாழிற் கேடாம்
தாக்கிய குழியின் மண்ணுஞ் சமதளம் மத்தி பந்தான்
நீக்குமண் ணதிக மானல் நிறை வரச் செல்வ மாமே. 210

இ-ள். குழியைவெட்டி மேலே போட்டிருக்கு மண்ணை மீளவும் அம்மண் தள்ளும்போது குழி குறைந்து போகுமாகில் கெடுதியாம், சமனுகில் அது மத்திபமாம், அதிகமாகில் அளவற்ற பாக்கியமுண்டாம், எ-று.

இதுவுமது.

அளந்ததோர் குழியின் மண்ணை யகழதன் மேலே யிட்டால்
வளர்ந்திடிற் செல்வ முண்டாம் ஒத்திடின் மிகுதி யில்லை
குளந்தனிற் குறையு மாகிற் குறைந்திடுஞ் சம்பத் தென்றே
உளந்தனிற் கருதி நல்லோ ருரைத்தனர் புவியின் மாதே. 211

இ-ள். முன்சொல்லின குழியிலெடுத்த மண்ணைக் கொட்டினால், மண்மிஞ்சி யிருக்கில் அதிகச் செல்வமுண்டாம். சமமாய் ஒத்திருக்கில் வரவுஞ் செலவும் சமமாகும். குறைந்து காணில் செல்வங் குறைந்து செலவுமிகும், எ-று.

---

## மனைமுகூர்த்தக் குழியின் சகுனம்.

மனைதனில் வந்து நின்று வாஸ்துவின் நிலையறிந்து
வினவிபு மவ்விடத்து மேவியே முகூர்த்தஞ் செய்யக்
கனமெனு மண்ணை வெட்டுங் கருதிய குழியிற் குள்ளே
இனமெனுஞ் சயனங் காணு மியலது விளம்பு வேனே. 212

இ-ள். மனையில் வந்து நின்று வாஸ்து புருஷனது நிதானத்தைச் செவ்வையாய்க் கண்டு அவ்விடத்தில் முகூர்த்தஞ் செய்யுந் தருணத்திற் காண்கின்ற சகுன விபரத்தைச் சகலருந் தெளிவாயறியும்பொருட்டு தெரியச் சொல்லுவேன், எ-று. 213

---

## ஷை குழியின் சகுனம்.

நாற்றிசை நடுவேயாக நலமிகு வட்டம் போல
தாற்றிய முழங்கை யாழந் தணிவதாய்க் கெல்லி நல்ல
தூற்றிய சிப்பி காணில் சுற்றத்தார் கிளையை மாற்றும்
காற்றிய கரியைக் காணில் கனப்படு மில்லந் தானே. 214

இ-ள். நாற்சவுக்கமாகவும், வட்டமாகவும், முழங்கை யாழத்துக்குக் குழிக்கெல்ல, அதிற்சிப்பி அல்லது கிளிஞ்சில்களைக் கண்டால் உறன் முறைகள் நசிக்கும், கரியகப்பட்டால் அந்த வீட்டில் நெருப்பு விழும், எ-று.

---

### குழிகெல்லி மண்ணெடுத்துப்பார்க்கு மிலட்சணம்.

வீட்டுக்கு எஜமானனவன் தன் முழத்தால் ஒருமுழ அகல நீளம், ஒரு முழம் ஆழம், நான்குபக்கமும் கீழ் ஆழமும் சரியாய்ப் பார்த்துப் பள்ளமெடுத்து மறுபடியும் அந்தமண்ணை அப்பள்ளத்தில் நிரப்பிப் பார்க்கும்போது மண்மிகுந்தால் சுபம். சரியாயிருந்தால் சமமாயிருக்கும், குறைவாயிருக்குமாகில் தரித்திரம், இதன்றி

சூரியன் அஸ்தமானமாயிருக்கும்போது மேற்படி பள்ளத்திலிருக்கிற மண்ணை எடுத்துப்போட்டு அதில் நிரம்பத் தண்ணீர்விட்டு மறுநாள் உதயத்தில் பார்க்கும்போது தண்ணீரிருந்தாலும் சேறுயிருந்தாலுஞ் சுபம்.; அந்தப் பள்ளத்தில் தண்ணீரில்லாமற்போனாலும், சேறில்லாமற் போனாலும், ஒக்கப்பூச்சி யோடியிருந்தாலும் அது ஆகாது. மேற்சொல்லிய குழியில் தண்ணீரும் பாலும் வார்த்தபோது பிரதட்சணமாகச சுற்றினால் நன்மை.

நல்லதோர் நாளும் பக்க முகூர்த்தமும் பொருந்தக் கொண்டு
கெல்லியே பார்க்கும்போது கரியெழில் நோய தாகும்
புல்லிய வுமியே காணிற் பொருண் மிகக் கேடு சொல்லும்
வில்லிய விறகு காணி லிவன்குலங் கேட தாமே. 215

இ-ள். நல்லநாளும் பட்சமும் பொருந்த முகூர்த்தங்கொண்டு மனைநடுவில் கெல்லிப் பார்க்கும்போது கரியெழும்பில்—நோயாகும், உமிகாணில்—பொருட் கேடுவரும், விறகுகாணில்—மனைக்குரியவன் குலம் நசித்துப்போம், எ-று.

தின்டிற லெறும்புந் தேளுஞ் சிதலொடு கட்டை பொல்லா
அண்டமும் முகிரும் கேச மதுவரில் முற்று மாகா
வெண்டலை யெலும்பு காணில் வெறுமையுங் கேடு மென்று
தண்டமிழ் நூல்வல் லோர்கள் சாற்றினர் தன்மை யாலே.

இ-ள். எறும்பு, தேள், கறையான், கட்டை, முட்டை, நகம், மயிர், வெண்டலை, எலும்பு இவைகளில் ஒன்று காணிலும் பொல்லாங்கு நேரிடும், எ-று.

ஈண்டிய தனத்தைக் காணில் இன்பமே வருவ தாகும்
காண்டகு தனங்கள் சேருங் கல்லுறுந் தவளை காணில்
பாண்டியன் பசுவின் கொம்பு பலவித தானி யங்கள்
வேண்டிய லோகங் காணில் மிகுந்திடுஞ் செல்வந் தானே.

இ-ள். தனப் புதையல் காணில்—இன்பமுண்டாம், தவளை காணில் உடமையுண்டாம், பசுவின் கொம்புகாணில்—பலவித தானியங்கள்வரும், பஞ்சலோகங்களில் ஒருவித லோகத்தைக் கண்டாலும்—மிகுந்த செல்வமுண்டாம், எ-று

பொன்னுடன் வெள்ளி செம்பு பொருந்திடில் நன்மை யாகும்
பின்னுமோ ரிரும்போ டீயம பித்தளை மத்தி பந்தான்
கன்னல்சேர் மொழியி னுளே கருங்கல்லோ டெலும்பு காணில்
மன்னிய மனையாள் சாவள் மாளுவன் கணவன் றனே. 218

கல்லொடு செங்கற் சிற்பி கண்டுகண் களிக்க நன்றும்
நல்லுயிர் பிள்ளை யென்றும் நயம் படப் பெருகி வாழ்வார்
பல்லுடன் சாம்பலோடு படுகரி யெலும்பு காணில்
இல்லத்திற் சாவு கேடா மிருவினை விளையு மாதே. 219

இ-ள். கருங்கல், செங்கல், சிப்பி, இவ்வகைப்பட்ட வஸ்துக்களைக் கண்டால் பிள்ளைகளைப் பெற்று பெருகி வாழ்வர், பற்கள், சாம்பல், ஓடு, கரி, எலும்பு இவ்வகைப்பட்ட வஸ்துக்களைக் கண்டால் மரணமும் கேடும் உண்டாகும், எ-று.

---

## குழிகெல்லும் விபரம்.

காலிடை முன்னங் கெல்லில் கனங்குழல் சாவு சொல்லும்
சாலவுந் தலையைக் கெல்லிற் றயொடு தந்தை சாவாம்
கோலிய முதுகைக் கெல்லிற் கொடுந்துயர் நோயதாகும்
வாலிய வயிற்றைக் கெல்லில் வான்பொருள் வாழ்வுண்டாமே. 220

இ-ள். வாஸ்து புருஷன் படுத்திருக்கும்போது அவன் கால் நீட்டியிருக்குங் கால்புறம் குழிகெல்லில் மனையாள் மரணம், தலைப்புறம் கெல்லில் மாதாபிதாமரணம், முதுகுப்புறம் கெல்லில் பிணி புக் துன்பமுங்காட்டும், வயிற்றுப்புறங் கெல்லில் பொன்பொருள் வாழ்வுமுண்டாகும்.

மனையெடுக்க வேணுமென்றால் தலைவாசல் நிற்கில் நிலையறிந்து நடுவீட்டுச்சுவர் நிற்கில் நிலையறிந்து இரண்டுக்குங் கயிறு பிடித்து அந்தக் கயிற்றை இரண்டாய்ப் பங்கி பின்பு வீட்டுக்குள்ளே தலைவாசலுக்கு நேரே ஒரு பங்குவைத்து அந்தப்பங்கு நின்ற அளவிலே குழியைக் கெல்லிப் பார்ப்பது.

தாண்டிய பசுவின் கொம்புந் தவளையும் மணியுங் கல்லும்
ஈண்டிய தனம்பொன் காணி லிம்மனை யெடுக்க நன்றும்
வேண்டிய பூமி தன்னி லிதை வர வெலியு மோங்கி
பூண்டதோர் கதியுங் கண்டாம் புகழுள வாழ்வு போமே. 221

இ-ள். பொன், வெள்ளி, செம்பு, இவைகளி லொன்றுகாணில் உத்தமம். இரும்பு, ஈயம், பித்தளை இவைகளிலொன்று காணில் மத்திமம். கருங்கல், எலும்பு இவை காணில் அம்மனைக்குரியவன் மனைவியிறப்பதுமன்றி அவனும்வியாதியால்மெலிந்திறப்பன், எ-று

---

# நிலத்தி னியல்பு.

அருக்கனின் றதுகி ழக்கு அருஞ்சோமன் வடக்கதாகும்
திருத்திய மேற்குத்தெற்கு திகழ்ந்திடும் பூமி மேலே
வருத்தமில் லாமல் வாழ்வர் மனையினை யெடுத்துக் கொள்ளும்
கருத்தினை மயனுரைத்த காரண மிவைகள் தானே. 222

இ-ள். அருக்கன் நின்றது—கிழக்கு, சோமன் நின்றது—வடக்கு, இவையிரண்டுந் தாழ்ந்தும், தெற்கும் மேற்கும் உயர்ந்திருப்பதுமான ஒரு பூமி கிடைக்குமாகில் அதில் மனைகோல சகல சம்பத்து முண்டாம், எ-று.

பல்லிக ளோந்தி போலும் பாம்புடன் பறவை போலும்
மல்லிகை முடித்த கூந்தல் மங்கையே மேற்குந் தெற்கும்
சொல்லிய தாழ்ந்தபூமி சுகமுறு மென்றுஞ் சோரான்
துல்லியப் படவே யெல்லாந் துணிந்துநீ யறிந்து கொள்ளே. 223

இ-ள். பல்லி, ஓணான், பாம்பு, பறவையைப்போலுமுள்ளபூமியும் மேற்குந் தெற்குந் தாழ்ந்த பூமியும்மனைகோலச் சிறப்புற்றோங்கும், எ-று.

குடதிசை வடக்குத் தாழ்த லுத்தம மாகும் மேற்கு
இடமுட னுயர மெத்த யினிமைவந் தெய்குஞ் சால
இடமுள சுற்றத் தாருந் தெளிந்தநீர் சூழல் போலப்
பட்டமுடன் காணி கோடி வயதுடன் வாழ்வர் தாமே. 224

இ-ள். மேற்கும், வடக்குந் தாழ்ந்தும் அல்லது மேற்கு உயர்ந்தும் வடக்கு தாழ்ந்துமுள்ள பூமியில் மனைகோவில் குடும்பவிர்த்தியுடனே ஆயுசுபெற்று வாழ்வார்கள், எ-று.

பல பல வழியே யாதல் பதுங்குசிற் றடியே யாதல்
சில சில வழிகுறுக்கே சேர்ந்திடும் பூமி யாதல்
புல வரு மவர்கட் காசி புகழ்பெறப் புகன்றிட்டாலும்
பலவு கண் டிசைந்த பூமி பாழ்சுடு காட தாமே. 225

இ-ள். பலர்களுக்கும் பாட்டையா யிருந்த பூமியில் மனைகோவில் தனதான்ய முதலிய பொருள்களும் மாடுகன்றுகளும் அழிவது மல்லாமல் யஜமானுடைய பெண்டு பிள்ளைகளும் இறந்து வீடும் சுடுகாட்டுக் கொப்பாகும், எ-று.

அழிந்திடுங் கோயி லோடு அரவுசே ரிடம லங்கள்
விழிந்திடும் பறையர் செம்மான் மேவிய முனிக ளெல்லை
பொழிந்திடு மீமக்காடு போர் களத் தவனி யாகா
ஒழிந்திடு மந்த வீடு ஓங்கிய வனம தாமே. 226

இ-ள். பாழடைந்த தேவாலயம், பாம்பிருக்கும் புத்துக்கள், மலஜலங்கழிக்கு மிடங்கள், பறையர் சக்கிலியர் குடிசை கட்டியிருக்குமிடம். முனிகள் நிலை நிற்குமிடங்கள் சுடுகாடு யுத்தவீரர்கள் போராடுமிடம் இவைகளில் மனைகோல லாகாது. மீறிச்செய்யில் வீடு காடாய்விடும். எஜமான் இறந்துபோவான், எ-று.

தெற்கொடு மேற்கோ டாய்ந்து திருந்திடச் சதுரமாக்கி
நிற்கொடு தண்ணீர் செல்லா நிறைவி யீசானப்போக்கு
முற்கொடு வடிவு கோணம் முற்றுமே யன்றி நன்னூல்
சொற்கொடு நிறைந்தபூமி சுன்றிபோற் றருவ தன்றே. 227

வட்டமுக் கோணம் போலும் குரங்குமீன் பன்றிபோலும்
கொட்டுநற் குடங்கள் போலும் குரங்குமீன் பன்றிபோலும்
மெட்டுள கங்குல்டுபோலும் மேவிய விளக்குச் சூலம்
இட்டிய வடிவு போலே யிசைந்ததோர் பூமியாகா. 228



இ-ள். வட்டம், முக்கோணம், வச்சிரம், ஆமை,குடம், குரங்கு மீன், பன்றி, இருண்டவனம், விளக்கு,சூலம், இவ்வடிவமுற்ற பூமி களில் வீடு கட்டக்கூடாது. அத்துமீறி செய்வாரேல் அதிகக் கஷ்டப்படுவார்கள், எ-று.

மத்தியிற் புத்து மாகா மதித்தெழும் பாறை யாகா
இத்தியா லரசு வில்வ மெட்டியோ டிவைக ளாகா
சுத்தமா மரங்க ளெல்லாம் சூழ்ந்துட னதன்மேல் நிற்கில்
வித்தகன் றனக்கு மாகா வினைகளும் விளையு மன்றே. 229

இ-ள். மனையின் மத்தியிற் புத்தும் பாறையும், இத்திமரமும், ஆலமரமும் அரசமரமும், வில்வமரமும்,எட்டிமரமும் இவைகளிருக்குமனையில் வீடுகட்டலாகாது. இம்மரங்களோடுகூட சுத்தமாகிய மா, பலா, புன்னை, பாதிரி, வேம்பு, கொய்யா, கொழுமிச்சை, இலுமிச்சை, நாவல் முதலாகிய மரங்கள்சேர்ந்து நிற்கினும், அப்பூமியில் மனைகோலலாகாது. எஜமான் அத்துமீறிச் செய்யில் அம்மனை பாழாகும், அவனும் அதிகக்கஷ்டப்படுவான், எ-று.

புன்னையின் பூவைப்போலும் பொருந்தா மரையைப் போலும்
பன்னுபா திரியைப் போலும் பசுவினீர் கெந்தம் போலும்
பின்னையுஞ் சிலமணங்கள் பிறங்கிடில் நிறைந்த வாழ்வோ
டன்னையுஞ் சுற்றத்தோடு அநேககா லங்கள் வாழ்வான். 230

இ-ள். புன்னைப்பூ, தாமரைப்பூ, பாதிரிப்பூ, பசுவின்நீர், சந்தனம் முதலாகிய மணம்பொருந்திய பூமியில் மனைகோலில் வீட்டு எஜமான் நிறைந்த செல்வம்பெற்று சுற்றத்தாரோடு அநேககாலம் வாழ்வன், எ-று.

முச்சது ரானபூமி மூடுகிய புலாலும் நாறி
இச்சையாய் மேற்குந் தெற்கும் இடமுடன் கிழக்குந் தாழ்ந்தால்
வச்சதோர் நிதியும் வேறாய் மக்களும் மரணமென்றும்
அச்சமுந் தோன்றும் பாழாம் அம்மனை யியல்பு தானே. 231

இ-ள். முக்கோணமான பூமியிலும், மாமிச நாற்றமுடைய பூமியிலும், மேற்கும் தெற்கும் கிழக்கும் தாழ்ந்த பூமியிலும் மனைகோ

வில் தனதானிய முதலிய சம்பத்தும்போய் புத்திரர்கள் மரண மடைவதல்லாமல் அம்மனையும் பாழாம், எ-று.

காடிய பூமிதன்னை நலமுடன் } துடிபோல் வேல்போல்
நீடிய கரைகள் தோட்டம் நிலச்சுழி மகரஞ் சூழும்
ஓடிய கயமும் நீக்கி யுயர்தவப் பதியே யாகில்
கூடுவேற் கண்ணினாளே குலமனை தேரு தென்னே. 232

இ-ள். உடுக்கையைப்போலுள்ள பூமியும், வேல்போன்ற பூமியும், ஏரிக்கரைக்கருகிலுள்ள பூமியும், சோலைகளைச்சார்ந்த பூமியும், அகண்ட குளத்திற் கருகிலுள்ள பூமியும், சன்னியாசிகள் வசிக்கும் பூமியும், மனைகோலுவதற்காகாவாம்கோலில் நசித்துப்போம், எ-று.

ஆலய முகப்பு மையம் அணுகிடும் பிசாசு கோயில்
நீலியாந் துர்க்காதேவி நெடியதாய் வலக்கண் ணோட்டம்
சாலையாம் வழியில் வண்ணஞ் சமர்த்தனுந் துணிந்து கொள்ள
ஆலயம் பதிவுகொள்ளா தாமென வுரைக்க லாமே. 233

இ-ள். ஆலயத்திற்குப் பக்கத்திலுள்ள பூமியும், எதிரிலுள்ள பூமியும், பசாசு முதலிய கிரகங்கள் வசிக்கும் பூமியும், காளிகோயிலின் வலப்பக்கத்திலுள்ள பூமியும், சாலையிலுள்ள பூமியும், மனைகோலுவதற்குதவாவாம். துடுக்குத்தன முடையவன் துணிந்து மனைகோலில்—பெண்டு பிள்ளைகள் மாடு கன்று முதலியவைகளை யிழந்து தனியனாய் இரந்து தின்று ஜீவிப்பன், எ-று.

தன்பிறத் துடனே பார்க்கத் தக்கதோர் சூலம் போலும்
நின்றுகாண் பதுவே யாகா நீணில மொத்துக் காணில்
சென்று போம்படிநீ பாராய் செல்வமுண் டதிலே நாளும்
நன்றிதென் றறிந்து முன்னோர் நலம்பெற வுரைத்த வாரே. 234

இ-ள். சூலத்தைப்போ லமைந்த பூமியில் மனைகோலில்—எஜமான் சகல பாக்கியத்தையு மிழந்து நசித்துப் போவன், நான்கு திக்கும் மையமும் சமமான பூமியில் மனைகோலில்—சகல பாக்கியமும் பெற்று பெண்டு பிள்ளைகளுடன் சுகித்திருப்பன், எ-று.

குழியில் நீரும் பூவும்விட்ட பலாபலனறிய.

தாழ்விலா மனையின் மத்தி சதுரமா யொரு முழத்தில்
ஆழமு மகலங் கெல்லி யதனுள்நீர் பூவும் விட்டால்
வாழ்கதி ரோனை நோக்கி வலம்புரிந் தோடில் வாழ்வாம்
சூழ்கதி ரிடமாய்ச் சுற்றிற் றொல்லைநோ யாகு மன்றே. 235

இ-ள். மனைக்கு நடுவில் நாற்சதுரமாய் ஒருமுழ மளவு ஆழமும், அகலமும் கெல்லி அதில் சுமங்கலியப் பெண்களைத் தண்ணீர் கொண்டுவந்து விடும்படிசெய்து ஒரு புஷ்பத்தைக் கையிலெடுத்து கடவுளைத் தியானித்து அதிற் புரோட்சித்தால் அது கதிரோனை நோக்கி வலமாகச் சுற்றிவருமாகில்—அதிக வாழ்வும் சம்பத்தும், கீர்த்தியும், இராஜ பிரதிஷ்டையும், வாகனாதிகளும் அதிகரித்து சுபேட்சையுண்டாகும், அம்மலரானது இடப்புறமாகச் சுற்றிவருமாகில் அம்மனை யெடுக்கில அதிக துன்பங்களை விளைவிப்பதுமன்றி எந்நோமும் மனதில் வியாகூலமும் வாராத ஆபத்துகளும் நோயும் வருமென்று மேலோர்கள் சொல்லுவார்கள், எ-று.

---

## திக்குகளின் லட்சணம்.

இந்திரன்.—கிழக்கு

இந்திரன் கிழக்குத் திக்கி லெழிலுறும்பூப் போய் நின்றால்
செந்திரு வாசமாவள் செம்பொனுஞ் சேரு மின்பம்
வந்திடும் மனைவி சுற்றம் மைந்தரோ டிருந்து வாழ்வர்
முந்தவே யயனார் சொன்ன முறைமைநூ லிதுகண்டாயே.

இ-ள். இந்திரன் திக்கில் பரிமளம்பொருந்திய மலரானது வந்து நிற்குமாகில் அதிக சவுந்தரம் பொருந்திய இலட்சுமி விலாசமும், தனதான்ய சம்பத்தும் சந்தான பாக்கியமும் ஆயுள் தீர்க்கமும் பொருந்தி வாழ்வர், எ-று.

---

## அக்கினி

அக்கினி திக்கில் நின்றால் ஆயிழை மலடி யாவள்
செக்கர்வா ளரவந்தீண்டுந் தீப்படும் மண்ணெடுக்கில்
தொக்கிஷ மிகவுமுண்டு சோரர்கள் பயமுண்டாகும்
இக்கரு மயனார்சொன்ன இயல்புநா லிதுகண்டாயே. 237

இ-ள். அக்கினித்திக்கில் வாசம்வீசுகின்ற புட்பமானது வந்து நிற்குமாகில் கற்புநிலைமை பொருந்திய பெண்சாதியானவள் மலடியாவாள், இதன்றி விஷத்தைத் தாங்கின்ற பாம்பினாற் பயமும் அச்சமு முண்டாம், அக்கினிச் சுவாலையினாலும் கள்ளர்கள் பயத்தினாலும் தனக்கும் பிறர்க்கும் உதவாமல் வியர்த்தமாய்ப் பொருள் நாசமாய்ப் போகும், எ-று.

---

## இயமன்.

அந்தகன் தெற்குமூலை அன்புடன் வந்து நிற்கில்
சிந்தனை மிகவு முண்டாஞ் செருக்கமுங் கலகங்காணும்
பிந்திய தீமையோடு பிணியினா லச்ச முண்டாம்
செந்தமிழ்ப் புனைந்தபாடற் றீதிலா மயன் சொன்னரே. 238

இ-ள். இயமன் திக்கென்கிற தெற்கு மூலையில் பரிமளம் வீசிய மலரானது வந்து நிற்குமாகில் மனதில் சிந்தனை வியாகூலம்செருக்கம், பலபோராற் கலகம், தீங்காகிய காரியம், தீமை, பிணி, அச்சம், முதலிய வெல்லாம் அதிகரிக்கு மென்பதாம், எ-று.

---

## நிருதி.

கன்னி மூலையிலே நின்றால் கைப்பொருள் மிகவுண்டாகும்
அன்னமுந் தனமுஞ் சேரும் ஆயிழை வந்து நிற்பள்
பொன்னொடு தானியங்கள் பொருந்தவே செல்வ முண்டாம்
முன்னமே மயனார் சொன்ன முறைமை தானிது கண்டாயே. 239

இ-ள். கன்னி மூலையில் மலர் வர்ந்து நிற்குமாகில் பொருளும் அன்னமும் தனகனக வாகனாதிகளும், இலட்சுமிப் பிரகாசமும், நவ தானிய லாபமும், பிறவிச் செல்வமும், எந்நாளும் நீங்காமல் வற்முச் சமுத்திரமாய் மென்மேலும் பெருகியுண்டாகும், எ-று.

---

## வருணன் — மேற்கு

வருணனும் மேற்குத் திக்கில் மலரது வந்து நிற்கில்
இருநிதிச் செல்வமுண்டாம் எங்குமே விளைவுண் டாகும்
கருதிய கருமம் கனமுங் கருணையும் பெற்று வாழ்வர்
மருவிய கனதை யுண்டாம் வளம்பெறு மயனசொன் னரே. 240

இ-ள். வருணன் திக்காகிய மேற்கு மூலையில் அழகும் வாசமும் பொருந்திய பூவானது வந்து நிற்குமாகில் நிறைந்த செல்வமும், தனதான்யம் விர்த்தியும், நினைத்த காரியமும ஆரம்பித்த தொழில்களுஞ் செயமாகும, எ-று.

---

## வாயுவு. — வடமேற்கு

வாயுவு மூலை தன்னில் மாமலர் வந்து நிற்கிற்
காயநோய் கொண்டு சாவன் களவினுற் பொருளும் போகும்
பேயுமே பிடித்துக் கொள்ளும் பிணஞ்சுடு காடதாகும்
சேயுமே மரண மென்று செப்பினுஞ் சிற்ப நூலே. 241

இ-ள். வாயுவுமூலை யென்ற திக்கில் விகசிதம்பொருந்திய மலர் வந்து நிற்குமாகில் பதினெண்காசமென்கிற க்ஷயரோகத்தினல் மரணமும், சோரர்கள் களவுசெய்வதினல், பலபண்ட பாத்திரம் பொன்பொருட் சேதமு மன்றி அம்மனையானது அலகைபிடித்தது போற் பாழாகிச் சுடுகாடாகும், அன்றியும் பிள்ளையுஞ்சாகும்,எ-று.

---

## குபேரன்.—வடக்கு

குபேரனுர் வடக்குத்திக்கிற் குணமலர்வந்து நிற்கில்
விபரங்கேள் பொருள்கைகூடும் வேண்டிய நிதியுஞ் சேரும்
சபைநலம் பெரியோ ரவன் தன்மசிந்தனை யுண்டாகும்
அபயமென் றோரைக் காப்ப னருள்பெறும் பலனு மாமே.

இ-ள். குபேரன்வாழ் வடக்குத் திக்கில் விநோதம் பொருந்திய மலரானது வந்து நிற்கில், தனதான்ய சம்பாத்தும், புத்திர சந்தானமும், ஆயுள்விர்த்தியும், சபை யோக்கியதைவும், தருமசிந்தையோடு அபயமென்றவரைக் காத்துப் பொருளுதவிசெய்து வரம் பட்ட மகா புண்ணியவானைவும் இருப்பான், எ-று.

---

## ஈசானியன். வடகிழக்கு

ஈசான் திக்கிற் புட்பம் இன்பமாய் வந்து நிற்கில்
க்ஷேமமா மனவி மக்கள் நிதியுடன் வாழ்வு முண்டாம்
போசனம் பெரியோர்க் கெல்லாம் பொருந்திய மனிதனவன்
வாசமின் குழலினிள மயனுரை நூல் கண்டாயே. 243

இ-ள். ஈசான்ய பக்கமென்று சொல்லப்படாநின்ற பரமசிவத்தினது பக்கத்தில் பரிமளம் பொருந்திய மலரானதுவந்து நிற்குமாகில் சகல ஐஸ்வரியமும், தீர்க்காயுளும், புத்திரசம்பத்தும், வாழ்வும் மென்மேலும் விர்த்தியாய்ப் பெருகி நீடூழிகாலம் நிலைநிற்கும் இதன்றி பெரியோர்களுக்கும், தபோதனர்களுக்கும் அன்னபானாதிகள் ஆடை கொடுக்க வல்லவனு யிருப்பான், எ-று.

---

# குழியில் நீர்விட்டறியும் சகுனம்.

திடமுள நிலத்திற் சென்று தெரிந்துநாற் சதுர மாக்கி
நடுவது வாகக் கெல்லி நாற்றிசை முழமுங் கோலி
வடிந்திடு நீரை விட்டால் வலஞ்சுழித் தோடில் வாழ்வார்
இடமது வாகச் சுற்றில் இடுக்கமே மிகுதி யாமே. 244

இ-ள். வீடுகட்டும்படியான விடத்திற் சென்று பூமியின் குழிப் பறிந்து நாற்சதுரமாக்கி நடுவாகக் கெல்லி நாற்புறமும் படிய ஜலத்தை விடும்போது அந்த ஜலமானது வலது புறமாய்ச் சுழித் தோடுமாகில் வாழ்வில் மிகுத்திருப்பார்கள், இடது புறமாயோடிச் சுழிக்கில் வாழ்வு குறையு மென்றவாறு.

## மேற்சொல்லிய குழியில் சாயரட்சை நிறைய நீர்விட்டுப் பார்த்தல்.

நிறையநீர் வார்த்து வைத்து நீள்கதி ரெழுந்த போது
முறையதில் வந்து பார்த்தால் முன்படி நீருண்டாகிய
இறையவ னில்லம் போல விருத்தி பெருகு மென்று
செறிவளை கையின் மாதே செய்யதோர் மயனுஞ் சொன்னன்.

இ-ள். குழியில் நிறைய நீரைவார்த்துவைத்து மறுநாள் உதய த்தில் பார்க்கும்போது அப்படியே வற்றுமலிருக்குமாகில் ஸ்ரீமகா லட்சுமியினுடைய சுகத்தைப்போல் சகல சவுபாக்கியங்களும் உண் டாகுமென்று மயன்சொலவி இருக்கின்றார், எ-று.

வற்றியோர் சிலந்திக் காலாய் வகிர்பிளந் திருக்கு மாகில்
உற்றிடு பிணியுண்டாகும் உறுபொருட் கெடுமே யென்றுஞ்
செற்றவர் சிறுத்து வந்து செல்வத்தைச் சிதைப்பா ரென்று
மற்றுதான் முறைமையாலே மகிழ்ந்துட னுரைத்த வாறே. 246

இ-ள். கெல்லிய குழியிலே வார்த்த நீரை மறுநாள் பார்க்கும் போது சிலந்திக் கால்போல்வற்றி விரிந்திருந்தால் வியாதியுண்டா கும், கைப்பொருள் நாசமாகும், மாண்டுபோன பிதிர்களுஞ் சாப மிட்டு சொத்துக்களை யழித்துப்போடுவா ரென்றவாறு, எ-று.

## மண்வெட்டி முழக்கயிறின் சகுனம்.

### வேறு.

மனைகோல வந்த மண்வெட்டி தானும்
முனைமுறிந் திடினும் முனைபறித் திடினும்
இனமுறச் சேர்க்கு மிசைகொடி யறுதலும்
பினையுங் கொடியும் பினைதரு மீனமே. 247

இ-ள். மனைகோல்வதற்குக் கொண்டுவந்த மண்வெட்டி முனையானது மூழியினும் முளையானது பறித்திடினும், கயிறுனது அறுந்திடினும் ஆகாது, அதேதென்றால் எஜமானனுக்கு வாராத ஆபத்தும் மனக்கிலேசமும், அனுபவிப்பதுமன்றி நீடூழிகாலந் துன்பத்தை யனுபவித்து எமபதிக்குப் பாத்திரனுவான், ஆகையால் அந்தமனை ஆகாது, எ-று.

வேறு.

பட்டுநூல் தர்ப்பையோடு பகருமால் விழுது பண்பார்
கட்டனை பனையினாலும் கயிறுநூல் தேவரோடும்
திட்டமா மறையோர் தானுஞ் சிறந்த க்ஷத்திரிய சூத்ரர்
மட்டவிழ் வசியரோடு வகையது பிரிவு சொல்லே. 248

இ-ள். பட்டுநூல், தர்ப்பை, ஆலம்விழுது, பனையினார்நூல், தேவர் நான்குசாதிக்குந் தெளிவாகவ்வரித்துப் பிரிவாகச்சொல்லுவோம், எ-று.

தேவர்க்குப் பட்டு நூலாம் சிறந்தமுப் புரியதாகும்
மேவிய மறையோன் தர்ப்பை விளக்குமுப் புரியா மன்னர்க்
காவியால் விழுதுமூன்று பிரியது வசிய நூலாம்
தாவுசூத் திரன்பனைநார் தாவிரு பிரிய தாமே. 249

இ-ள். தேவர்களுக்குப்—பட்டு நூலால் முப்பிரிக்கயிறு, பிராமணருக்குத்—தர்ப்பையினாலே முப்பிரிக்கயிறு, இராஜர்களுக்கு—ஆலம் விழுதால் மூன்று பிரிக்கயிறு, வைசியர்களுக்கு—நூலினால் இரண்டு பிரியையுடைய கயிறு, சூத்திரர்களுக்குப்—பனைநாரினால் இருபிரியையுடைய கயிறு, எ-று.

---

## இதுவுமது வேறுவிதம்.

மறையவன் தர்ப்பை நூலால் வான்புரி மூன்று கொள்க
இறையவன் கநம்பை தன்னு லிருபுரி யதுவே கொள்க
பெறுமென வசியர்க் காகிற் பெண்ணைநார்புரி யிரண்டாம்
அறிவுள வுழவர்க்காகி லாத்தினார் புரியி ரண்டே. 250

இ-ள். பிராமணர்கள்-தெர்ப்பைபநூல் முப்பிரிகொள்க, அரசர்கள்-கதம்பைநூல் இருபுரிகொள்க. வணியர்கள்-பனைநார் இருபுரி கொள்க, சூத்திரர்களா-ஆத்திநார் இருபுரிகொள்க, எ-று.

## மனை 64-பாகம் செய்யும் விதம்.

இடுமனை யொன்றினுக்கு மெட்டெட்டா மறையைக்கீறில்
நடுவது பிரமத் தானம் நான்குமூலையுமே பேய்க்காம்
அடைவிலே எட்டுந் தேவ ராகுவர் நாற்பத் தெட்டும்
குடிபலர்க் காகுமென்று கூறினர் மயனூல் வல்லோர். 251

தேவதைக ளிருப்பிடச்சக்கரம்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | |
| | | | | | | | |
| | | பேய் காவல் | தேவர் கா | கன் வல் | பேய் காவல் | | |
| | | கன் வி | இக்கா | லவ ற யும | நக [illegible] | | |
| | | தேவா கா | பிரம | ஸ்தா னம் | உ. ஜ. | | |
| | | பேய் காவல் | தேவர் கா | கன் வல் | பேய் காவல் | | |
| | | | | | | | |
| | | | | | | | |

நாட்டும் புகழ்சேர் மனையதற்கு நலங்கொள் எட்டெட்டறைசெய்து
மீட்டும் நடுவில் நாலறையும் விரிஞ்சன்மூலை நாலும் பேய்
ஈட்டுந் திசைகளொரு நான்கும் இருநான் கறையு மிறையவராம்
கோட்டும் நாற்பத் தெட்டறையுங் குணமாய்க் கொள்வாய் கொம்ப
[னையே.

இ-ள் ஒருமனையை அறுபத்து நான்கு அறைகளாகக் கீறில் நடு நாலறையும் பிரமஸ்தானமாம் அதனையடுத்தசூழ்ந்த நாலறையில் பேய்கள் காவலாம் அதனையடுத்த எட்டறையில் தேவர்கள் காவலாம். மற்ற நாற்பத்தெட்டறையும் குடிகளுக்காம், எ-று.



## தனத்தி நியல்பு.

மட்டநீர் கொண்ட மட்டும் மதித்ததோர் வாங்கு தன்னை
வெட்டென நூலாற கண்டு விரைந்துடன் மிகவும் வாங்கி
நட்டென நடுவு தன்னில் நலம் பெறச் சதுர மாக்கிச்
சட்டமாய் முழத்திற கெல்லி சார்பில நீர் விடுக நன்றே. 253

இ-ள். மனைமாட கூடமிட்ட தளத்திலே நூல்பிடித்து நடுப்பட நாற்சதுரமாகக் குழிகெல்லி நீர்மட்டம் ஒரு முழமகெல்லி குழிவழிந்தோடச் சலம்விடுக, எ-று.

நன்றென விட்ட நீரும் நாற்றிசை நண்ணி நூலிற்
சென்றுறு மூலையைத் தொட்டுச் சிக்கென மிகவுந் தாக்கி
மன்றமாய்ப் பரவி நின்று மலிந்திடில் மட்ட மென்று
குன்றமர் தனத்தி னுளே கூறினர் முனிவர் தாமே. 254

இ-ள். அப்படிப்பட்ட நீர் வழிந்து நாலுதிக்கும் பரந்து நாலு திசை நூலிலும் வழிந்து தாககி நாலுக்கும், மூலைக்கும் ஏற்றக் குறைச்சலில்லாமல் ஒத்து நிறபது மட்டமாகும், எ-று.

மாடமா ளிகைக ளாக மதித்தநன் மண்ட பங்கள்
நீடிய மயனுற் சொல்லும் நெறிதனை விளம்பக் கேண்மின்
கூடிய மரங்கள் தன்னின் குணங்களால் நன்மை தீமை
ஆடிய மயிலி னுளே அறிந்தவா றுரைசெய் வேனே. 255

இ-ள். மாடங்கள், கூடங்கள், மாளிகைகள், மண்டபங்கள், இவைகள் கட்ட மயனுரைத்தவழியே மரங்களின் குணங்களும் அவைகளின் நன்மை தீமையுஞ் சொல்லுவாம், எ-று.

கல்லாலுஞ் செங்க லாலுங் கட்டிய மனைக ளெல்லாம்
வல்லாளர் தேவர்க் காகும் மறையவர் தவத்தோர்க் காகும்
இல்லாம விவர்கட் கன்றி யாவர்க்கு மாகா தென்று
சொல்லிய பரிசெ வர்க்குஞ் சுத்தமா மறிந்து கொள்ளே. 256

இ-ள். கருங்கல்லினாற் கட்டிய மனையும் அல்லது கருங்கல்லுஞ் செங்கல்லுங் கலந்து கட்டிய மனையும் தேவர்கள் பிராமணர்கள் தவசிகள் வசிக்குந் தலமாம் இவர்கள் தவிர மற்ற யாவர்க்கும் உதவா தென்பதாம், எ-று.

அகத்தினுக்கா காமென்று அகற்றிய மரங்கள் தானும்
மிகுத்தது வேணு மென்று விரும்பிய மரங்கள் தானும்
மகத்துள தேவர் கட்கும் மற்றுள மாந்த ருக்கும்
பகுத்திரு வகையா யாய்ந்து மாவகை பலவுஞ் சொல்வாம். 257

இ-ள். மனைக்கு ஆகாத மரங்களும் ஆகிய கல்லமரங்களும் தேவர்கள் மனிதர்களுக்கான மரங்களும் இருவகையாய் வேறுபாடு செய்து சொல்லுவோம், எ-று.

---

## குத்தல்களின் தோஷ நிவர்த்தி.

கோவில் பாய்ச்சல், வீட்டுப்பாய்ச்சல், சந்துபாய்ச்சல், வயல் பாய்ச்சல், கோடிகுத்தல், குணக்குத்தல், ஆற்றுக்குத்தல், கிணற்றுக் குத்தல், சந்துக்குத்தல், இவை முதலிய தோஷங்கள் நூறு அடிக்கு மேலாயின் யாதொரு தோஷமுமில்லை.

---

## வீடு கட்டுவதற்கு லட்சணம்.

அகந்தனை யெல்லை நான்கும் அன்புட னய்ந்து கொண்டு
திகழ்தரு மாறு பத்து நாலுடன் பாகஞ செய்து
பகரவே பிரமஸ் தானம் மத்தியில் நான்கு பாகம்
சுகமுயர் திக்கு நான்குந் தரிதருத் திரபா கந்தான். 258

இ-ள். மனையை நான்கு பாகமாக அளந்துக்கொண்டு அதை அறுபத்து நான்கு பங்காக்கி மத்தியில் நான்குபங்கு பிரமஸ்தானம் நான்கு திக்கும் உருத்திரபாகம், எ-று.

யத்ததோர் திக்கு நான்கும் வகையது சொல்லக் கேளாய்
வித்தகனுன விஷ்ணு பாகமாம் விளம்பக் கேளு
சித்தமாங் குறைக ளெல்லாந் தேவதை பாகமென்னுந்
சுத்தமாந் தமிழை யோதுஞ் சுகமயன் சொன்ன வாறே. 259

இ-ள். திக்குகள் நான்கு-விஷ்ணுபாகம், மற்றதெல்லாம் தேவர்களது பாகமென்று மயனென்பவர் சகலருக்குந் தெளிவாகச்சொல்லிய வாக்கியம், எ-று.

மதியெழத் தூணை நாட்டி வாழ்புதன் கையை வைத்து
விதியினால் வெள்ளி மேய்ந்து வியாழமே குடியு மேறச்
சதிரதாய்ச சோரர்வந்து தான்தனை விடினும் வேகாப்
பதிபெற வாசவன்போற் படிமிசை வாழ்வ தாமே. 260

---

வெண்பா.

மதியுதிக்கக் கால்நாட்டி மாலுதிக்கக் கைவைத்து
மிதிவெள்ளி தானுதிக்க மேய்ந்து—கதிர்பெறவே
மந்திரிமார் தானுதிக்க மாடம் புகுவீ ரேல்
இந்திரன் போல் வாழ்வீ ரிசைந்து. 261

இ-ள். சந்திரனுதிக்க-ஸ்தம்பம் முதலியவைநாட்டி, புதனுதிக்கப்-பாப்பு பூட்டி, வெள்ளியுதிக்கத்-தளம் அல்லது ஓடு இசைத்து, வியாழம் உதிக்கக்-கிரகப்பிரவேசஞ் செய்தால் தேவசம்பத்துடன் வாழ்வார்கள், எ-று.

---

## மனைக்குவந்த வாரத்தின்மேல் நேத்திர மறிவது.

வெண்பா.

பரிதி முதலாகப் பாங்குடனே மூற்றித்துப்
புரவி முதலாகப் போக்கெண்ணி—இரங்கொள
வொற்றைக்கண் ணென்பது மீரா றிரட்டைக்கண்
மற்றைக்க ணாறுவ குருடு. 262

இ-ள். மனைக்கு எந்த வாரமோ அந்தவார முதல் ஆதிவாரம் வரைக்கும் எண்ணி எத்தனைவந்ததோ அந்தத் தொகையை 3-ல் பெருக்கி வந்ததொகை எத்தனையோ அத்தனையும் கணக்குக்கு அசுவனி முதலாகத் தள்ளி நின்றநாள் 9-வரைக்கும் ஒருகண், அதற்கு மேல் 12-நாள் இரண்டுகண், அதற்குமேல் 6-நாள் குருடு, இப்படி மனை நட்சத்திரத்துக்குள் பார்த்து மனை கண்ணுள்ள தென்பது.

---

## மனைக்குப் பால்ய எவ்வன மூப்பு மரணபருவ மறிவது.

மனைக்குவந்த அங்கிஷத் தொகையை 7-ல் பெருக்கி 5-லே கழிக்க வந்தது 1-க்கு—பாலன், 2-க்கு—எவ்வனம், 3-க்கு—கௌமாரம், 4-க்கு—மூப்பு, 5-க்கு—மரணமென்பது

அண்டத்துக் கொத்த நேர்மை யருளிய பிண்ட மாகும்
பிண்டத்துக் கொத்த நேர்மை பெருகிய கிரகமாகும்
கொண்ட க்ஷேத்திரமும் காசி கூறிய காங்கா லோடு
விண்டிய குந்தி சென்னி மேவிய அவார மாமே. 263

இ-ள். அண்டத்துக் கொத்தபடி—பிண்டம், பிண்டத்துக் கொத்தபடி—வீடு, காசராணுதிகளோடுங் கூடி விளங்கியது கிரகம்.

இந்தநல் விதமாய்ச் செய்தா லியல்பது வயது நூறும்
செந்திரு வென்னும் மாது திகழ்பிர காச மாவள்
சந்ததி கன்று காலி தக்கதோர் செம்பொன் சேரும்
இந்துமா முகத்தினளே இதன்பயன் மயன் சொன்னரே. 264

இ-ள். இந்தப்பிரகாரமாய் அகங்கட்டினால் அதற்கு வயது நிதானம் நூறு, ஈன்றுகாலிகள் கறவைப் பசுக்கள் இவைகள் நாளுக்கு நாள் விர்த்தியாவது மன்றித் தாமரைக் கமலத்தில் வீற்றிருகின்ற இலட்சுமியானவள் சேர்ந்து ஆனந்தத் தாண்டவம்புரிந்து கொண்டு விளங்கியிருக்கும், எ-று.

## அஷ்டதிக்கு லட்சணம்.

இந்திரன் றிசைக்குப் போகம் எரிதிசை யசனங் கொள்ள
அந்தகன் றெற்கி லாடை யருநிரு திதிலே தண்ணீர்
வந்திட வருணன் பூசை வாயுவிற் றானி யந்தான்
இந்திரை சேர்கு பேரன் யீசான்யன் மக்கட் பேரே. 265

இ-ள். இந்திரனது திசை மூலையில்—போகஞ்செய்வது, அக்கினி திசை மூலையில்—அசனஞ்செய்வது, இயமன் திசை மூலையில்—வஸ்திரங்கொண்டுவந்து வைப்பது, நிருதி திசை மூலையில்—தண்ணீர்க்கொண்டுவந்து வைப்பது, வருணன் திசை மூலையில்—அனுஷ்டான முதலிய பூசைமுடிப்பது, வாயுவு திசை மூலையில்—தானியங் கொண்டுவந்து வைப்பது, நவநிதியும் பொருந்தியிராநின்ற குபேரனென்று சொல்லப்பட்டவனுடைய தானத்தில் பணத்தைக்கொண்டுவந்து வைப்பது ஈசான்ய திசை மூலையில் பிரசவிப்பது, எ-று.

## புற்றின் லட்சணம்.

இந்திரன் செல்வம் அக்கினி மனையும் இடியுமே யமன்றிசை துக்கம்
அந்தமாம் நிருதி நன்மையாம் வருண னருளிய புத்திர லாபம்
உந்திய வாயு துக்கமாங் குபேர ரைசுவ்ய தன்மம யீசான்யம்
பிந்திய பிணியாம் பிரமதானத்திற் பெருகிய சாவெனப் புத்தே.

இ-ள். இந்திரன்பாகத்தில் புற்று உண்டாயிருந்தால்—செல்வமானது விர்த்தியாகும், அக்கினி பாகத்தில் வளர்ந்திருந்தால்—அம்மனையானது இடிந்து பாழாகும், எமன திசையில் புத்தெழும்பி

யிருந்தால்—துக்கமுண்டாகும், நிருதிபாகத்திலிருந்தால்—நன்மை யுண்டாகும், வருணபாகத்திலிருந்தால்—புத்திரபாக்கிய முண்டா கும், வாயுவுபாகத்திலிருந்தால்—அதிக துன்பமுண்டாகும், குபே ரன்பாகத்திலிருந்தால்—அதிக நன்மையுண்டாகும், ஈசான்யபாகத் திலிருந்தால்—பிணியுண்டாகும், பிரமதானத்திலிருந்தால்—மரண மாம், எ-று.

## கெற்பபேழை லட்சணம்.

பண்ணிய கெற்பப் பேழை பகரஞ்சே ழொன்பதாக
எண்ணிய பதினெந்தாக யிறையினைப் பணணிப்பின்னை
பண்ணிய பணியும் பொன்னும் பலபல தானியங்கள்
திண்ணென விடுகவென்று செப்பினார் நூலினாலே. 267

## பேழைமண்ணின் லட்சணம்.

அலவனி லெழுந்த மண்ணும் யானையின் கோட்டு மண்ணும்
நிலமூறு புற்றுமண்ணும் நீருள குளத்து மண்ணும்
குலமுய ரிடப மண்ணும் கூட்டிநீ சேர்த்துக் கொண்டு
நலமுயர் பேழை வைக்க நாடிய விபரஞ் சொல்லே. 268

இ-ள். நண்டு வளைமண், யானைக்கொம்பிலிருக்குமண், புற்றின் மண், குளத்துமண், ரிஷபக்கொம்பின்மண், இவைகளையெல்லாம் சேர்த்துக்கொண்டு பேழைவைக்க விபரஞ் சொல்லுவோம், எ-று.

பெட்டியி லொன்பதாகப் பெருமைசே ரறையுண்டாக்கித்
இட்டமா யிரத்தினங்க ளிலங்க வொன்பதிலே சேர்த்துச்
சட்டமாய்ப் பூசைசெய்து தகுமீசான்யத்தின் மீதே
திட்டமாய் மனையில் வைக்கச் செல்வமும் வாழ்வுண்டாமே. 269

இ-ள். பெட்டியில் ஒன்பது அறையுண்டாக்கி அதில் இரத்தினங்களை வைத்து பூசைசெய்து ஈசான்ய பாகத்தில்வைக்கச் செலவமுண்டாம், எ-று.



## சங்குமரங்களின் லட்சணம்.

வானுடைய தேவருக்கு மானிடர்க்கு மாகத்
தானுடைய சங்குமரந் தக்களவு சொல்லில
ஆனமா மாலரசு அத்தியுட னித்தி
காரைபாம் பைக்கருங் காலிகடை யின்னே. 270

இ-ள். சங்குமரங் கடைகிறது-தேவருக்கும், மனிதருக்குமாக, ஆலும் அரசும் அத்தியும் இத்தியுங்கடைந்து வைக்கலாம், பாம்பை கருங்காலி இரண்டும் மூன்றாவது மாமரமாகையால் தேவர்களுக்குக் கடைந்து வைக்கலாம் மனிதருக்காகாது, தோஷத்தைக்காட்டு மென்றவாறு.

---

## சங்கு ஸ்தாபிதம்

உத்தரா யனமாக உயர்ந்தநல் வாரம் பார்த்து
சித்தநட் சத்திரங்கள் சிறப்புடன் பார்த்து வானிற்
சுத்தமாய்க் களங்கமில்லாச் சூரியன் விளங்கும் போது
சுத்தியே யவ்விடத்தில் நவிலுவே னினிது கேளே. 271

இ-ள். சங்குஸ்தாபிக்கும் நாளாவது உத்தராயனத்தில்வாரம், திதி, நட்சத்திரம், யோகம், காரணங்கள், லக்கினங்கள் இதுகளைத் திறமாகப் பார்த்து ஆகாயத்தில் களங்கமில்லாமல் சூரியன் விளங்கும்போது செய்யும் விபரத்தைச் சொல்லுவோம், எ-று.

ஒருதெண்டுக் கொருதெண்டேதா னுண்மையாய்ச் சதுரமாக்கி
விரவியே மட்டங்கொண்டு விளங்கநீர் மட்டஞ்செய்து
பரவிய நடுவின் வட்டம் பரவு மண்டலம்போல் வீசி
திருந்திய சங்கையூனச் செயும்பிர மாணஞ் செய்யே. 272

இ-ள். ஒருமித்தவண்ணக் கோணங்கிதனின்றி சதுரஞ்செய்து நடுவில் விருத்தமாய் மண்டலம்போலவிதி அதிக சங்கையூனச் சங்குக்குப் பிரமாணஞ் சொல்லுவாம், எ-று.

உத்தம சங்குக்கே தானுயர மோர் முழமதாகும்
நத்திய வடியிலாறு அங்குலம் நவிலக்கேளு
சுத்தமாய்த் தலைக்கனந்தான் சொல்லு மங்குல மொன்றாகும்
பத்தியாய்த் திரளநன்றாய்ப் பரிவுடன் கடைசல் செய்வாம். 273

## சங்குசெய்யும் விதம்.

இ-ள். உத்தமமென்று சொல்லப்பட்டது அதின் உயரம்—ஒருமுழம், அடியிற்கனம்—அங்குலம் ஆறு, தலைக்கனம் அங்குலம்-ஒன்று, அதற்காக வாட்டமாய்த் திரளக்கடைச்சல் செய்யவும், எ-று.

---

## சங்குத்தாபன லட்சணம்.

சங்குத்தாபனம் முன் செய்திருக்கின்ற விடத்தில் தனக்கு வேண்டும் வேளையில் வீடுகட்டலாகும், இதற்குத் தோஷமில்லை. சங்கு ஸ்தாபனஞ் செய்யவேண்டியது சுக்கிலபக்ஷம்—சோபன மூண்டு, பிரதமை, சஷ்டி, ஏகாதசி, இம்மூன்றும், நந்தைத்திதி, சவுத்தி, நவமி, சதுர்த்தசி இம்மூன்றும் இருத்தைதிதி, அமாவாசை முதல் இந்த நாட்களில் சங்குந்தாபனம், செய்யலாகாது. புதன், வியாழன், வெள்ளி, இந்த மூன்று நாளிற் செய்தால் சுபப்பிரதம், சனி, ஞாயிறு, செவ்வாய், இந்த வாரங்களிற் கூடாது.

---

## சங்குத்தாபன நிர்ணயத்துக்கு நட்சத்திரம்.

சதயம், திருவோணம், உத்திராடம், அஸ்தம், ரேவதி, சுவாதி, ரோகணி மிருகசீரிடம், சித்திரை, பூசம், உத்தரம், புனர்பூசம்,

அனுஷம், அஸ்டடம், அசுவனி. இந்தப் பதினைந்து நட்சத்திரத்தில் சங்குஸ்தாபனம் பண்ணினும் நன்மை இந்த நட்சத்திரங்களுக்குத் தோஷமில்லாம லிருக்கவேண்டும், எ-று.

நத்தாதாரம், சுபஸ்தாரம், தாமாதாரம், ரோகாதாரம், நிற்சிவதாரம், இந்த தாரங்களில் சுபர், பாவர், அறிந்து சிவதாரத்தில் சங்குத் தாபனஞ் செய்யவேண்டும் நத்தாதாரத்தில் செய்தால்—அக்கினி தேவதை, சுபஸ்தாரத்தில்—சண்டை, தாமதாரத்தில்—தரித்திரம், நிற்சிவதாரத்தில் கேடுண்டாம், எ-று.

---

## சங்கு செய்யப்பட்ட மரம்.

தந்தியின் கொம்பு வாசச் சந்தனம் வன்னி தேக்கும்
உகந்திய புளியி னோடும் உயர்கருங் காலி செய்வாம்
விந்தையா யிவையல்லாமல் வேண்டி பால் மரந்தா னாகும்
அந்தமாம் வயிரத் தோடே யமைந்ததோர் பிரிவு சொல்வாம். 274

இ-ள். சங்குசெய்யும் மரம், யானைக் கொம்பு, சந்தனமரம், வன்னிமரம், தேக்குமரம், புளியின் வைரம், கருங்காலிமரம் இவையல்லாமல் எந்த மரத்திற் பாலுண்டோ அதிலுஞ் செய்யலாம். ஆகையால் தேவர் முதல் நான்கு சாதிக்கும் விபரஞ் சொல்லுவாம், எ-று.

---

## நான்குஜாதிக்கும் தேவர்க்கும் சங்குசெய் மரங்கள்.

சந்தனந் தந்திக் கொம்பு தகைமைசேர் தேவர்க்காகும்
விந்தைசேர் மறையோர்க்கேதான் மிகுகருங் காலிவன்னி
சிந்தைசேர் மன்னர்க்காகுந் தேக்குவை சியர்கட் காகும்
புந்திசேர் புளியினோடு புகல்பு சூத்தி ரர்க்கே. 275

இ-ள். யானைக்கொம்பும், சந்தன மரமும்—தேவர்களுக்காம், கருங்காலி—பிராமணர்களுக்காம். வன்னி—மன்னவர்க்காம், தேக்கு-வைசியர்க்காம், புளியின்வைரம்—சூத்திரர்ககாம், எ-று.

மேவுமுத் தராபாகத்தும் மிகுந்த தெட்சணை பாகத்தும்
ஆவலச் சாயலுண்டும் அந்தமண் டலத்தில் வந்த
கோவிய புள்ளி ரண்டி லோடவே கிழக்கு மேற்குந்
தாவிய வந்நாள் தன்னில் தகைமையை யறியலாமே. 276

இ-ள். உத்தராயணத்திலும், தெட்சணாயனத்திலும் அவச் சாயல், பாதச்சாயலுண்டு, அந்த மண்டலத்தில்வந்த புள்ளிரண்டிலும் நாலேயோடவாகி கிழக்கு மேறகு மறிவாம், எ-று.

இரண்டுபுள் ளியின்பால் மீதே யேகவே வெளியில் நன்றாய்
திரண்டசேற் கயல் மீனைச் சிறப்புடன் வீசிப்பினனும்
மூரண்டசேல் மீனின் வாயின் முகத்திலுங் கூடு நாலே
இரண்டதை யோடவாகி யாகநா ளிரண்டு சொல்வாம். 277

இ-ள். இரண்டு புள்ளியின்மீது கயல்மீனைவீசி மீனின் முகத்திலும் வயிலுங் கூடு தலையிரணடையும் ஓடவாகக் கொள்ளு வாம், எ-று.

திறமைதெட சணபாகத்தின் சிறந்த தெட்சணத்தின் மீதே
யுறமையுத் தராபாகத்தி லுத்தர பாக மீதே
முறமையா யிரண்டிடத்தி லுயர்ந்திடும நாலைப்பெற்று
உறமுடன் கொள்ளுவான்பின லுண்மையை விளம்பு வேனே. 278

இ-ள். தெட்சணாயனத்திலும், உத்தராயனத்திலும், இரண்டு நாலையும் பெற்றுக்கொள்ளுவாம், எ-று.

---

## சாயல் மாதம் விலக்கம்.

மேவுவை காசியோடு மிகுபுரட்டாசி ரண்டுந்
தாவலச் சாயலில்லே சாற்றுவே னினிது கேளு
ஆவணித் திஙகள் மேட மைப்பசி யாணி மாதம்
ஓவியச் சாயல்ரண்டு உண்மை யங்குலமென் றேதே. 279

இ-ள். வைகாசி, புரட்டாசி இவ்விரண்டு மாதத்துக்கும் விலக்கமில்லை. ஆவணி, சித்திரை, ஐப்பசி, ஆனி, இந்நான்கு மாதத்திற்கும் இரண்டங்குலம் விலக்கம், எ-று.

ஆடி கார்த்திகையாங் கூனி யங்குலம் நான்கு சாயல்
நீடுமார் கழியு மாசி நிறைவிர லாறு சாயல்
தேடுதை மாத மெட்டுந் திறமையுங் குலஞ் சாயற்றான்
பாடலாம் புகழைக் கூறப் பண்பிது பகரு வேனே. 280

இ-ள். ஆடி, கார்த்திகை, பங்குனி, இம்மூன்று மாதத்திற்கும் நாலங்குலஞ் சாயல், மார்கழி, மாசி, இவ்விரண்டு மாதத்திற்கும் ஆறங்குலஞ் சாயல், தைமாதம் எட்டங்குலஞ்சாயல், எ-று.

## அகஸ் பிரமாணம்.

சித்திரையு மைப்பசியுஞ் சீரொக்குஞ் சித்திரைவிட்
டைப்பசிமுன் னேந்தும் அருக்கேறும் ஐப்பசிக்கும்
பின்னேந்து மாசம் பிசகாமல் ராவேறும்
மின்னே விடுபூ முடி. 281

வி-டி-து-மு-டு-வ-பூ-கறு-நாழிகையாம்.

---

# மாதத்துப் பகல் நாழிகை.

| | |
|---|---|
| சித்திரை, ஐப்பசிமீ | ௩௰ |
| வைகாசி | ௩௰௩ |
| புரட்டாசி | ௩௰௩ |
| கார்த்திகை, பங்குனி | ௨௯வ |
| ஆனி, ஆவணி | ௩௧வ |
| ஆடி | ௩௧௰ |
| மார்கழி, மாசி | ௨௮௬ |
| தைமீ | ௨௮௰ |

காட்டிற் கிடக்குங் குரும்பெடுத்துக் கடிய வி ல்பன் ஞ ஙக்கி
பார்ட்டி லொருதலை தானபோட்டுப் பரிவா யொருதலை . ரனோர
காட்டிநின்ற கிழலெ க நன்ருய்க்கூட வோபிடித்து
நீட்டிக்கிடந்த ததுபோக நினறவிரல்கா ழிகை தானே. 282

கன்றுடன் கதிரோன் ழுன்றும் நாழிகை வட்ட மாகி
அன்றுளோர் மதிப்ப தாக அனைபுடன் மூன்று பேரை
நின்றிடக் கண்டு லக்கம நிருமித்தொன் ருகக் கூட்டி
யொன்றிட மூன்றுக் கீய வுள்ளது நாழி யாமே. 283

S. இ-ள். பதினாறு விரற்கடையுள்ள ஒரு குரும்பை பொழு
துக்கு கோராக வைத்துக்கொண்டு இரண்டு நுனியையுஞ்சமமாகப்
பிடித்துக் கீழே கிடந்ததைவிட்டு மேலே நின்றதை நாழிகை
யாக்கிப் பதினைந்து நாழிகை வரையில் ஆச்சுதென்றும் அதற்கு
மேலிருக்குதென்றும் தெரிந்துகொள்க, எ-று.

---

## பகல் நாழிகைப்பார்க்க வகை.

### வேறு.

பகர்ந்தபகல் நாழிகையைப் பாதி செய்து
பாதிதனை யேழதனிற் பெருக்கிப் பாரில்
நிகழ்ந்தவடி யளந்தவச்சாய் பாதச்சாய் நீக்கி
நின்றவடி மேலேழுங் கூட்டி யேற்றித்
திகழ்ந்தமுதற் றொகையதனை யிதனுக் கீந்து
சிறந்தபலன் சென்றநாழிகையாம் பின்மேல்
புகழ்ந்திரவி படுமகடிகை யிவைதாமென்று
பொலன் குழையாய் பகற்கடிகை பொருந்தச் சொல்லே.

இ-ள். அந்தந்த மாதத்துக்குள்ள பகல் நாழிகையைப் பாதி
செய்து எழிற்பெருக்கிக்கொண்டு அடியளந்து அவச்சாயை பாதச்
சாயை நீக்கி நின்ற அடியின்மேல் எழு கூட்டிக்கொண்டு இதற்கு
முன் பெருக்கி வைத்த தொகையைக் கொடுத்துவந்த ஈவை உச்சி
க்கு முன்சென்ற நாழிகையாகவும், உச்சிக்குப்பின் இருப்புநாழிகை
யாகவும் கொள்க.

### வெண்பா.

அடியளந்து ரெட்டித்து ஆறைந்துக் கூட்டி
கடிய பகலறியுங் காலே—படியிசையில்
மூப்பதையே பிற்பெருக்கி மூன்றுகை யதற்கீய
தப்பாது நாழிகையுந் தான். 285

### விருத்தம்

தையிருபத் தெட்டரை மேற் றனுசு கும்பம்
 தான்கால் மீன் விருச்சிகமே முக்காலாகும்
மைதுலேயு மிருமுக்கால் ரிஷபங் கன்னி
 வருமிரண்டோ டொரு காலு மிதுனஞ் சிங்கம்
எய்யுமிரண் டேமுக்கால் கடகம் மூன்றும்
 இயம்பினது பகலசுசு கடிகை யாகும்
ஐயமிலே அறுபதிலே செல்லுப் போக
 அன்றிரவுக் ககசெனவே அறிந்துக் கொள்ளே. 286

---

## அவச்சாயை அடிகள்.

| | 1-வது | 2-வது | 3-வது |
|---|---|---|---|
| சித்திரை, ஆவணி | க | ௱ | 0 |
| வைகாசி, புரட்டாசி | 0 | ௱ | க |
| ஆனி, ஐப்பசி | க | க௱ | உ |
| ஆடி, பங்குனி | உ | க௱ | க |
| கார்த்திகை | உ | உ௱ | ௩ |
| மார்கழி | ௩ | ௩௱ | ௪ |
| தை | ௪ | ௩௱ | ௩ |
| மாசி | ௩ | உ௱ | உ |

மாதத்தை மூன்று பங்காக்கிப் பங்கு ஒன்றுக்கு மேற் கணக்குப்படி அவச்சாயை தள்ளிக்கொள்ளவும், பாதச்சாயை எப்போதும் அரையடியாம்.

---

# அவரவர்கள் காலடியால் அளந்து பார்ப்பது.

| சூரியனுதய முதல் | | சூரியன் மத்தியான முதல் | |
|---|---|---|---|
| அடி 81-க்கு நாழிகை | 1 | அடி 2-க்கு நாழிகை | 16 |
| அடி 39-க்கு நாழிகை | 2 | அடி 3-க்கு நாழிகை | 17 |
| அடி 24-க்கு நாழிகை | 3 | அடி 4-க்கு நாழிகை | 18 |
| அடி 14-க்கு நாழிகை | 4 | அடி 5-க்கு நாழிகை | 19 |
| அடி 12-க்கு நாழிகை | 5 | அடி 6-க்கு நாழிகை | 20 |
| அடி 10-க்கு நாழிகை | 6 | அடி 7-க்கு நாழிகை | 21 |
| அடி 9-க்கு நாழிகை | 7 | அடி 8-க்கு நாழிகை | 22 |
| அடி 8-க்கு நாழிகை | 8 | அடி 9-க்கு நாழிகை | 23 |
| அடி 7-க்கு நாழிகை | 9 | அடி 10-க்கு நாழிகை | 24 |
| அடி 6-க்கு நாழிகை | 10 | அடி 11-க்கு நாழிகை | 25 |
| அடி 5-க்கு நாழிகை | 11 | அடி 12-க்கு நாழிகை | 26 |
| அடி 4-க்கு நாழிகை | 12 | அடி 14-க்கு நாழிகை | 27 |
| அடி 3-க்கு நாழிகை | 13 | அடி 24-க்கு நாழிகை | 28 |
| அடி 2-க்கு நாழிகை | 14 | அடி 39-க்கு நாழிகை | 29 |
| அடி 1-க்கு நாழிகை | 15 | அடி 81-க்கு நாழிகை | 30 |

---

## வெண்பா.

சுட்டு விரல் மடக்கிச் சூரியற்குப் பக்கமதாய்
நட்டு விரற் கிரண்டு நாழிகையா—யொட்டில்
அடியளக்க வேண்டாம் அலகு வைக்க வேண்டாம்
கொடியளவில் நாழி நுவல். 287

ஒன்றரை யொன்றேகா லொன்றுக் காலரையாய்
நின்ற நுகையை நிலை நிறுத்தி—நன்றாக
வட்டமொக்கவே கூட்டி மாளிகைக்குள் ளேயிருந்து
தொட்டவிரல் நாழிகையாய்ச் சொல். 288



## கால நிர்ணயம்.

நாழிகை குளிகனோரை நல்லதோ ரருக்கன் சூலம்
சூழிய திக்குயோனி சுக்கிர னிராசி மாதம்
வீழிலா வாஸ்து வின்றன் விடமுறும் பக்க நாட்கள்
ஏழியல் வாரமுற்ற தியல்பினன் நிமித்தஞ் சொல்லாம். 289

இ-ள். நாழிகை, குளிகனுதயம், ஓரையுதயம் அருக்கன் நிலை, சூலநிலை, திக்குநிலை, யோனிநிலை, சுக்கிரநிலை, ராசிநிலை, மாதநிலை, வாஸ்து புருஷன் நிலை, விஷ்டிகடிகை, பக்கம், நாட்கள், வாரம் முதலானவைகளை இனி சொல்லதுடங்குவோ மென்றவாறு.

சுட்டியை முட்டி நின்று சூரியன் வலம தாக
ஓட்டிய விரலே மூக்கு முரியதோர் நிழலைப் பார்த்து
மிட்டிய விரலொன் றிற்கு மேவிய விரண்ட தாகக்
கட்டிய பெருமை கண்டு கடிகையாய்ந் துரை செய்வீரே. 290

இ-ள். சூரியனை வலமாகவைத்து வலது சுண்டுவிரலை நடுவாக வளைத்து இரண்டு பெருவிரலுந்தவிர மற்றுண்டான ஏழு விரல் விரல்களையும் நேரே ஓட்டிப்பார்க்கில் ஓடின நிழலை ஒரு விரல் விட்டு நின்றால் இரண்டு நாழிகை சென்றது முழுவதுமிப்படியே பொழுது சொல்லத்தக்கது, எ-று.

---

## இரவில் நாழிகை பார்க்கும் விபரம்.

உச்சமா மீனைப்பார்த்து வுறும்பூச முதலா யெண்ணி
இச்சையா யிரண்டே டாவி லேற்றிய துகையின் கூறை
முற்சென்ற மாதத்தைக்கு மொழி யாறு தெய்தி கொண்டு
நிச்சயமதனைத் தள்ளி நின்றது கடிகை யாமே. 291

இ-ள். உச்சத்தில் நிற்கின்ற நட்சத்திரத்தைப் பார்த்து பூச நட்சத்திர முதலாக நின்ற நட்சத்திரமளவும் எண்ணிக்கொண்டு

இரண்டேகாலிற் பெருக்கி நின்ற தொகையை சித்திரை முதலாகச் சென்று போனமாதத்தைக் கணக்குப் பார்த்து மாதமொன்றுக்கு ஐந்துபோக ஆறுக்கொன்று தள்ளி நின்ற சேடம் நாழிகையாம்.

---

## குளிகனறியவிபரம்.

அந்தக்கிழமை தனைத்தொட்டு ஆகுஞ் சனியா மளவெண்ணி
முந்தி மூன்றே முக்காலின் முறையே பெருக்கவருங் குளிகன்
வந்த குளிகன் நிலம்பேர்க்க மனைமுகூர்த்தக் கால் நாட்டத்
தந்தவா கனந்தானேறத் தானியம் போட நன்றே. 292

இ-ள். எந்தக் கிழமையில் குளிககாலம் பார்க்கவேணுமோ அந்தக்கிழமை முதலாய் சனிக்கிழமைவரையிலும் கணக்கெண்ணி வந்த தொகையை மூன்றே முக்காலிற் பெருக்கிக் கண்ட நாழிகையைக் குளிகைகாலமாக்கிக் கொண்டு மனைகோல, ஏரேற்ற, முகூர்த்தக்கால் நாட்ட, வாகனங்களேற, தானியங்களிருப்புக்கட்டமெத்த வுத்தமமாகும், எ-று.

---

## பகற்குளிகன்.

ஞாயிறு முகூர்த்த மேழாம் நன்மதிக் காறுஞ் செவ்வாய்க்
கேயவைந் தாகும் புந்திக் கீரிரண்டாம் பொன் மூன்றும்
தூயநற் புகர்க்கி ரண்டாஞ் சனிக்குக் கொன்றதாகும்
ஆயயிம் முகூர்த்தத் தோடே யற்றிடுங் குளிக னெல்லை.

---

## இராக்குளிகன்.

கதிரவன் றனக்கு மூன்றுங் கலின்மதிக் கிரண்ட தாகுஞ்
சதிபெறு செவ்வாய்க் கொன்றுஞ் சாற்றிய புகர்க்கேழாகும்
மதிவளர் பொன்னுக் காறும் மன்புகர்க் கைந்தாம் நான்கு
கதிர்மகற் காமு கூர்த்தங் காட்டிய பகல்போற் கொள்ளே. 294

# குளிகாதி நான்கு உபகிரக காலம்.

| இராகுகாலம். | | வாரம். | குளிகன். | | எமகண்டன். | | அர்தப்பிரகரன் | | காலகேடி. | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பகல் | இரவு | | பகல் | இரவு | பகல் | இரவு | பகல் | இரவு | பகல் | இரவு |
| உகூவ | கூஅ | ஞாயிறு .... | உஉஇ | எஇ | கஇ | அஸ்த | ககவ | உஉஇ | உதயம் | ககவு |
| கூஅ | உகூவ | திங்கள் .... | கஅஅ | கூஅ | ககவ | உஉஇ | எஇ | கஅஞ | உஉஇ | [illegible] |
| உஉஇ | எஇ | செவ்வாய் .... | கஇ | அஸ்த | எஇ | கஅஅ | கூஅ | கஇ | கஅஞ | கூ [illegible] |
| கஇ | கஇ | புதன் .... | ககவ | உஉஇ | கூஅ | கஇ | உதயம் | ககவ | கஇ | அஸ்[illegible] |
| கஅஅ | ககவ | வியாழன் .... | எஇ | கஅஞ | உதயம் | ககவ | உ0உஇ | எஇ | ககவ | உஉஇ |
| ககவ | கஅஅ | வெள்ளி .... | கூஞ | கஇ | உஉஇ | எஇ | கஅஞ | கூஅ | எஇ | கஅஞ |
| எஇ | உஉஇ | சனி .... | உதயம் | யகவ | கஅஞ | கூஅ | கஇ | அஸ்த | கூஅ | கஇ |

## பகல் இராகு காலம்.

நல்லாவிக் கிருபத்தி யாறே காலம்
நாட்டமுள்ள திங்களுக்கு மூன்றே முக்கால்
வல்ல செவ்வாய்க் கிருபதி ரண்டரைய தாகும்
மகிழ்வான புதனுக்குப் பதினைந்தாகும்
செல்லகுரு வுக்குப்பன் னெட்டே முக்கால்
சிறப்புற்ற வெள்ளிக்குப் பதினைன்றேகால்
சொல்லவே சனிதனக்கே ழரையதாகுஞ்
சொன்னநா ழிகைக்குப்பின் முகூர்த்தமொன்றே. 295

## இரவு இராகு காலம்.

இக்குவலை யத்திரவு ராகு காலம்
எழில்ஞாயிற் றுக்கிழமை மூன்றே முக்கால்
மிக்கதிங்க ளுக்கிருபத் தாறே காலம்
வேண்டுசெவ்வாய்க் கேழரையின் மேலதாகும்
பக்கமுள்ள புதனுக்குப் பதினைந்தாகும்
பகருகின்ற வியாழனுக்குப் பதினொன்றேகால்
தக்கவெள்ளி பதினெட்டே முக்காலாகுந்
சனிக்கிருபத் திரண்டரைமேல் முகூர்த்தந்தானே. 296

## துண்டராகுவின் பாய்ச்சல்.

பானுசேய் வியாழம் புந்தி பைம்புகர் மந்தனிந்து
வானிறை முதலா யெண்ணும் வாரத்தின் றிசையிற் றோன்றி
ஆனவத் திசைக்கு நாலா மாசையி விடமே பாய்ந்து
ஈனமில் யாமம் பாதி யிராகுவின் றியங்கு மெண்ணே. 297

என்றபின் னிராகு பாச்சல் இரவிநாள் கிழக்குத் திங்கள்
ஒன்றிய வடக்குச் செவ்வா யுணருந்தென் கிழக்குப்புந்தி
நின்றதென் மேற்குப் பொன்னேன் நிகழ்வது தெற்குவெள்ளி
சென்றிடு மேற்கு மந்தன் நிகழ்வட மேற்குத் தோன்றும். 298

தோன்றுமே மூன்றேமுக்கா லதன்றிசை யதனிற் றேன்றும்
என்றவ னிட்டத்து காலாக் திக்கினிற் பாயு மென்ப
ஆன்றநற் பகலி லெட்டுத் திசையினு மாகு மாங்கே
மீன்றிகழ் விழியாய் கன்குல் மீண்டுமிப் படியு மாமே. 299

போர்செயச் செல்லும் போதும் புதுமனை புகுதும் போதும்
காரிகை யார்களோ தம்மைக் கைப்பிடித் தணுகும் போதும்
சீரிய பயணமெண்ணித் தீதறச் செல்லும் போதும்
பாரின்மேற் பந்த ராகு பலாபல மறிந்து கொள்ளே. 300

இ-ள். இராகு வானவன் ஞாயிற்றுக்கிழமை சூரிய உதயத் துக்கு ௩_௩—நாழிகை கிழக்குத்திக்கிலும், திங்கட்கிழமை உதயத் திற்கு ௩_௩—நாழிகை வடக்குத் திக்கிலும், செவ்வாய்க்கிழமை உதயத்திற்கு ௩_௩—நாழிகை தென்கிழக்கிலும், புதன்கிழமை சூரிய உதையத்திற்கு—௩_௩-நாழிகை தென்மேற்கிலும், வியாழக் கிழமை உதயத்திற்கு—௩_௩ நாழிகை மேற்கிலும், சனிக்கிழமை உதையத்திற்கு—௩_௩-நாழிகை வடமேற்கிலுமிருந்து ஏழுவாரத் திலும், மூன்றே முக்கால் நாழிகைக் கொருதிக்கில் சஞ்சரிப்பான் வாரங்களின் திசையிலே சூரிய உதையத்திற்குத்தோன்றி மூன்றே முக்கால் நாழிகை வரைக்கும் அந்தத் திக்கிலிருந்து இடமாகவே இராப்பகல் அறுபதுநாழிகையும், தானிருந்ததிக்குமுதல் காலாக் திக்கிலே பாய்வான், அந்தந்த வாரங்களின் திக்கிலே போகும் போது தன்னிஷ்டப்பிரகாரம் பாய்வான், இவன் இருக்கிறதிக்கை நோக்கிச் சுபமுகூர்த்தங் கொள்ளுதலும், கிரகப்பிரவேசஞ் செய் தலும், யாத்திரை, ஊர்ப்பிரயாணம் பண்ணுதலுங் கூடாவாம், என்றவாறு.



## துண்டராகு சக்கரம்.

| வாரம் | ௩ஜ | ௭ஐ | ௧௧வ | ௧௫ | ௧௮ஜ | ௨௨ஐ | ௨௬வ | ௩௰ |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஞாயிறு | இந்திரன் | வாயு | எமன் | ஈசான்ய | வருணன் | அக்கினி | குபேரன் | நிருதி |
| திங்கள் | குபேரன் | நிருதி | இந்திரன் | வாயு | எமன் | ஈசான்ய | வருணன் | அக்கினி |
| செவ்வாய் | அக்கினி | குபேரன் | நிருதி | இந்திரன் | வாயு | எமன் | ஈசான்ய | வருணன் |
| புதன் | நிருதி | இந்திரன் | வாயு | எமன் | ஈசான்ய | வருணன் | அக்கினி | குபேரன் |
| வியாழன் | எமன் | ஈசான்ய | வருணன் | அக்கினி | குபேரன் | நிருதி | இந்திரன் | வாயு |
| வெள்ளி | வருணன் | அக்கினி | குபேரன் | நிருதி | சந்திரன் | வாயு | எமன் | ஈசான்ய |
| சனி | வாயு | எமன் | ஈசான்ய | வருணன் | அக்கினி | குபேரன் | நிருதி | இந்திரன் |

# ஓரையறியும்படி.

அன்றைக் கிழமை யதுதனக்கு ஐந்தாங் கிழமை யோரையதாம்
ஒன்றுக் கிரண்டரை நாழிகையா யுதிக்கு மதற்காமுங் கிழமை
மன்றி லருக்கன் புகர்புந்தி மதியுஞ் சனிபொன் சேய்பலன்கள்
பொன்று மணமும் மகப்பேறும் புகழ்சா வாடை கடும்பகையே.

இ-ள். அன்றையக் கிழமைக்கு ஐந்தாவது கிழமை காலையில் உதயமானபோது அதில் ஒவ்வொன்றுக்கு இரண்டரை நாழிகை நின்று, அருக்கனாகில்—மரணம், வெள்ளியாகில்—சுபம்,புதனாகில்-மக்கட்பேறு, திங்களாகில்—புகழ், சனியாகில்—சாவு, வியாழமாகில்—வஸ்திரம், செவ்வாயாகில் கடும்பகையாகும், எ-று.

மதியெழக் காலனாட்டி வாழ்புதன் கையை வைத்து
விதியினால் வெள்ளிமேய்ந்து வியாழத்திற் குடிபுகுந்தால்
சதியினாற் பகைஞர்வந்து தழலினை யிடினும் வேகா
பதியது யிந்திரன்போல் பாரினில் வாழ்வர் தாமே. 302

இ-ள். ஓரை முகூர்த்தம் வைத்து சோமவாரத்தி னுதயத்தில் கால்காட்டி புதனுதையத்தில் கைவளைகள் முதலானதுகளைப் பூட்டி வெள்ளிக்கிழமை யுதையத்தில் ஓடுமாத்தி வியாழ முதையத்தில் குடிபுகுந்தால் சத்துருக்களாலே நெருப்பிட்டுக் கொளுத்தினாலும், அந்தவீடு வெந்துபோகாது, அந்த வீட்டில் குடியிருந்தவர்கள் இந்திரனைப்போல் போக பாக்கியத்தை யடைவார்கள், என்றவாறு.

---

## காலவோரை அறியும்படி

| நாழிகை | ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| ௨½ | சூரியன் | சந்திரன் | குஜன் | புதன் | குரு | சுக்கிரன் | சனி |
| ௫ | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | குஜன் | புதன் | குரு |
| ௭½ | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | குஜன் |
| ௧௦ | சந்திரன் | குஜன் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் |
| ௧௨½ | சனி | சூரியன் | சந்திரன் | குஜன் | புதன் | குரு | சுக்கிரன் |
| ௧௫ | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | குஜன் | புதன் |
| ௧௭½ | குஜன் | புதன் | குரு | சுக்ரொன் | சனி | சூரியன் | சந்திரன் |
| ௨௦ | சூரியன் | சந்திரன் | குஜன் | புதன் | குரு | சுக்கிரன் | சனி |
| ௨௭½ | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | குஜன் | புதன் | குரு |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| உ௫ | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | குஜன் |
| உஎறு | சந்திரன் | குஜன் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் |
| ௩0 | சனி | சூரியன் | சந்திரன் | குஜன் | புதன் | குரு | சுக்கிரன் |
| ௩உறு | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | குஜன் | புதன் |
| ௩௫ | குஜன் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் |
| ௩எறு | சூரியன் | சந்திரன் | குஜன் | புதன் | குரு | சுக்கிரன் | சனி |
| ௪0 | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | குஜன் | புதன் | குரு |
| ௪உறு | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | குஜன் |
| ௪௫ | சந்திரன் | குஜன் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் |
| ௪எறு | சனி | சூரியன் | சந்திரன் | குஜன் | புதன் | குரு | சுக்கிரன் |
| ௫0 | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | குஜன் | புதன் |
| ௫உறு | குஜன் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் |
| ௫௫ | சூரியன் | சந்திரன் | குஜன் | புதன் | குரு | சுக்கிரன் | சனி |
| ௫எறு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | குஜன் | புதன் | குரு |
| ௬0 | புதன் | குரு | சுக்கிரன் | சனி | சூரியன் | சந்திரன் | குஜன் |

## அருக்கன் நிலையறிய

அருக்கனுக் கறுபதாகும் அம்புலிக் கொன்பான் பத்து
செருக்குள செவ்வாய்க்கைம்பான் தேர்ப்பாகனுக்கு நாற்பான்
பெருக்குள வியாழ னெண்பான் பேர்வெள்ளிக் கெழுபதாகும்
கருக்குள சனிக்கு மூப்பான் கடிகையா மருக்கனுக்கே. 303

இ-ள். அருக்கனாகிய ஞாயிற்றுக்கிழமைக்கு நாழிகை—60 அம்புலியாகிய திங்கட்கிழமைக்குத்—தொண்ணூறு நாழிகையாம் செவ்வாய்க்கிழமை நாழிகை—50 புதன்கிழமைக்கு நாழிகை—40, வியாழக்கிழமைக்கு நாழிகை—80, வெள்ளிக்கிழமைக்கு நாழிகை—70, சனிக்கிழமைக்கு நாழிகை—30, என்பதாம்.

வேறு

காரிதனிற் பகலருக்கன் கிழக்க தாகும்
கங்குலுக்குக் கதிரவன்றன் பகற்குத் தெற்குச்
சீரியதோ ரருக்கனிராத் திங்கட் கெல்லாந்
தென்மேற்காம் செவ்வாய்க்கு மேற்கதாகும்
பூரியசேய் தனிற்பத்தும் புந்திவட மேற்குப்
புதனிரவு பொன்னுக்கும் வடக்கே நிற்கும்
காரியெண் பொன்கடிகை பத்துங் கூட்டி
நவில்வெள்ளி யொக்கவட கிழக்குத் தானே. 304

இ-ள். அருக்கனெனவன் சனிக்கிழமை பகல் கிழக்கிலே யுதிப்பன், சனிக்கிழமை இரவும், ஞாயிற்றுக்கிழமை பகலும் தெற்கிலே யுதிப்பன், ஞாயிற்றுக்கிழமை இரவும், திங்கட்கிழமை பகலிரவும் தென்மேற்கிலே யுதிப்பன், செவ்வாய்க்கிழமை பகலும், இரவு இருபது நாழிகையும்—மேற்கிலேயுதிப்பன், செவ்வாய்க்கிழமை இரவு பத்து நாழிகையும் புதன்கிழமை பகல் முழுதும்—வடமேற்கிலே யுதிப்பன், புதன்கிழமை இரவும், வியாழக்கிழமை பகல், இரவு இருபது நாழிகையும்—வடக்கிலே யுதிப்பன், வியாழக்கிழமை இரவு, பத்துநாழிகையும், வெள்ளிக்கிழமை பகலிரவும்—வடகிழக்கிலே யுதிப்பன், என்பதாம், எ-று.

வேறு.

சனிபகல்கீழ்த் திசையிலந்த விரவினொடு தபனன்
றன்பகலுந் தெற்கினிலவ் விரவுமதி முழுதும்
இனியவிரு தியிற்செவ்வா யினிலெம்பான் கடிகை
யியன்மேற்கி லதின்மிகும்பத் தெனுங்கடிகை யோடு
மனியபுதன் பகல்வாயு வினிலந்த விரவும்
வயங்குருவுமென் றினத்தைம்பான் கடிகையுனல் வடக்கிற்
றுனியிலதின் மிகுதியொடு பிருகுதின முழுதுஞ்
சூலிதிசை யினிற்பகுதி துன்னியிருப் பானே. 305

இ-ள். சனிக்கிழமை பகல் கிழக்கிலே யுதித்த அருக்கனென வன், கிழக்குமுதலாகவடக்கிழக்கீறாக வலமே எட்டுத்திக்கிலும்—மூன்றே முக்கால்நாழிகைக்கொரு திக்காகச் சஞ்சரிப்பன், சனிக்கிழமை இரவும், ஞாயிற்றுக்கிழமை பகலும் தெற்கிலே யுதித்த அருக்கனனவன் தெற்கு முதலாகத் தெங்கிழக்கீறாக வலமே எட்டுத்திக்கிலும்—ஏழரை நாழிகைக்கொரு திக்காகச் சஞ்சரிப்பன், ஞாயிற்றுக்கிழமை இரவும், திங்கட்கிழமை பகலிரவும், தென்மேற்கிலே யுதித்த அருக்கனனவன் தென்மேற்கு முதலாகத் தெற்கீறாக வலமே எட்டுத்திக்கிலும்—பதினென்றேகால் நாழிகைக்கொரு திக்காகச் சஞ்சரிப்பன், செவ்வாய்க்கிழமை பகலும் இரவும் இருபது நாழிகையும், மேற்கிலே யுதித்த அருக்கனனவன் மேற்கு முதலாக வடமேற்கீறாக இடமே எட்டுத்திக்கிலும்—ஆறேகால் நாழிகைக்கொரு திக்காகச் சஞ்சரிப்பன், செவ்வாய்க்கிழமை இரவு பத்துநாழிகையும் புதன்கிழமை பகல் முழுதும், வடமேற்கிலே யுதித்த அருக்கனனவன் வடமேற்கு முதலாக வடக்கீறாக இடமே எட்டுத்திக்கிலும்—ஐந்து நாழிகைக்கொரு திக்காகச் சஞ்சரிப்பன், புதன்கிழமை இரவும், வியாழக்கிழமை பகலும் இரவு இருபது நாழிகையும்—வடக்கிலேயுதித்த அருக்கனனவன் வடக்கு முதலாக வடகிழக்கீறாக இடமே எட்டுத்திக்கிலும்—பத்து நாழிகைக்கொரு திக்காகச் சஞ்சரிப்பான், வியாழக்கிழமை இரவு பத்து-நாழிகையும் வெள்ளிக்கிழமை பகலிரவும் வடகிழக்கிலே யுதித்த அருக்கனனவன் வடகிழக்கு முதலாகக் கிழக்கீறாக இடமே எடடுததிக்கிலும் எட்டேமுக்கால் நாழிகைக்கொரு திக்காச் சஞ்சரிப்பன். அருக்கன் நிலை இதுவென்றே காண்க, எ-று.

காரிரவுங்கதிர் பகலுந் தெற்கே யாகுங்
கதிரிரவும் மதிமுழுதுங் கன்னி மூலை
ஆலது காற்பதுவும் மேற்கே யாகும்
அதின்குறையும் புதன்பகலும் வடமேற்காகும்
போர்வடக்கே பொன்னருக்கன் எழுப தாகும்
புகர்முழுதும் வடகிழக்கா மெண்ப தாகும்
கார்பகலே அருக்கனிலை கிழக்க தாகும்
கருதுகின்ற அக்கினியே சூன்ய மாமே. 306

## இந்த அருக்கன் நிலையைக் கொண்டே பல்லிக்கும் பலன் சொல்லலாம்.




பல்லி சொல்லியபொழுது இங்கேகாட்டிய 16—திசைப்படி அது எத்திசை என்றுணர்ந்து அத்திசைவரையும் அப்பொழுதைக்

குரிய அருக்கதிசையை முதலாகக் கொண்டெண்ணி முதற்பல மாகிய பகையை முதலாகக்கொண்டு கண்ட தொகைக்குரிய பலன் இன்னதென்பதை பிற்கூறியபடி யுணர்ந்துகொள்க.

---

## அருக்கன் நிலை.

அருக்கன்மேற் பகைநாசம் ரெண்டிற் சாவு
அகன்றவம்பின் மீண்டிடுவார் மூன்றே யாகில்
உருக்கமுளார் சாவதனைக் கேட்க நான்கு
ஒருசண்டை யுண்டைந்தே உறவு மாறு
விரிதலையு மழுகுரலும் மழையும் கோயாம்
மென்மேலுந் துக்கமுண்டா மேழுக் கப்பா
தரித்திடும்பூச் சந்தனமும் மணமுங் கொண்டு
தகுதியுள்ளோர் கூடிவா லெட்டுச் சித்தம். 307

சித்தமிக மகிழ்ச்சியுண்டாம் நாலோடைந்து
தீதென்றே தானுரைக்கும் தெளிவாய் பத்து
அத்தமிசை யாத்திரைகா ணாறே டைந்து
அகமகிழ்ச்சி கல்யாண மாறே டாறு
பத்திவருங் காணிக்கை பதிமூன் றிற்குப்
பறந்துவரும் இழவோலை பதினான்குக்கு
மெத்தவரு முறவின்முறை யேழோ டெட்டும்
மென்மேலும் போகமுண்டாம் பதினாறுக்கே. 308

௧-பகை நாசம்
௨-மரணம்
௩-வரவு
௪-அபஜெயம்
௫-கலகம்
௬-உறவு
௭-சஞ்சலம்
௮-கல்வாவு
௯-சந்தோஷம்
௧0-பயம்
௧௧-யாத்திரை
௧௨-மகிழ்ச்சி
௧௩-பொருள்வரவு
௧௪-மரணக்கேள்வி
௧௫-௧௬-நன்மை

---

## வார சூலம்.

சனியுந் திங்கள் கேர்கிழக்கு தக்க செவ்வாய் புதன் வடக்கு
இனிய வெள்ளி கதிர்மேற்கு இசைந்த வியாழந தெற்காகும்
துனிய சிவனர் கைசசூலத் தெதிரே செல்ல லாகாது
கனியப் பிணியு மதனலாங் கண்டே யுணர்ந்து நடப்பீரே. 309

இ-ள். திங்கள், சனி—கிழக்கே சூலம், செவ்வாய், புதன்—வடக்கே சூலம், ஞாயிறு, வெள்ளி—மேற்கே சூலம், வியாழன்—தெற்கே சூலம், ஆகையால் இந்த வாரங்களில் இந்தத் திக்குகளில் பிரயாணமாகலாகாது, அப்படி பிரயாணமானல் அதனல் பலவித மான துன்பமுண்டாம், எ-று.

---

### வாரசூலம் வெண்பா.

பொன்னுகதி ரங்கு புதனீசன் வெள்ளிமதி
கன்னிசேய் காரிரண்டுங் காற்றுமூலை—புன்னியறி
ஐமுக்கால் நாழி யவதிசெயும் பின்வலத்தில்
உய்நோக்க வெற்றி யுறும். 310

| | |
|---|---|
| வியாழம் ஞாயிறுக்கு | அக்கினிமூலை சூலம் |
| புதனுக்கு | ஈசானியமூலை சூலம். |
| வெள்ளி திங்களுக்கு | கன்னிமூலை சூலம் |
| செவ்வாய் சனிக்கு | வாயுவுமூலை சூலம் |

இந்தச் சூலங்களில் முன்வைத்து யெதிரே நடந்தால்-மூன்றே முக்கால் நாழிகையில் அவதியுண்டாம், இடப்புறம்வைத்து நடந்தால்—மத்திபம், பின்புறம் வலதுபுறம் வைத்து நடந்தால்—வெற்றியுண்டாகும்.

---

## திதிக்குச் சூலம்.

| | |
|---|---|
| பிரதமை—நவமி | கிழக்கே சூலம் |
| துதியை—தசமி | வடக்கே சூலம் |
| பஞ்சமி—திரயோதசி | தெற்கே சூலம் |
| சஷ்டி | மேற்கே சூலம் |

மற்ற திதியில் நல்லதினம் சூலமில்லை, என்பதாம்.

---

## சூலக்கால மறிய.

திங்களுஞ் சனியுஞ் சூலந் திசழ்ந்திடுங் கடிகை யெட்டாம்
பொங்குபொன் னிருபான்தெற்கு புகர்கதிர் மேற்கீ ராறும்
அங்குஜன் வடக்கீ ராறும் அத்திசை புதனீ ரெட்டிற்
றங்குசூ லத்தையீசன் தரணியி லிடுவர் தானே. 311

திங்கட்கிழமையும், சனிக்கிழமையும், எட்டுநாழிகையளவும், வியாழக்கிழமை இருபது நாழிகையளவும்,வெள்ளிக்கிழமை, ஞாயிற்றுக்கிழமை பனிரண்டு நாழிகையளவும், புதன்கிழமை பதினாறு நாழிகையளவும் சூலகாலமாம், எ-று.

---

## தேங்காய்ச் சகுனம்.

முடிபெருத்து வட்டமிட்டத் திருவே சேரும்
மூன்றிலொரு பங்குடைந்தால் முசியாவாழ்வு
நெடியபங்கி லேந்திரண்டு குறையாச் செல்வம்
நீங்குநாம் பேயிடித்தால் நிதான வாழ்வு
கடுகளவே வுள்ளானல் ரத்னஞ் சேரும்
கைதவறிக் கீழ்விழுவே கனத்த பூசல்
அடியவருக் கருள்புரியும் வடிவேல் முன்னேன்
ஆனைமுகன் தேங்காயி னளவி தாமே. 312

இ-ள். முடிபெருத்து அடிசிறுத்தால் இலட்சுமிவிலாசமுண்டு மூன்று பங்கு சிரசிலும் ஒருபங்குபாதத்திலு மானாற் குறைவற்ற வாழ்வுண்டாகும், நெடிய பங்கு ஐந்தில் இரண்டு மானாற் செல்வமுண்டு, நரம்பு பிடித்தால் நிதான வாழ்வாம், கடுகுப் பிரமாணமாவது இதன் தேங்காயினுள் விழுந்தால் ஒன்பதுவகை நவரத்தினங்களுஞ்சேரும், கைதவறித் தேங்காயைக் கீழே விட்டுவிட்டால் சண்டை, சச்சரவு, கலகம், துன்பமுண்டாம், எ-று.

உண்டிரண்டு தனக்கு நன்மையோர் காலாறாய்
உடையவெகு துன்பமது வோதக் கேளு
கண்டுமெய்யிற் கண்டெறித்தால் மரண மாவன்
கனத்தகல் லோடுவிட்டா லசனம் வெல்லம்
விண்டோடு தெறித்திடுமேற் பிணியாம் மெய்யில்
மேதினியி லேவிழுந்தால் விலையாங் கண்டீர்
பண்டுதமி ழறிந்தோதும் மயனார் சொன்ன
பாடற்றேங் காய்ச்சகுனம் பகரக் கேளே. 313

இ-ள். நடுமத்தியாயுடைந்தால்—நன்மை, நாலுசுக்கல் ஆறுசுக்கலாய் உடைந்தால்—வெகு துன்பம், தேங்காய்க்கண் தெறித்தால்—எஜமானன் மரணமாவான், ஓடிவிட்டால் — புசிப்பதற்கு அன்னங்கிடைக்க மாட்டாது. ஓடுதெறிந்தால்—சரீரத்திற் பிணியுண்டாகும், கைதவறிப் பூமியிலே விழுந்தால்—எஜமானன் விலையாய்ப் போய்விடுவான், எ-று.

வாங்கிய தேங்காய் தன்னை மகிழ்வொடு சிற்பன் றானுந்
தாங்கியே யுடைக்கும்போது தவறியே வீழு மாகிற்
பூங்கொடி மரணமாவள் பூமகள் தானும் நில்லாள்
பாங்கொடு மயனார் சொன்ன பண்டுநூ லிதுவு மாமே. 314
உற்றிடு முகூர்த்தத் தேங்கா யுடைத்திடும் பலனைக்கேளு
மற்றது தெறிக்கச் சாவன் வளரும் பெண்முடி பெருக்கிற்
கற்றறி புதல்வ ருண்டாங் கண்விடில் வாழ்வு குன்றும்
சற்றதி லழுக லாகிற் றுன்செயுங் கருமந் தீதே. 315

## சுக்கிரபலன்.

இருங்குரு வெள்ளிதானும் இலக்கனம் நாலேழ் நிற்கில்
வருங்கதி ராறில்நிற்க மந்தன் பாம்பேழில் நிற்கப்
பெரும்புறங் கோயில்வீடு பீடமே செய்வீராகில்
திருந்திய வருஷம்நூறு தீர்க்கமாய் விளங்குமென்னும். 316

இ-ள். குருவும், சுக்கிரனும் லக்கனத்துக்கு 4-ல், 7-ல் நிற்க, சூரியன் 6-ல் நிற்க சனியும் ராகுவும் 7-ல் நிற்கக் கோபுரஞ்சாலை வீடு மாளிகை இதுகள் கட்டினால் அம்மனை நூறு வருஷம் பிரகாசித்திருக்கும், எ-று.

---

## சுக்கிரன்பாடு.

சுக்கிர னெதிரே யாகிற் றூல்குடி சாவு கேடாம்
சுக்கிரன் வலக்கண் ணாகிற் றேன்றிய பொருளுஞ் சேதம்
சுக்கிரன் பின்னே யாகிற் சுகமுடன் வாழ்வ தாகும்
சுக்கிர னிடக்கண்ணாகிற் றுக்க மொன்றில்லை யென்னே. 317

இ-ள். சுக்கிரனுக் கெதிராக மனையெருக்கில் மரணம் கேடுண்டாம். சுக்கிரன் வலக்கண்ணாகிற் பொருள் சேதமாம். சுக்கிரனுக்குப் பின்னேயாகிற் சுபமுண்டு, சுக்கிரனுக்கு இடக்கண்ணாகில் மகாவுத்தமம், வெள்ளியின்பாடும், மூடமும் ஆகாது, புதுமனை கோலவும், குடிபுகவும் நாள்பார்க்க நன்றாய், எ-று.

மேடமிடபம் கீழ்கிழக்கு மிதுனந் தென்கீழ்த் திசையாகும்
தேடுங் கடகஞ் சிங்கமது தெற்குத் தென்மேற் றிசை கன்னி
கூடுந் துலாமும் விருச்சிகமுங் குடக்காம் வடமேற் றனுவாகும்
நீடு மகரங்குடம் வடக்கு நிலையாம் வடகீழ் மீனமதுவே. 318

இ-ள். மேடம், ரிடபம்—கீழ்த்திசை, மிதுனம்—தென்கீழ்த் திசை, கடகமும், சிங்கமும்—தென்திசை, கன்னி—தென்மேற்கு, துலாம்விருச்சிகம்—மேற்கு, தனுசு—வடமேற்கு,மகரம்,கும்பம்—வடக்கு, மீனம்—வடகிழக்காம், எ-று.

# கோள் சக்கர நிலை.

ஈசான்யம்முதல் மீனம் ஆகிராய் வைத்துப் பனிரண்டு ராசியும் இந்தச் சக்கரத்தைப் பிரதட்சணமா யெழுதி கர்த்தன் ராசிக்கு விடப்படுகிற விடத்தை எண்ணிக்கொண்டு வரும் சக்கரமாகையால் கர்த்தன் நாமராசியிலும் ஐந்தா மிராசியிலும் ஒன்பதாம் ராசியிலும் வீடு கட்டினுல் பந்துக்களைப் போஷிப்பான் அவன்ராசிக்கு 3, 7, 11 இந்த ராசியில் வீடுகட்டினுல் அன்னியரைப் போஷிப்பான் 2, 6, 10 ராசியில் வீடுகட்டினுல் நாசமாம்.

| | | | |
|---|---|---|---|
| மீனம் வடகிழக்கு | மேடம் கிழ | ரிடபம் க்கு | மிதுனம் தென்கிழக்கு |
| கும்பம் வ | திசைகளின் விபரம் | | கடகம் தெ |
| டக்கு மகரம் | | | ற்கு சிங்கம் |
| தனுசு வடமேற்கு | விருச்சிகம் மே | துலாம் ற்கு | கன்னி தென்மேற்கு |

அகமுறு ஜென்ம மூன்று மைந்தாட் ஹறு மேழும்
பகருமொன் பதுவும் பத்தும் பதினொன்று நன்மை யாகும்
இகழுள விரண்டும் நான்கு மெட்டுமீ ராறு மாகா
புகழுள ராசி தன்னிற் பொருத்தம அரைத்திடாயே. 319

இ-ள். ஜெனனமும் 3, 5, 6, 7, 9, 10, 11-இந்தராசிகள் பொருந்தும், இதுகள் தவிர 2, 4, 8, 12 பொருந்ாது ஆகையால் ஜென்ம நட்சத்திரமாவது நாமநட்சத்திரமாவது பார்த்துச் சொல்லவும், எ-று.

## வேறு சந்தம்.

வட்டமேட மீனகும்பம் வடக்கு மேற்கு வாசலாம்
விட்ட மகரந் தனுவுந்தேளும் விளங்கு மேற்குத் தெற்கதாம்
தொட்ட கோலுங் கன்னி சிங்கம் அலங்குங் கிழக்குத் தெற்கதாம்
மட்டக் கடகம் மிதுனமேறு வடக்குங் கிழக்கு மாகுமே. 320

இ-ள் மேடம், மீனம், கும்பம் இந்த மூன்று ராசிக்காருக்கும் மேற்குந் தெற்கும் ஆகும், துலாங்கன்னி சிங்கம் இந்த மூன்று ராசிக்காரருக்கும் கிழக்குந் தெற்குமாம் கடகம், மிதுனம் இடபம் இந்த மூன்று ராசிக்காரருக்கும் கிழக்குந் தெற்குமாம். கடகம், மிதுனம் இடபம் இந்த மூன்று ராசிக்காரருக்கும் வடக்குங் கிழக்கும் வாசல் வைத்துக் கொள்ளவும், எ-று.

ஆனியுங் கன்னி மிக்க அந்தமார் கழியி னூடு
கூனியிந் நான்கு மாதங் குடிபுகார் மனையுங் கோலார்
ஈனமுற் றிடுமிம் மாதத்திவை செயிற் றொலையா நோயாம்
வானினற் றேவரேனும் மாள்வது திண்ண மாமே. 321

இ-ள் ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி, இந்த நான்கு மாதத்திலும் வீடுகட்டில் தொலையாத நோயும் வறுமையுமுண்டாம் தேவர்களானாலும் பொல்லாப்பை யடைவார்கள், எ-று.

---

## உதாரணம்.

ஆடித் திங்களில் ராவணன் பட்டதும்
ஆவித் தேபெரும் பாரதம் மார்கழி
நாடிக் கன்னி யிரணியன் மாண்டதும்
நஞ் சருந்தின ரீசனுங் கூனியில்
பாடிக் காமனும் வெந்ததப் பங்குனி
பார்க்கு ளோகினன் மாபெலி யாணியில்
வீடிட் டிலெங் குடிபுக வேண்டினோர்
வீடு விட்டிடா அன்ப ருலகிலே. 322

இ-ள. ஆடிமாதத்தில் இராவணன் முடிகுலேந்தான், மார்கழி மாதத்தில் பாரதயுத்தம் முதலான வீணென பொல்லாங்குகள் விளை ந்தன, புரட்டாசியில் இரணியன் மாண்டான், பஙகுனிமாதத்தில் சிவன் ஆலகால விஷத்தை யமுதாகக் கொண்டார், மன்மதனும் அப்பங்குனி மாதத்தில் எரிந்தான், மாபெலிச் சக்கரவர்த்தி ஆனி மாதத்தில் ஊரைவிட் டோடினார் ஆகையால் ஆனிமாத முதலாகிய மேற்சொல்லிய மாதங்களில் மனைகோலவாவது குடிபுகவாவது யத்தனித்தால் அந்த யிடத்தைவிட்டு நீங்குவதுமல்லாமல் பிச் சைக்குப் போவார் தேவர்களாலுந் தடுத்திட வரிதாம், எ-று.

---

## கிரகம் நின்ற ராசிப்பலன்.

பொருது மந்தணன் புந்திபன் றேன்றினில்
அரிய ஓரையி லாசனன் கேந்திரம்
மருவு லாவிய மாளிகை செய்வீரால்
வருஷ மாயிரம் மண்ணில் விளங்குமே. 323

இ-ள். புதனும், வியாழனும் பதினோரா மிடத்திலிருக்க அல் லது ஓரையாக, வெள்ளிகேந்திர திரிகோணத்தி லிருக்க மனைகோ லில் அந்தமனை ஆயிரம் வருஷம் பிரகாசித்திருக்கும், எ-று.

பரவு திங்கள் பொன் பத்துமில் நாலுறத்
தாணி சேயசத் தாகப்பன் னென்றினில்
வரையி லெய்திய வாழ் மனை செய்திடில்
வருஷ மென்பது மண்ணில் விளங்குமே. 324

இ-ள், சந்திரனும், வியாழனும் பத்தாமிடத்தில் அல்லது நாலாமிடத்தில் நிற்கச் செவ்வாய் பலயினைப் பதினோராமிடத் தில் நிற்க, மனைகோலில் அந்தமனை எண்பதுவருஷம் பிரகாசிக் கும், எ-று

பார்ம கன்புகர் பாலும்பொன் றுடன்
ஓரை மூன்றுய வாந்தினி லுற்றிட
ஊரி டப்புற மோர்நகர் செய்திடில்
ஏர்கொள் ரெண்டுறா முண்டுவி ளங்குமே. 325

டு)-ள். செவ்வாய், சுக்கிரன், ஆதித்தன், வியாழன், இவர்கள் ஆறுமிடத்தில் நிற்க அல்லது ஓரையிலேனும் மூன்றுமிடத்திலேனும், ஐந்தாமிடத்திலேனும் நிற்க, மனைகோவில் அந்தமனை இருநூறுவருஷம் பிரகாசிக்கும், எ-று.

தூய வோரைப் தேழினிற் சொல்லிய
மேய திங்கள் புதன்குரு மேவவே
கோயில் மாநகர் கூரகந் செய்விரால்
ஆய வாண்டது நூறுவி ளங்குமே 326

இ-ள். ஓரை அல்லது பத்தாமிடத்தில் ஏழாமிடத்தில் சந்திரன், புதன், குரு இவர்கள் நிற்க ஆலயம், ஊர், கிரக முதலியவையியற்றில் நூறுவருஷம் பிரகாசிக்கும், எ-று.

வேறு.

மந்திரி யேழில் நிற்க மனையது செய்வீ ராகில்
அந்தகம் புக்கு முன்னே அரசன்வந் தாண்டு கொள்வான்
புந்திசே யேழில் நிற்கப் புத்திர னொருவன் சாவன்
இந்துவந் தேழில்நிற்க யெரிந்துபோ மழவிலென்னே. 327

இ-ள். வியாழன் ஏழாமிடத்தில் நிற்க மனைகோவில்—அந்தமனை கட்டிமுடிவதற்குமுன் அரசன் சுவாதீனமாகும். புதனுஞ் செவ்வாயும் ஏழாமிடத்தில் நிற்க மனைகோவில்—அம்மனைக்குடையவன் ஒரு புத்திரனை யிழப்பன், சந்திரன் ஏழில் நிற்க மனைகோவில்—தீப்பட்டெரிந்துபோம், எ-று.

உரைபுகர் வியாழந் திங்கள் ஓரையேழ் பத்தில் நிற்க
வரையா மனைகள் கோவில் வருடமா யிரமு மன்னி
பருமணி காடரங்கள் பராக்கிரம மவர்க்குப் பூமன்
திருவருள் புரிந்த வேந்தர் திருவருள் பெருகு வாரே. 328

இ-ள். சுக்கிரன், வியாழன், சந்திரன் இவர்கள் ஓரை அல்லது ஏழாமிடம் பத்தாமிடத்தில் நிற்க மனைகோவில்—அந்தமனை தன

தானியங்களுடனும் எஜமானுடைய சுற்றத்தாருடனும் ஆயிரம் வருஷம் பிரகாசிக்கும், எ-று.

---

## சுவர்வெடிப்பு லட்சணம்.

ஆனதோர் சுவர்வெடிப்பு அடுத்ததோர் கிழக்கு நாசம்
வானத்தி மூலையல்லால் மாமகோ ரந்தெற் குக்கு
தேனுநல் கன்னிபோகந் சிறந்ததோர் மேற்கு ஆக்கம்
கோன்வட மேற்குச்சாவு குறித்தநல் வடக்கு லாபம். 329

இ-ள். சுவர் வெடிப்பு வடகிழக்கு கிழக்கு—நாசம், தீமூலை—அல்லல், தெற்கு—அகோரம், (கன்னி மூலை) (தெ. மே.)—போகம், மேற்கு—ஆக்கம், வடமேற்கு—மரணம், வடக்கு—லாபமாம், எ-று.

---

## சுவர்கனம் உயர்வு லட்சணம்.

ஒருமுழம் அகலப் பிரமாணத்திற்கு இரண்டு முழப்பிரமாணம் சுவர் வைக்கவேண்டும், பத்துச்சாண் உயரமுள்ள சுவர்-பிராமணர்களுக்கும் அரசர்களுக்குமாம், ஒன்பது சாண உயரமுள்ள சுவர்—வைசியர்க்கும், சூத்திரர்க்குமாம், எட்டுச் சாண் உயரமுள்ள சுவர்-சங்கராசாதிகட்காகும், இந்தக் கணக்கிற்குக் குறைவா யிருக்கலாகாது. இதையறிந்து செய்யவேண்டியது சுவர் வைக்கும்போது விழுந்தால்—சோராபயம், வெளிப்பக்கமாய்ச் சுவர் விழுந்தால்—கலகம், உட்புறம் விழுந்தால்—வீட்டுக்குடையவனுக் காகாது.

---

## வாணம் சுவர் விரிவுகளின்குறி.

வாணமாம் சுவரி லீசன் வழங்குமிந் திரனே நன்மை
காணலக் கினியே அன்பங் கருதிடி லெமனு மாகா
மாணவே நிருதி செல்வம் வருணனே தவங்களுண்டாம்
கோணவே வாயு சோமாங் குபேரனுக் கழகுண்டாமே. 330

இ-ள் வாணம், சுவர், இலைகளில் விரிவுகாணில் அதன்பலன்கள் வடகிழக்கு, கிழக்கு இதில் விரிந்தால்—நன்மை, அக்கினியில்-துன்பம், தெற்கில்—தீது, தென்மேற்கில்—செல்வம், மேற்கதாகில் தவமேறும், வடமேற்காகில்—பீடைகாட்டும், வடக்காகில் அழகு பெற்றுச் செல்வமுண்டாமென்றவாறு.

---

## திசைபொருதல் மறுமாடி.

குடக்குத் தெற்கு மனைபேரிற் குற்ற மிகவே தானுண்டு
வடக்குங் கிழக்கு மனைபேரில் வாழ்வு முண்டு மிகநன்றாம்
எடுப்புச் சாய்ப்பு மிகவாகா வென்னுங் கருமங் கெடுதியதாம்
முடுக்குங் கோடி மறுமாய மூலைவாங்கி லதுதீதே. 331

இ-ள். குடக்குத்திசையாகிய மேற்கும், தென்திசையாகிய தெற்கும் மனைபேரில்—குற்றமுண்டாம், வடக்குங் கிழக்கும் மனைபேர்ந்தால்—உத்தமம், எடுப்பு, சாய்ப்பு, முடுக்கு, கோடி, மறுமாடிகள் மூலை வாங்கியிருந்தா லாகாது, எ-று.

### வேறு.

கூறுவிரலால் முகடு கொண்டமறு மாடி
மாறுபட வானதுவும் வாழ்மனை யெடுக்கில்
ஏறிவரு நோய்கவிவு மிவ்வளவ வாகும்
வேறுபடும் வெம்பகை விளைந்திடுதல் மெய்யே. 332

இ-ள். மனையெடுக்கும்பொழுது முகடுகள், மறுமாடிகள், மாறுபாடாக மனையெடுத்தால்—வியாதியால் கற்புநிலைமை வழாது, நடத்திய மனைவியானவள் மரணமாவாள், எ-று.

---

## ஆண்மரக் குறிப்பு.

அடியுந் தலையுஞ் சரியாக அரனைவாலுங் கயிற் போலப்
பிடியுந்தானு மொழுங்காகப் பிரளத் திரட்சி யுண்டாகி
மடியா துயரம் சேருளதாய் வருமே ஆணின் மரமாக
கொடியா யுளதென் றேமயனுர் கோகா துரைத்த வாறிதுவே.

## ஆண் மரம்.

காணவே மரங்கடன்னைக் கருத்துட னறியும்போது
தூணெனத் திரண்டு நின்று சுத்தமா யொழுங்கதாக
நீணுயர்ப் பாரின் மேலே நின்றிடு மாகில் நல்ல
ஆண்மர மென்று சொல்லி யறைந்தனர் வேதத் தோரே.

இ-ள். ஆண்மரமானது தூண்போலத்திரண்டு நீண்டு வொழுங்காயிருக்குமாகில ஆண்மரமெனறு சொலவது, எ-று.

## பெண் மரம்.

கண்ணுற மரங்கடன்னைக் கருதியே பார்க்கும் போது
விண்ணுமை யடிபெருத்து மேலது சிறுத்து நின்றால்
பெண்ணென வகுத்துநன்றாய்ப் பெருமையா யோதலாம்பின்
றண்ணெனத் தமிழேயோதுந் துரிதமாய் மயன்சொன்னரே.

இ-ள். பெண்மரம் அறிவதானல் அந்த மரமானது அடிபெருத்து நுணிசிறுத்து இருக்குமாகில அதைப் பெண்மரமென்று அறிந்து சொல்வது, எ-று.

## அலிமரம்.

இலகிய மரங்கடன்னை யியல்புடன் பார்க்கும் போது
நிலமதிற் சிறுத்து நீண்டு நெடுமைய தாகிப் பின்னுந்
தலையது மிகப்பெருத்துந் தானது நிற்கு மாகில்
அலிமர மாகுமென்றே அறைந்தனர் வேதத் தோரே. 336

இ-ள். அலிமரமாவது சிறுத்து நீண்டு நெடுமையாகித் தலை யானது பெருத்து நிற்குமாகில் அதை அலிமரமென்று சற்றேனும் ஐயமில்லாமற் சொல்லவேண்டும், எ-று.

---

## ஆகும் மரங்கள்.

தேக்குசந் தனமும் வேம்பும் செம்மணுவ் கடுக்கை தூபம்
மாக்கொன்றை யிலுப்பை காவல் மருதுடன் நுணாவும் வேங்கை
யாக்கிரு பூடிசிலை யாச்சாவெள் ளொடுவை மூங்கில்
பாக்குதென் னைக்கடம்பு பாலொடு புரசு மரமே. 337

---

## மரங்கட்டப்படுகின்ற விபரம்.

கருதுமாண் மரமே யாகிற் காலொடு தூணுக் காகும்
மருவுபெண் மரமேயாகில் வளையுத்ரம் போதிகைக்காகும்
விரவலி மரமே யாகில் விட்டமுஞ் சட்ட மோடு
உரவிய கைக்குகந்த வுத்தம மரங்க ளாமே. 338

இ-ள். ஆண்மரமாகில்—கால்தூணுக் காகும், பெண்மரமாகில்—வளையுத்திரம் போதிகைக்குமாகும், அலிமரமாகில் — வட்டஞ், சட்டம் கைகளுக்கு ஆகும். இவை யெல்லாம் உத்தமமான மரங்கள், எ-று.

## கதவுநிலை செய்ய

மாமரந் தேவர்க் காகும் மறையவர் வேம்ப தாகும்
கோமன் தேக்க தாகுங் குணமுள வலுப்பை செட்டி
பூமகன் வேங்கையாகும் பொருசாதி நான்கினுக்கும்
தாமமாங் கதவுகம்பை தருமயன் சாற்று வாரே. 339

இ-ள். மாமரம்—தேவர்களுக்காகும், வேம்பு—பிராமணர்களுக் காகும், தேக்கு—இராஜர்களுக்காகும், இலுப்பை செட்டிகளுக்கா கும், வேங்கை வேளாளர்களுக்காகும், எ-று.

---

## மனையிற் போடக்கூடா மரங்கள்.

அத்தியு மாலு மித்தி யரசுட னிலவு தானும்
கத்திய புரசு குச்சம் கவின்றிடு மிலந்தை பீலி
வித்தக மகிழுங் கூறும் விளாவுட னிவைக ளெல்லாம்
சித்திரா யாங்கள் கட்டச் செல்வமுங் குன்றுந் தானே 340

இ-ள். அத்தி, ஆல், இத்தி, இலவு, அரசு, புரசு, குச்சம், இலந்தை, பீலி, மகிழம், விளா இவைகளால் வீடுகட்டினுல் இருக் கப்பட்ட செல்வமும் புத்திர பாக்கியமுங்குறைந்து வறுமைமே விட்டு அதிகத் துன்பத்தை யுண்டாக்கும், எ-று.

சீறிய காற்றில் வீழ்ந்த திறமை சேர் மரமு மல்லாற்
கூறிய ஆலயத்திற் குணம்பெற நிற்கும் கல்ல
ஈறிய மர மயானத் திருந்திடு மரம கந்தான்
மாறியே கட்டு மாகில் வம்மிஷம் நாசமாமே. 341

இ-ள். காற்றி லடிபட்டு விழுந்தமரம், ஆலயத்தில் நிற்குமரம், மயானத்தி லிருக்கும் மரம், இவ்வகைப்பட்ட மரங்களால் வீடு கட் டடஞ் செய்தால் செல்வங் குறைந்து ஆயுள் க்ஷீணித்து வம்சம் நாசமாகும், எ-று.

வெண்பா

பருத்தி யகத்தி பனையெட்டி காவல்
எருக்குப் புளிதான்றி யிவ்வேர்—பெருக்கமுடன்
எந்தமனை யாயிடினும் இந்த்ரபத மானாலும்
அந்தமனை பாழாய் விடும். 342

இ-ள். பின்னுங் குழிகெல்லுமிடத்தில் பருத்திவேர், அகத்தி வேர், பனைவேர், எட்டிவேர், காவல்வேர், எருக்குவேர், புளிவேர், இலவு இவ்வகைப்பட்ட மரங்களின்வேர் இருக்குமானால் தாமரைக் கமலத்தில் வீற்றிருக்கின்ற இலட்சுமியானவள் இவ்வீட்டிலிருந்து ஆனந்தத் தாண்டவஞ் செய்வதற்கு மனமில்லாமல் வெறுத்து இம் மனையைவிட்டு நீங்குவாள், எ-று.

---

# ஆகாமரங்கள்.

கன்னிவேல் விடத்தை வில்வங் கருங்காலி விளப் பரம்பை
முள்ளுள்ள மரங்கள் தேவர் முனிவர்க்காம் மனிதர்க்காகா
வள்ளிய வாகை கூகை வக்கண மழிஞ்சி யாத்தி
உள்ளபூ வுசிலி லந்தை யொருவர்க்கு மாகா தென்னே. 343

இ-ள். மனை மாடகூடங்களுக்கு ஆகாதமரங்கள் சொல்லும் படி கள்ளிமரம, வேலாமரம், விடத்தைமரம், வில்வமரம், கருங் காலிமரம், விளாமரம், பரம்பைமரம், இப்படி முள்ளுள்ள மரங்க ளெலலாந் தேவர்க்காகும், மனிதர்க்காகாது, வாகைமரம், கூகை மரம், வக்கணத்திமரம், அழிஞ்சிமரம், குருக்காத்திமரம், உசில மரம், இலந்தைமரம் இப்படிப்பட்ட மரங்களெல்லாம் ஒரு வருக்கு மாகாது, எ-று.

வன்னி கள்ளி விடத்தலைவேல் வாகை வில்வங் காலி விளவு
துன்னும் பரம்பை முள்ளதுவும் தோன்று மனையி லது சேரில்
அன்னங் கிடப்ப தரிதாகும் அரசன் மரணம் சிலுகு பெறும்
முன்னுள் முனிக்குத் தேவருக்கும் மொழியு முறையு மிதுவாமே.

வக்கணு வாகை கூகை வருஞ்சிலை யழிஞ்சி மற்றும்
நிக்கொணுப் பூவு சிலை நேரிய குருக்கு அத்தி
ஒக்கநால் வேதத் தோர்க்கும் உயர் முனி வோர்க்கு மாக
பொக்கெனத் தீதா மென்று புகன்றனன் மயனுந் தானே. 345

கானகந் தன்னில் வெட்டுங் கணக்கதைக் குறிப்பாய் நோக்கில்
ஆனதோர் குற்ற மில்லா தாண் மரந்தன்னைப் பார்த்தே
ஊனமுந் தேரை பொந்து வுறத்தவு ஊளைச லில்லா
தானதைக் கம்ப மாகச் செயப் பிரதிஷ்டை தானே 346

இ-ள். குறிப்பான ஆண் மரம்பார்த்துக் குற்றமில்லாததாய்த் தேரைகள பொந்துக ளிலலாததாய் உளவளைச ல்லாததாய்ப் பார்த்து வெட்டுவதென்றவாறு.

அடிதலை யிரண்டு மொத்த வாண்மர மதுவே யாகும்
அடிபெருத் ததுவே பெண்ணு மம்மரந் தலைபெ ருக்கில்
வடிவுள்ள அலிய தாகும் வளை களுத் திரங்கள் போதி
மடிவிலா விட்டஞ் சட்டம் பெண்மர மாகுந் தானே. 347

இ-ள். அடியுந் தலையுந் திரண்டிருந்தால்—ஆண்மரமாம், அடியுந் தலையும் பெருத்து இடை சிறுத்திருந்தால—பெண்மரமாம், தலை பெருத்து மறறெங்கும் மெலிந்திருந்தால்-அலியாகும், ஆகையால் ஆண்மரங்கள் தூணுக்காகும், மற்ற சாமான்களுக்குப் பெண் மரமாகு மென்றவாறு.

---

## கம்பப் பிரதிஷ்டை.

தான்பிர திஷ்டைக் கம்பந் தலைசம னுகில் வாழ்வாம்
கான்வடக் கொடுநீழ் சாயில் கனகமா சம்பத் தாகும்
தீன்கொடு தெற்கும் மேற்குந் திசையாங் கருமஞ் சூழும்
தேன் மொழிக் கமலக் கண்ணுய் சீர்மயன் செப்பி னனே. 348

இ-ள். கம்பத்துக்கு மரம் நாட்டுவது சமனுக நின்ருல் நல்ல வாழ்வாம். வடக்காவது, கிழக்காவது சாயில் கனக சம்பத்தாம். தெற்காவது மேற்காவது சாயில் நிதாமென்பது, இவ்விதஞ்சாயல் பார்த்துச் சொல்லவும்.

## மரம்விழுந்த சத்தத்தின் குணம்.

விழுந்திடு மரத்தின் சத்தம் வியனெடு பாடினுப் போல்
முழுங்கியே விழுமே யாகில் மூற்றிடுங் கருமம் நன்ரும்
அழுங்கிய மனிதர் பேய்போ லலறியே விழுமே யாகில்
ஒழுங்குள கரும மாகா துயிர்பொருள் சேத மாமே. 349

## மரம்விழுந் திசையறிய.

வடக்கொடு கிழக்கதாக மரமது விழுமே யாகில்
திடத்தொடு நன்மையாளும் செல்வமும் பொருளு முண்டாம்
குடக்கொடு தெற்கதாகக் குணங்கெட விழுமே யாகில்
அடக்குடன் வினைகள் சூளு மாகாதென் றுரைசெய் தாரே.

## மரம்வகை தொழிலறிய.

மரத்தினை முந்தப் பார்த்து மயன்முக்கால் வெட்டப்பின்பு
கரத்திற் கோடாலிபற்றிக் கடிதுமற் ரேரும் வெட்ட
உரத்தொடு குறிகள் நன்று யுற்றுடன் பார்த்து வீழ்ந்தால்
மரத்தினை யெடுத்துப் பினபு வல்லமையாக் தொழில்கள் செய்யே.



## வீட்டின்பக்கத்தில் நிற்கவேண்டிய மரங்கள்.

சீதநீர்க் குலைக்காய் தேங்கு செழும்பலா வாகை பூகம்
மாதளை திராட்சி வேம்பு வளறெனு மிச்சு நாவல்
தாதளை துளசி சூதந் தக்கவம் பனைநா ரத்தை
மீதுள கொன்றை காவல் வீட்டின்பால் நிற்க நன்றே. 35

---

## வீட்டின்பக்கத்தில் நிற்கக்கூடாத மரங்கள்.

விண்ணோக்கு மிலவு கோங்கு விளாப்புளி மிளகு கூளா
கண்ணோக்கு மிலுப்பை வில்வமலரிகாற் பாச மச்சந்
தண்ணோக்கு முருங்கை வாகை தாலமே ரண்ட மற்கம்
பண்ணோக்கு மனையிற் னிற்கிற் பாழ்படு மில்லந் தானே

---

## ஆகாமரங்கள்.

அம்பலஞ் சிற்றூர் கோயில் அனற்படல் பறவை சேர்தல்
வம்புடன் கொடிகள் சுற்றல் வல்புழு விலங்கின் சேர்க்கை
அம்பியால் காற்றால் வீழ்தல் சுடலைபாழ் மனையுஞ் சேரி
வெம்புற லுடன் பேய்பூத மேவல்லே ரற்ற தாகா. 354

இ-ள். அம்பலத்திலிருந்தது, ஊர்மத்தியிலிருந்தது, கோயிலி லிருந்தது, அனல்தாவி வெந்தது, பறவைக்கூட்டங்களிருந்தது, புத்தின்பேரிலே முளைத்தது, தேளிருந்தது, வம்புக்காய் காய்த் தது, கொடிசுற்றியது, புழுவெட்டு, மிருகங்களின் இருப்பு, குளத் தருகு அல்லது கிணற்றருகு நின்றது, பூமியில் நட்டு நீர்வார்த் தது, யானை முறித்தது, காற்றிமோதியது, சுடுகாட்டில் நின்றது, பாழ்மனை, பறைச்சேரி இந்த இடங்களிலிருந்தது வெம்பி மடிந் தது, பாம்பு குடிகொண்டது, பூதப்பிரேத பசாசுகள் நெருங்கி

நிலை நின்றது தனக்குத்தானே வேரறுந்துவிழுந்தது முதலானவை தீமையையுடைய மாங்களாம், இவ்வித மரங்களில் வீடுகட்டில் தீமையதாகும், எ-று.

---

## மரங்கள் வெட்டும் விபரம்.

கருதிய மூகூர்த்தங் கொண்டு காட்டினுள் மரங்கள் வெட்டப்
பரிவுடன் பாலுஞ் சோறும் பணியாரம் பலவுங் கொண்டு
மருவிய பூசையிட்டு வனதேவி பலி கொடுத்து
புருஷனு மரத்தின் கீழே பொற்புற நிற்பர் தாமே. 355

இ-ள். தனக்கிசைந்த மூகூர்த்தத்தில் எழுந்து காட்டுக்குள் போய்ப் பற்பல பணியாரவகை களுடனே வனதேவதைக்குப் பலி கொடுத்து ஆண்மரத்தினருகிற் செல்லவும், எ-று.

தென்புறம் மேற்கு மாகத் தெற்பைகோ டாலி வைத்துத்
துன்பமாம் பூதம் பேயைத் தூரமே போகச் சொல்லி
இன்பமாய்ப் பால்கு டித்து முதனிற்கோ டாலி தோய்த்து
அன்பிலோர் முழத்தை விட்டு அடைவுடன் வெட்டு வாயே.

இ-ள். தென்புறத்திலே தெற்பையும், மேல்புறத்திலே கோ டாலியும்வைத்து பேய்பூதங்களை விலக்கி மந்திர தியானத்துடனே பால் குடித்துப் பாலிலே கோடாலியை வைத்து அடியிலொரு முழம்விட்டு மரத்தை ஏறப்பார்த்து நமஸ்கரித்து கோடாலியாலே வெட்டவும், எ-று.

வெட்டிய வாயில் நீர் பால் வீழ்ந்திடி லாகா தெங்க
வெட்டவீழ் மரத்தின் சத்தம் வெம்புலி யானை நன்றாம்
வெட்டிவீழ் மரத்தின் சத்தம் அழுகையுஞ் சிரிப்பு மாகா
வெட்டிய மரங்கி ழக்கும் வடக்குமாய் வீழ்தல் நன்றாம். 357

இ-ள். இந்தப்படி வெட்டும்போது வெட்டுவாயில் அதிக நீர் பாய்தல், பால்போல் வடிதல் ஆகாது, வெட்டி விழுகிறமரம் புலி

போல், யானைபோல சத்திக்கல் நன்மை. அழுதல், சிரித்தல் போ லுஞ் சத்திக்கல் ஆகாது. வடசேயாவது கிழக்கேயாவது தலை யாக விழுந்தால் நலமென்றவாறு.

---

## மரம் வெட்டுங் குறி.

வெட்டிய மரத்தின் வாயில் வீழும் நீர் பாயிற் றீதாம்
பட்டமி ரத்தம் போலப் பார்க்கிலு மாயா தென்க
ஓட்டிய தேரை தானும் உள்ளிருந் தோடி லாகா
கட்டமாங் கேட தாகும் நன்மை யொன் றில்லை கண்டீர். 358

---

## மரங்கள் வெட்டும் விதி

வசனம்

வாரம், திதி, நட்சத்திரம், யோகம், கரணம் இவைகளை யறி ந்து கர்த்தனுக்குத் தாராபலன் சந்திரபலன் பார்த்துக்கொண்டு தச்சனுக்கு செந்தம்தாம்பூல புட்பம் தட்சணை கொடுத்து காட்டுக் கனுப்பி மரம்வெட்டினால் சுபமுண்டாகும்.

---

## மரங்கள் வெட்டத் திதி நிர்ணயம்.

பஞ்சமிமுதல் ஐந்துநாளில் வெட்டினால் பூச்சி பிடியாது இவ்வைந்து நாளையில் ரோகணி நட்சத்திரத்தி லானால் மிகவும் உத்தமம், வேலமரம் வெட்டினாலும் பூச்சிபிடியாது. இதற்கு ஆகா நாள், கார்த்திகை நட்சத்திரத்திற் சூரியனிருக்கத் திருவோணம் அவிட்டம் மூன்றும் பாதத்திலும் நான்காம் பாதத்திலும் சதயம் பூரட்டாதி மூன்றும் பாதத்திலும் சுக்கிரன் நிற்க மரம் வெட்ட லாகாது.

முன்பு வெட்டின மரங்களானாலும், இந்த நட்சத்திரத்திலும் இவர்களிருக்கும்போதும் வீட்டுக்குக் கொண்டுவரக் கூடாது. பின்பு திருவோணம் அவிட்டம் சதயம் பூரட்டாதி. உத்திரட்டாதி, மகம், பூரம், உத்திரம், அஸ்தம், சித்திரை, சுவாதி இந்தப் பதினொரு நட்சத்திரத்திலும் சந்திரனிருக்க மரம் வெட்டலாகாது வெட்டின மரங்களானாலும் வீட்டுக்குக் கொண்டுவரக் கூடாது.

---

# மரப்பொருத்தம்.

மரங்களுக்குள்ளே பலாசு, புன்னை, நாவல், மகிழ், பலா, மா, இலுப்பை, சண்பகம், எருக்கு, வஞ்சி, அரசு, ஆல், அத்தி, மாதுளை, பிராய் என்னும் இப்பதினைந்தும், பாலுள்ளமரமாம், மற்றவை வயிரமுள்ளமரமாம், புருடன் வயிரமாமும், பெண்பால் மரமுமானால் புத்திரனுண்டு, பெண்வயிர மரமும், ஆண்பால் மரமுமானால் மலடு, இருவரும் வயிரமரமானால் புத்திரசேதம், இருவரும் பால்மரமானால் அதிகநலமாம்.

---

# உத்தரஞ்செய்ய

உத்தர மிசைக்க வேண்டி லுன்னி நீர்கேளு மெல்லாம்
அத்தனை யகலந் தன்னை யளந்து நாற் சதுரமாக்கி
வைத்ததோர் கனத்தை நேரே வடிவுற நூலாற் கண்டு
இத்தனை யொன்ப தாக யிசைந்தது குடுமியாமே 359

இ-ள். உத்தர மிசைக்கும் அகலத்தை யளந்து சதுரமாக்கி கனத்தை நூலளவு கண்டு அதனை ஒன்பதாக்கி இசைத்து நின்றது குடுமியாம், எ-று.

உத்தர மிசைக்கி லாணி யுலகத்தில் வலமதாக
உத்தர மிசைக்கி லாணி யுத்தம மாகக் கொள்ள
உத்தர மிசைக்கி லாணி யுலதத்தி விடமதாகிற்
சத்துரு பெருத்தும் பின்னுஞ் சாலைதீப் படுகை திண்ணம்.

இ-ள். உத்தரத்துக் கிசைக்கின்ற ஆணி தேவர்களுக்கு நடுவாகக்கொள்ளவும், மானிடருக்கு வலமாகக்கொள்ளவும், இடமாகக் கொள்ளில் சத்துரு பெருத்து அந்தவீடு தீப்படும் எ-று.

அடியது கீழ தாக அயிக்கமே தலையதாகப்
படிமுத லான தெல்லாம் பார்த்துட னிசைத்துக் கொள்ள
முடியவே யோர மாகில் முதுதலை யுள்ளு மாகக்
கடிகமழ் குழலி னுளே கண்டது னுரைத்த வாறே. 361

இ-ள். முதுதலை கீழும் இளந்தலை மேலுமாக இசைக்கவும், ஓரமாகில் முதுதலை யுள்ளும் இளந்தலை புறம்புமாகவும் இசைக்கவும், என்றவாறு.

மையம தாக நல்ல மரந்தனை யிசைப்பா ராகில்
கைதனிற் பொருளும் போகுங் காவலன் முனுஞ் சாவன்
மையவே யாகில் மையம் பாதியிற் பாதிகொண்டு
செய்யவே யிசைத்தல் நன்முந்தேனினைப் பழித்தசொல்லாய்.

இ-ள். நடுமையத்தில் மரமிசைத்தலாகாது. இசைத்தால் உயிரும்பொருளும் சேதமாகும். மரங்கள் மையத்திற் பாதியிற்பாதி இசைக்கவும், எ-று.

நிறைநெய் யிலாத வயிரமுடன் நெய்யிலா வயிரந் தானிசைக்க
வறண்ட வயிரந் தன்னுடனே வறண்ட வயிரந் தானிசைக்கச்
சிறந்த வலத்தில் நெடுவடையுஞ் சேருமிடத்திற் குறுவடையும்
புறம்பிற் றச்ச னின்றிசைக்கப் புகழுஞ் சிற்ப னுள்ளிசையே. 363

இ-ள். நெய்யற்ற வயிரத்துடன் நெய்யற்ற வயிரமும், வறண்டவயிரத்துடன் வறண்ட வயிரமும் வலத்தில் நெடுவடையும் இடத்தில் குறுவடையும் தச்சன் புறம்புஞ் சிற்பன் உள்ளும் சேர்த்து இசைக்கவும், எ-று.

ஆண்மரங்க ளொன்றுபல வாகிற் பெலன்க ளாராய்ந்து
ஊனமிலாத தையுரித்து உரமா யுத்ரந் தானிசைக்கில்
ஈனமில்லை மனைக்கிடரு மில்லை வாழ்வு மிகவுண்டாம்
பேணமிசையும் நன்முகும் புகழுஞ் சிற்பன் றனக்காமே. 364

இ-ள். வேங்கை, வேம்பு, தேக்கு முதலிய மரங்களில் ஒரு
தியிலாவது பலபல சாதியிலாவது பெலமுள்ளதாகவும், ஊன
லாத மரமாகவும், சேர்த்து உத்தர மிசைக்கவும். இப்படி
சைக்கில் மனைக்கு ஊனமும் இடறுமில்லை, பொருந்திய வாழ்வும்
பத்து முண்டாகும், எ-று.

ந்த முதுதலை முதுதலையு மிளந்தலை யோடே யிளந்தலையும்
ருந்தி யிசைப்பா ராமாகிற் பொல்லாநோயும் மிகத்துடரும்
ந்து முதுதலை யிளந்தலையுஞ் சேரு மிசைகள் மிகநன்றும்
ந்தி யிசைப்பா ராமாகில் வாழ்வுஞ் சம்பத் துண்டாமே. 365

இ-ள். முதுதலையோடு முதுதலையும், இளந்தலையோடு இளந்
லயும், இசைப்பாராகில் பொல்லாத நோயுண்டாகும், முதுதலை
ாடு இளந்தலை சேர இசைப்பது நன்றும். இப்படி பார்த்து
சைப்பாராகில் வாழ்வுஞ் சம்பத்து முண்டாமென்றவாறு.

---

## சந்துகுத்தல்.

சந்துகுத்தல், கோடிகுத்தல், குளக்குத்தல், கோளிக்குத்தல்,
டைக்குத்தல் ஆகாது.

---

## மூலைக்குத்தல் ஆகாதென்பது.

வீட்டில் நுழையும்போது வீட்டு வாசற்படிக்கு எதிரில் கட்
ச் சுவரிருந்தால் சத்துருபயமாம், தெருவாசற்படி யுயர்ந்து
ள்வாசற்படி தாழ்ந்திருக்கக்கூடாது. அப்படி யிருக்கில் வரும்
லன் நீங்கிவிடும்.

ஓரிசை தானேயாகி லுத்தம மல்ல மென்றும்
பேரிசை யிரண்டதாகிற பிரவுப கார சென்மம்
காரிகொள் மூன்றி னோடு நாலிசை வெறும்படாகம்
ஏரிசை யைந்து மாறும் இயல்புத வற்ற மாமே. 366

இ-ள். இரண்டுமாத் தோரிசையானது மல்லமெனறு பெயராம். மூன்றுமாத்தி லிரண்டிசையானது பிரவுபகார சென்மமென்று பெயராம். நாலுமாத்திற்கும், ஐந்துமாத்திற்கும் மூன்றிசையானது நாலிசையானது வெறும் படாகமென்று பெயராம். ஆறுமாத்திற்கும், ஏழுமாத்திற்கும், அஞ்சிசை ஆறிசையானது புதவற்றமென்று பெயராம், எ-று.

ஒப்பிய விசைகளெட்டு முள்ளது தேவ சத்தி
செப்புமே லிசைகளெல்லாந் தெண்டிகை யென்று போம்
இப்படி யறிந்தி சைக்கி லிடர்களொன் றில்லை யென்றும்
துப்புறு கிளையு மிக்க சுகத்தையுங் கொடுக்கும் நன்றே. 367

இ-ள். ஏழிசையும் எட்டிசையும் உள்ளது தேவசத்தியென்று பெயராம் அதற்கு மேற்பட்டதிசைகளெல்லாம் தெண்டிகமென்று பெயராம். இப்படியறிந்து இசைக்கில் இடரில்லாமற் கிளையுடன் சுகத்தைக் கொடுக்கு மென்றவாறு.

---

## இப்பால் கையளவு கொள்ளும்படி.

பண்புட னகலம்பற்றிப் பன்னிரு கூறு செய்து
அன்புட னைந்து மஞ்சா மாற்றது தொகைய தாகும்
இனபோழ் நவிழிற் கையாம் எட்டுகோ டாகையாகும்
ஒன்பது கூறுதானே யுற்றது கோடி யாமே. 368

இ-ள். அகலத்தைப் பிடித்து அதிற்பாதியைப் பனிரண்டு கூறுசெய்து அதற்குமேல் ஐந்துகூறு மஞ்சு ஆறுகூறு மஞ்சாகை, ஏழுகூறு நவிவாகை, எட்டுகூறு கோடாகை, ஒன்பதுகூறு கூடக்கோடியாம், என்றவாறு.

அஞ்சினி லிரண்டதாகில் அகலத்தை யிருபதாக்கி
மஞ்சதி லாறுபன் மூன்றடியில மஞ்சாகை யாக
மூனுசொல்நவி வாகை யீரேழ் மூவேழ் கோடாகை யாகக்
குஞ்சிய திருண்ட மாதே கொடிபதி னறு கொள்ளே. 369

இ-ள். அஞ்சில் இரண்டாங்கைக்கு அகலத்தை இருபது கூறு செய்து மஞ்சபனிரண்டு நடுவாகப் பதினாலு கோடாகை பதினைந்து கோடி பதினாறு கொள்க வென்றவாறு.

ஏழினில் மூன்றுங் கைக்கு பரப்பகை ஆறெட் டாக்கி
வாழுமீ ரெட்டு மஞ்ச மஞ்சிகை பதினே ழாகும்
ஊழியில் நடுவா கைக்கு முன்தலை யொன்ப தாகுஞ்
சூழ்கொடி கைப்பதொன் பான் சொற்கொடி யிருபதாமே.

இ-ள். ஏழில் மூன்றுங்கைக்கு பரப்பை இருபத்தினாலாகச் செய்து மஞ்ச பதினாறு, மஞ்சிகை பதினேழு நடுவாகை பதினெட்டு கோடாகை பத்தொன்பது கோடி யிருபது, எ-று.

ஒன்பது நான்கு தன்னில் அகலமோ ரிருபத் தெட்டில்
அன்புடை மஞ்சபத் தொன்ப தாகுகை யிருபதாகும்
வன்கோட் டிருபத் தொன்று நடுவாகை கோடாகை கோடி
மூன்புறு வழியா மென்று முறைமையா லேற்றிக் கொள்ளே.

இ-ள். ஒன்பது நாலாங்கைக்கு பரப்பை யிருபத்தெட்டு கூறு செய்து மஞ்ச பத்தொன்பது, மஞ்ச இருபது, நடுவாகை இருபத்தொன்று கோடாகை இருபத்திரண்டு கொடி இருபத்து மூன்று என்றவாறு.

பதினொன்றி லஞ்சிகையி லகலமுப் பத்தி ரண்டாம்
மதியிருபத் திரண்டு அஞ்சமஞ் சாகை யான
வதனடுவாகை கொடாகை கொடியடை விலேகை யேற்றி
விதியினி லொவ் வொன்றாக விரும்புகை யளவு தானே. 371

இ-ள். அஞ்சாகைக்குப் பரப்பை முப்பத்திரண்டு செய்து மஞ்ச இருபத்திரண்சி மஞ்ச இருபத்துமூன்று நடுவாகை இருபத்து நாலு கோடாகை இருபத்தைந்து கொடி இருபத்தாறு இப்படி ஒவ்வொன்றேற்றிக் கொள்ளுவ தென்றவாறு.



உன்னுமஞ்சு மூஅகுயர மொன்ப தொன்று கொடியாகும்
பன்னும் பலசார் கைதனக்குப் பரப்பு மூஅகின் மேலதனைப்
பின்னும் பரப்பு மூன்று கைகால் செய்த கோட்டா கைமூன்று
மன்னுங்கடுவா கையிரண்டுமஞ்சா கைக்கொன் றிழுக்கதுவே.

இ-ள். மஞ்சில் மூஅகுயரத்தை ஒன்பது செய்து அதிலொன்று கோடிக்கு இழுக்கிட்ட பலசார் கைக்கு மூஅகுபலத்தை பரப்பு மூன்று கைக்கு காலுசெய்து கோட்டாகைக்கு மூன்று கடுவாகைக்கு இரண்டு மஞ்சாகை ஒன்று இழுக்கென்றவாறு.

---

## கோடிக்கு மூஅகுயரம்.

மஞ்ச மூஅகை யைந்தாக்கி மருவுங் கொடிக்குத் தண்டேத்து
மிஞ்ச வேற்றுஞ் சேடமது விரண்டு நான்கு கூறாக்கி
கஞ்சல்கோ டகையுமூன்று கடுவாகைக் கோரிரண்டாம்
மஞ்சா கைக்கே யொன்றாகி யிவையுமூஅகி னுயரமதே. 373

இ-ள். மஞ்சினுயரத்தை ஐந்துசெய்து இரண்டு எறிவது கோடிக்கு மூஅகுயரம எத்தின சேஷம் இரண்டையும் காலுசெய்து கோட்டாகைக்கு மூன்று கடுப்பகைக்கு இரண்டு மஞ்சாகைக்கு ஒன்று மூஅகினுயரம், என்றவாறு.

கோடியைக் கோடி பாயிற் குலமக டனக்கு மாகா
நாடியே குறுக்கே பாயில் நாயகன் றனக்கு மாகா
நீடியே யெதிராஞ் சாலை நேரிடும் வாச லாகில்
வாடிய குடிக ளெல்லாம் வலமிடம் பெருக்கில் வாழ்வே, 374

கோடி யிழுக்குத் தான்சொல்லிற் குறித்த சிற்பத் தூற்றபடி
வாடி மனங்கள் தளராமல் மஞ்சுமூஅகி னுயரத்தை
ஓடி யொன்பான் கூறாக்கி யொன்று கோடிக் கிழுக்கிடலாம்
நாடி மயனூர் சொன்ன திவை நன்றா யறிந்து கொள்வீரே. 375

இ-ள் கோடிக்கு இழுக்குச் சொல்லும்படி மஞ்சின்முதுவுய ரத்தை ஒன்பது கூறுசெய்து இதிலே ஒருகூறு கோடிக்கென்று மயனார் சொன்னபடி யறிந்து கொள்ளு மென்றவாறு.

பலவுஞ் சார்ந்த ஙநதனக்குப் பரப்பு மூன்று கைதனக்குங்
குலவி நான்கு கூறிட்டுக் கோடா கைக்கு மூன்றாகும்
மலரும் நடுவா கைக்கிரண்டு மஞ்சாங் கைக்கே யொன்றாகும்
இலகு மிழுக்கே யிட்டபடி யிவைதா னறிந்து செய்வீரே. 376

இ-ள். பலசாங்கைக்கு இழுக்குச் சொல்லும்படி பரப்பு மூன்றுகைக்கு நாலு கூறிட்டு கோடா கைக்கு மூன்று நடுவாகைக்கு இரண்டு மஞ்சாங்கைக்கு ஒன்று இழுக்கிட்டபடி யென்று அறிந்து கொள்வீர், எ-று.

ஆனமஞ்சு முதுவுயரம் அளவு பிடித்தே யதுதன்னைத்
தானு முறவே யோரஞ்சு தக்கக் கூறு தானாக்கி
யூன மறியி ரண்டேற்ற வுற்ற கோடி முதுவுயரம்
யீன மிலையா மயனுரைத்த திந்த வகையே செய நன்றே. 377

இ-ள். முதுவுயரஞ் சொல்லும்படி மஞ்சில் முதுவுயரத்தை அளவு பிடித்து அதனைக் கூறாக்கி அதிலொன்றேற்ற கோடிக்கு முதுவுயரமாமென்று மயனார்சொன்ன சாஸ்திரப்படியிதுவே,எ-று.

எற்றுஞ் சேட மிரண்டதனை யெடுத்து நாலு கூறாக்கி
காற்றுங் கோடா கைமூன்று நடுவர்கைக்கே யிரண்டாகும்
மாற்றுஞ் சாகை யொன்றுக்கு வளமாமுதுவி னுயரமெனத்
தோற்ற முடனே மயனருஞ் சொன்னநூலின்படி யென்றான்.

இ-ள். முதுவுயரஞ் சொல்லும்படி மூன் எற்றின சேடமிர ண்டையும் நாலுகூறு செய்து கோடகைக்கு மூன்று நடுவற்கைக்கு மிரண்டு மஞ்சாகைக்கு ஒன்று முதுவுயரமென்று தோற்றமுடனே மயனார் சொன்ன நூலின்படி யென்றவாறு.

## உச்சத்தளவு விபரம்.

அண்ட முறவே உயர்த்துகின்ற அளவு தன்னைச் சொல்லுங்கால்
கொண்ட பரப்பை நவமாக்கிக் கோடா கைக்கு மூன்றாகும்
மண்டு நடுவற் கைக்கிரண்டு மஞ்சா கைக்கே யொன்றாகும்
பண்டு மயனார் சொன்னபடி பகர்கா லாகும் பாரிடத்தே. 379

இ-ள், உயரத்தளவு சொல்லும்படி பரப்பை ஒன்பது கூறு செய்து கோடாகைக்கு மூன்று நடுவற்கைக்கு ரண்டு மஞ்சாகைக் கொன்று முன்பு மயனார் சொன்னபடி பகருகின்றோம் பாரிடத்தில், எ-று.

பன்னு மஞ்சி விரண்டு கைக்குப் பரப்பு கூறுபத் தாக்கி
மன்னு மெட்டுக் கூறதுவே மருவுந் தாய்புத் தனக்காகும்
உன்னும் புறவா கைக்குரண்டே உயர்த்து மளவு தானாகும்
பின்னும் மயனார் சொன்னபடி பேசுகின்றோம் புவிமீதே. 380

இ-ள். உயரத்தளவு சொல்லும்படி அஞ்சிவிரண்டு கைக்குப் பரப்பைப் பத்துக்கூறுசெய்து எட்டுத்தாப்பு இரண்டு புறவாகை உயரத்தளவு யென்று பின்னும் மயனார் சொன்ன சாஸ்திரப்படி, என்றவாறு.

பரப்பினை யொன்பதாக்கிப் பண்புட னொன்று நீக்கி
இருப்பதோ டெட்டுங் காலா மிரண்டுகீழ் மேல தாறு
குருத்துடன் கவரு தானுங் கொள்வது மிச்ச மாகுந்
திருத்தமாய் முகூர்த்தங் கொண்டு தென்மேலமூந்த நாட்டே.

இ-ள், பரப்பினை ஒன்பது கூறுசெய்து ஒருகூறு தனியக்காலளவாம் இரண்டுகூறு கீழே நாட்டு மற்ற ஆறுகூறும் மேலாகவும் குருத்துங் கவரும் மிச்சங்கொள்ளவும் தென்மேற்கு மூலையிலே மூந்த நாட்டுவது, எ-று.

தென்மேலை மூலைக்காலை சிறப்புடன் பால்நெய் தோய்த்து
இன்புள ரத்னியும் பொன்னும் இரத்தின மணியு மிட்டு
மேன்மையாம் பால்நீர்விட்டு விநாயகர்பூசை பண்ணி
நன்மையாம் முகூர்த்தங் கொண்டு நாட்டிடுங் கால்கள் தானே.

இ-ள். பாலும் நெய்யும் காலிலே தோய்த்துப் பொன்னும் இரத்தினமுங் குழியிலே போட்டு பாலும் நீருங் குழியில்வார்த்து விநாயகர் பூசைபண்ணி முகூர்த்தங்கொண்டு கால்காட்டுவது, எ-று.

---

## லக்கின முகூர்த்தம்.

தக்கஜென்மம் நாலுபத்திற் சசிதான் நிற்கத்
தருபதி னொன்றிற் குருவுங் குஜனு மந்தன்
மிக்கவிவர் தானிருந்து முகூர்த்தஞ் செய்தால்
மேவியதோர் மனைதனக்கே வயது நூறும்
சுக்கிரனுங் குருவுந்தான் லக்கி னத்திற்
றோன்ற லைந்தில் மூன்றில் வெய்யோன் சுகமாயாறில்
திக்குயருங் குஜனிருந்தா லகத்துக் கேதான்
திறவயது நூறெனவே செப்பினேனே 383

இ-ள். இலக்கினத்துக்கு நாலுபத்தில் சந்திரன் நிற்கப் பதி னொன்றில் குரு, செவ்வாய், சனியிவர்களிருக்க மனைமுகூர்த்தஞ் செய்தால் வயது நூறு வருஷம் விளங்கும், இலக்கனத்தில் குரு வுஞ் சுக்கிரனுமிருக்க, ஐந்து மூன்றில் சூரியனிருக்க ஆறில் செவ்வாயிருக்க முகூர்த்தஞ் செய்தால் அந்தமனை நூறு வருஷம் விர்த்தியாய் விளங்கும், எ-று.

மேவியசீ ரிலக்கினத்திற் சோமன் நாலில்
விரும்புபுதன் குருவத்த மான காலம்
தாவியபட் டணநகரம் முகூர்த்தஞ் செய்தாற்
றகைமைவய திருமூன்று நூற தாகும்
ஓவியமோ ருதயத்திற் பத்தில் வெள்ளி
யொரு மூன்றிற் புதன்குருவு மத்தமானம்
மாவுயர்பட் டணநகரம் முகூர்த்தஞ் செய்யில்
வருநூறு மிருமூன்றாய் வகுத்த வாறே. 384

இ-ள். லக்கினத்திற் சந்திரன் நிற்க, நாலிற் புதனிருக்க, குரு அஸ்தமனமாக முகூர்த்தஞ் செய்தால், அந்தமனைக்கு அறுநூறு

வயதாகும். இலக்கினத்தில் பத்தில் சுக்கிரனிருக்க மூன்றில் புத
னிருக்க, குரு அஸ்தமனமாக முகூர்த்தஞ் செய்தால் அந்தமனைக்கு
அறுநூறு வயது விளங்கும், எ-று.

பொங்குகுரு க்ஷேத்திரத்தில் வெள்ளிவீட்டிற்
புதனிருக்க நகர்முகூர்த்தம் புரிவீராகில்
தங்குவய திருநான்கு நூறதாகும்
தகுமிரவி யுதயமத்த மானகாலம்
சங்கைதரும் பத்ததிலே சோமன் நிற்கத்
தகைமைமனை யாலயமே முகூர்த்தஞ் செய்தால்
இங்கிதமாய் வயதுமொரு சகஸ்திர மென்று
இம்மொழிக்கு மயனுரையு மியம்பினரே. 385

இ-ள். குருக்ஷேத்திரத்திலிருக்க வெள்ளிவீட்டில் புதனிருக்க
முகூர்த்தஞ் செய்யில் எண்ணூறு வயதிருக்கும். சூரியன் அஸ்த
மானகாலம் பத்தில் சந்திரன் நிற்கஆலயமுகூர்த்தஞ்செய்யில் ஆயி
ரம் வருஷம் விளங்கும், எ-று.

தேசுயர்ந்த சுக்கிரனு முதயமாகத்
திருந்தியதோ ரேழதிலே குருவிருக்க
மாசகன்ற பத்ததிலே சோமனிற்க
வளர்முகூர்த்த மாலயமே மகிழ்ந்துசெய்யில்
பேசுபெறு வயதுசகஸ் திரந்தானென்றே
பேசலா மோரைதனில் வெள்ளிநிற்க
வாசகுரு க்ஷேத்திரமா நகருக்கேதான்
மருவுமனற் சேதமிலை மகிழுவாரே. 386

இ-ள். சுக்கிரனுதயமாக ஏழில் இராஜாவிருக்கப் பத்தில் சந்
திரனிருக்கமுகூர்த்தஞ் செய்தால் ஆயிரம் வருஷம் விளங்கும்.
இலக்கினத்திற் சுக்கிரனிருக்க குருக்ஷேத்திரத்திலிருக்க முகூர்த்
தஞ் செய்தால் அக்கினிபயமில்லை, எ-று.

வருங்கடக மகரமது மீனந்தன்னில்
வளமைமிகு சந்திரனும் மருவிநின்றால்
திருவுயர்ந்த கிரகமதில் வைக்கோற் போடச்
செயமதுவாம் பூராடந் திருவோணந்தான்

தருவுயர்ந்த ரோகணியுத் திரங்கண் மூன்றுந்
 தங்கியவா யிலியமது சாற்றக் கேளே
மிருகசீ ரிடமதனிற் குருவிருக்க
 மேலரசன் கிழமைசெய மகிழ்ச்சி யாமே. 387

இ-ள். கடகம், மகரம், மீனம், இதிற் சந்திரனிருக்க, வைக்கோல் போட்டால் ஜெயமாகும், பூராடம், திருவோணம், உரோகணி, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, ஆயிலியம் மிருகசீரிடம் இதுகளில் இராஜனிருக்க குருவாரத்திற்செய்ய மகிழ்ச்சியாம், எ-று.

திருந்துசல ராசிதனில் வெள்ளி நிற்கச்
 சிறந்தபுகர் வாரமுமா யிருந்தா லாக்கம்
பொருந்துசல ராசியதிற் சோமன் நிற்கப்
 பொருந்து திங்கள் வாரமதா யிருக்குமாகில்
வருந்துமக மனையாளுங் கெற்ப மாகில்
 வளர்முகூர்த்தங் குடிபுகவும் மத்திமந் தான்
இருந்திடுமோர் கிரகபல னிதுவா மென்றே
 எடுத்துரைத்தார் மயனுரு மியல்பாய்த் தானே. 388

இ-ள். ஜலராசியிற் சுக்கிரனிருக்க, சுக்கிரவாரமா யிருந்தால் ஆக்கமுண்டு, ஜலராசியிற் சந்திரனிருக்கத் திங்கள் வாரமாகில் மனையாள் கெற்பமாகினும் முகூர்த்தஞ் செய்யினும் குடிபுகினும், மத்திமமென்று மயனெனபவர் சொல்லிய வாக்கியம், எ-று.

---

## பூமிசல்லியம்.

களத்திரத் தானந்தன்னிற் கருதுமெக் கோட்கும் கேந்ரம்
வளத்துட னிந்து நின்றால் மனையதிற் கரியெ லும்பாம்
விளைத்திடுந் தீமையில்லாள் வியாதியாஞ் சங்கை பீடை
கிளைத்திடுங் குலமும் பொன்னுங் கெடுதியாம் மயன் சொன்னரே.

இ-ள். உதயாரூட ராசிக்கு எழாமிடத்தில் எந்தக் கிரகமாவது இருக்க அதற்கு ஒன்று நான்கு ஏழு பத்தில் சந்திரனிருந்தால்— சல்லிய மிருக்குதென்று நிச்சயமாய்ச் சொல்லப்படும். அதற்குப்

பலன் ஸ்திரீகளை அடிக்கும், குலத்துக்குக் கெடுதிவரும் பொருட் சேதம், உயிர்ச்சேதம் உண்டாம், அந்தமனையில் சௌக்கியமில்லை.

சாம்பலோ டெலும்புங்கூடித் தழைத்திடும் மனையில் நின்றால்
சோம்பலே மிகவுண்டாகுஞ் சுகமதற் கில்லை கண்டாய்
பாம்பினு லச்சமுண்டாம் பாரியால் விரோத முண்டு
காம்பல நூல்கள் பார்த்து ஞாயமாய் வகுத்த வாறே. 390

இ-ள். மேற்சொல்லியபடி சந்திரன் கேந்திரத்திலிருந்தால்— அந்த மனையில் சாம்பலும் எலும்பும் இருக்குமென்றுசொல்லுவது, அதற்குப் பலன், சோம்பலுண்டு. பாம்பினால் அச்சமுண்டு, பாரியால் விரோதமுண்டு சம்பத்து க்ஷீணமாகும், சங்கை பீடையென்று சொல்வது முண்டு, எ-று.

புத்திரத் தானந்தன்னிற் பொருந்திய கிரகம் நிற்கச்
சத்துவம் புவியுங் கேந்த்ரம் தரித்திட மரங்கள் கட்டை
பெத்திட வெலும்புங் கூடிப் பெரியதம் மனையில் நின்றால்
அத்திடுங் குலங்க ளென்றே ஆதியில் மயன் சொன்னாரே.

இ-ள். உதயவாரூடத்திற்கு ஐந்தாமிடத்தில் கிரகங்கள்நின்று அதற்குக் கேந்திரத்தில் சந்திரனிருந்தால்—கல்லும், மரமும், கட்டையும், எலும்பும் இருக்கிறதென்று சொல்லுவது, இதற்குப்பலன் குலமல்லாத புருடாளை அடிக்கும், எ-று.

உயிருட லிரண்டிடத்தி லுற்றதோ ரிந்து தானும்
மயிர்முளை கூடிநின்றால் மன்னவன் றனக்குக் கேடாம்
தயிரியம் பெலன்சம் பத்துந் தானது அழியு மென்றே
குயின்மொழி யுடையமாதே குறிப்புடன் மயன் சொன்னாரே.

இ-ள். உயிரென்னப்பட்டது ஆரூடலக்கினம் உடலென்னப்பட்டது உதயலக்கினம் இதற்கு இரண்டாமிடத்திற் சந்திரன் நின்றால் சல்லியமிருக்குதென்று சொல்லுவது, அதற்குப்பலன் அந்த வீட்டு எஜமானுக்கு ஆகாது, தயிரியம், பெலன், சம்பத்து இவைகளெல்லாம் அழியும், எ-று.

கருங்கல்லோ டெலும்புங்கூடிக் காரியத் தானந் தன்னில்
இரும்பொடு அராவுங்கட்டை யீயம்பித்தளை தான் சேர்ந்தால்
அரும்பொருள் நாசமாகும் அம்மனை யழியு மென்றே
தருந்திருப் புவனமாதே சாத்திரம் மயன் சொன்னாரே. 393

இ-ள். காரியஸ்தானமான பத்தாமிடத்திற் கிரகங்கள் நின்றால் கருங்கல்லும் எலும்பும் அரா ஈயம் பித்தளை இவைகளில் ஒன்றிருக்குமானால் அதற்குப் பலன் பொருளழிந்து மனிதர் சேதமாகி அந்தமனை எடுபட்டுப் போகும், அருட்டி சொற்பன மதிகமுண்டாகும்; எ-று.

ஆறெட்டுப் பன்னிரண்டி லானதோர் சல்லியங்கள்
கூறிட்டு நின்றதானாற் குற்றமேயில்லை நன்மை
வீறிட்ட லாபமேழு வித்தைசேர் மூன்றில் நின்றாற்
பேறிட்ட சல்லியங்கள் பெரும்பிணி மிகவுண்டாமே. 394

இ-ள். ஆறுமிடம், எட்டாமிடம், பனிரண்டாமிடம் இவைகளில் கிரகங்கள் நின்றால் நன்மை, பதினோராமிடம் ஏழாமிடம் ஐந்தாமிடம் மூன்றாமிடம் இவைகளில் கிரகங்கள் நின்றால் சல்லியமுண்டு, பெரும்பிணியாகிய கன்ம வியாதியுண்டாகும்.

சாடியோ டெலும்பு கூடித் தழைத்திடு மனையில் நின்றால்
ஓடிய கப்பலாழி யுடைந்தது போலே யோகம்
கூடியே மனையில் நின்றாற் குலந்தனை நாசஞ் செய்யும்
பாடியே மயனார் சொன்னார் பயனறிந் துரைத்த வாறே. 395

இ-ள். சாடியோ டெலும்பிருக்கிறதென்று உதயலக்கினத்தில் கிரகங்கள் நின்றால், அது கேந்திரங்களில் சந்திரன் நின்றால் சல்லிய முண்டென்றறியவும். அதற்குப்பலன், ஓடிவருகின்ற கப்பல் சமுத்திரத்தில் உடைந்தாப்போல் யோகமானது ஸ்திரீகளை மரணமாக்கும், குலத்துக்கெல்லாங் கெடுதிவரு மென்றவாறு.

ஆருடந்தன்னில் ராகு அதற்குநா லேழு பத்திற்
காரியும் மதியும் நின்றாற் கரியொடு வுமியெலும்பு
வீரிய முடனே காணும் மேலதிக் கிரண்டு மூன்றிற்
சூரியன் மதியும் நின்றாற் சூனிய மிருக்குந் தானே. 396

இ-ள். ஆரூட ராசிகளில் உதயத்தில் இராகு நின்றாலும், நாலு ஏழு, பத்தில் சனியும் சந்திரனும் நின்றால், கரி, ஓடு, எலும்பு, இவைகளிருக்குமென்று சொல்வது, அதற்குபபலன் நன்மையில்லை. இரண்டு மூன்றிற் சூரியனும் சந்திரனும் கூடிநின்றால் சூனிய மிருக்குமென்று சொல்லவும், அதை எடுக்க உத்தமம், எ-று.

உதயவா ரூடந்தன்னி லுடலுயி ரறிய வேண்டில்
மதியமாய் வந்தநாட்கள் வருமுழு நாட்க டன்னிற்
புதியதா யுடலீதென்றும் பொழுதுகா ளுயிரதென்றும்
பதியவே பலன்கள் சொலலும் பகர்ந்தன நூறையுமாதே.

இ-ள். உதய வாரூடராசியில் உடல்ராசி யின்னதென்றும் உயிரிராசி யின்னதென்றுந் தெரியவேண்டி யிருப்பதால், அது விபரம் சந்திரன் நின்ற ராசியே உடல் ராசியென்றும், உதயாரூட ராசியே உயிரிராசியென்றுந் தெரிந்துகொள்ளவேண்டியது, இத்தராசிகளில் முழுநாளை யெண்ணியே பலன் சொல்லவேண்டியது, எ-று.

தொட்டலக் கினத்திற் காரி சூரியன் செவ்வாய் ராகு
இட்டம்நா லேழு பத்திற் சீரணமதியே சேர்ந்தாற்
பட்டிடு மரங்கள் கட்டை பானையோ டெலும்பு சாம்பல்
சட்டமா யிருக்கு மென்றே சாற்றினர் மயனுந்தானே. 398

இ-ள். யாதா மொருவர் வினவிக் கேட்கவரில், அவரை ஒரு ராசியைத் தொடச்சொல்லி அந்த ராசிக்குச் சனி, சூரியன், செவ்வாய், இராகு, நாலாமிடம், ஏழாமிடம், பத்தாமிடம், அமரபக்கம் சந்திரனுங் கூடியிருந்தால் பட்டமரமும் பானையோடும், எலும்பும், சாம்பலுமிருக்குதென்று சொல்லுவது, எ-று.

மதிக்குநா லேழு பத்து மந்திரி புந்து கூடி
அதற்குமூன் றெட்டி லாறில் ஆதித்த னிருப்பா னாகில்
இதிக்கவோர் பத்தி னாலே யிருந்தவன் பெலவா னென்னில்
நிதிக்குளோர் பயனே சொல்லும் நிச்சயம் மயன் சொன்னாரே

இ-ள். சந்திரனுக்கு நாலாமிடம், ஏழாமிடம், பத்தாமிடமும், இராஜனாகிலும், புதனாகிலும் நின்று அதற்கு மூன்று, ஆறு, எட்டில் சூரியனிருந்தால்—நிதியுண்டென்று சொல்லுவது, எ-று.

சுக்கிரற் கெதிரே புந்தி தோன்றிய காரி மன்னன்
வக்ரமில் லாதிருந்தால் மன்னவர்க் காறில் மந்தன்
சிக்கவே திரவியங்கள் நிலந்தனி லில்லை யாகில்
பக்குவ மானவெள்ளி பாரினில் மிகவுண் டாமே. 400

இ-ள். சுக்கிரனும் புதனுங்கூடி அதற்கெதிர் இராஜனிருக்க, இவர்கள் வக்கிரமில்லாதிருக்க இராஜனுக் காறில் சனியிருக்க— அந்தப்பூமியில் திரவியமுண்டு, அஃதில்லாவிட்டால் வெள்ளி யாகிலு மிருக்குமென்று சொல்லுவது, எ-று.

தனமிகு சூனியத்தாற் மருகரி யெலும்பி னேடும்
புனமுடன் காண வென்று வியம்புவே னரசே கேளாய்
மனதுட னிருபத் தெட்டு வாகுள பாகஞ் செய்து
வினவிய நிலவு வீட்டில் விருப்பமா யிருக்குந் தானே. 401

இ-ள். தனங்கள், சூனியம், கரி, எலும்பு இவைகளை யெடுக்க வேண்டுமென்றால், அவ்விடத்தை இருபத்தெட்டு பாகஞ்செய்து சந்திரன் எந்த வீட்டிலிருப்பானோ அந்தவிடத்தி லிருக்கும், எ-று.

இருப்பதாம் பொருட னக்கு மியல்புடன் வகையைக் கேளு
கருப்பென விருளன் காளி கணந்துர்க்கை வயிர வன்றன்
இருப்பது காவ லாக இருந்தவர் தனை விலக்க
விருப்பமாங் கணய தித்தாள் விரும்பியே பூசை செய்யே.

இ-ள். இருக்கின்ற பொருள் சூனிய மெடுக்கவென்றால் அதைக்காத்திருக்கின்ற கறுப்பன், இருளன், காட்டேரி, காளி, கணம், துர்க்கை, வயிரவன் இவர்கள் காவலாயிருப்பார்கள். அதைவிலக்க வேண்டுமென்றால் ஜெபதபத்தோடு தீபதூப நைவேத்தியத்தோடு கஜமுகத்தையுடைய விநாயகக் கடவுளை பக்தியோடு அர்ச்சிக்க வென்றவாறு.

செய்யதோர் பூமி தன்னைச் சிறப்புடன் மெழுகிப் பின்னும்
மெய்யதாய்க் கும்பந் தன்னை விரும்பித் தாபிதமே செய்து
ஐயனே ஓம குண்டத் தக்கினி செபஞ் செய் தங்கே
அய்ய நாற்சதுரந் தன்னைத் அலங்கரன் றாகச் செய்யே. 403

இ-ள். பூமியைச் சதுரமாக மெழுகிக் கும்பம் ஸ்தாபித்து ஓமாதியக்கிய செபஞ்செய்து நாற்சதுரக இருக, எ-று.

துலங்கவே யெட்டுத் திக்குஞ் சுற்றியு லாணி கொண்டு
இலங்கிய ஜெபத்தி னோடே யின்பமா யாணி கொண்டு
அலங்கிருத பெலி கொடுத்து மவ்விடஞ் சோதித் தாக்கால்
நலங்கொள நீகுறித்த நற்பொருள சொல்லக் கேளே. 404

இ-ள். எட்டுத் திக்குஞ்சுற்றி யுலாணிகொண்டு ஜெபதப மந்திரசித்தியோடு ஆணிகொண்டு பெலிகொடுத்து அவ்விதமாகச் சோதனை செய்தால் நீ குறித்தபொருள் சொல்லக்கேள், எ-று.

சொல்லுவேன் நீகுறித்த சுகப்பொருள் வரத்துக் கான
வல்லதோர் குமரன் பூசை மாருதி மந்தன் பூசை
சல்லாப மாகச் செய்தாற் றனம் பொருள் காணுஞ் சொன்னேன்
புல்லிய மயனுற் சொன்ன புகழ் பெறு நூலி தாமே. 405

இ-ள். நீ குறித்தபொருள் வரத்துக்கான வென்றால் குமரன் பூசை அநுமாருச்சாடனஞ்செய்து அவ்விடத்திற் சோதித்தால் நீ குறித்த பொருள் கண்ணிற் றுலக்கமாய்க் காணு மென்றவாறு.

வெண்பா

உள்ளும் முறமைதலை யோடெலும்போ டிட்டிகையும்
வள்ளோடு சுள்ளி மகிழ் தெய்வம்—தெள்ளியதோர்
சாம்பல் கரிசபமுந் தானியம்பொன் கற்றவளை
யாங்குசுவா னத்தெலும்பு மாம். 406

இ-ள். பூமிசல்லியம் பதினாறுவகைப்படும், அதில் ஒன்றுக்குத் தலையோடு, இரண்டுக்கு—எலும்பு, மூன்றுக்கு—விட்டிகை, நான்குக்கு—ஓடு, ஐந்துக்கு—சுள்ளி, ஆறுக்கு—தெய்வம், ஏழுக்கு—சாம்பல், எட்டுக்கு—கரி, ஒன்பதுக்கு—சபம், பத்துக்கு—தானியம், பதினொன்றுக்குப்—பொன், பனிரண்டுக்கு—கருங்கல், பதின்

மூன்றுக்குத்—தவளை, பதினாலுக்குப்—பசுவின் கொம்பு, பதினைந்துக்கு—காயெலும்பு, பதினாறுக்கு—மதமதக்கசசால் இந்தப்படி பதினாறும் பூமிசல்லிய மெனவாறு.

---

## இதுவுமது.

அப்போ தளந்தவடி யாமிருபத் தெட்டுடனே
தப்பாமற் கூட்டித் தவறுமற்—செப்பமுடன்
பன்னிப் பயனைப் பதினாறுக் கீய்ந்தபலம்
உன்னியவர்க் கெல்லா முரை. 407

இ-ள். யாதா மொருவன் கிரகசல்லியம் வினவினல் அடியளந்து அவச்சாயை, பாதச்சாயைகள் நின்ற அடியுடனே இருபத்தெட்டு கூட்டிப் பதினாறிற் கழிக்கச் சல்லியமின்னதென்று சொல்லுக, எ-று.

---

# சங்கு பிரமாணம்.

சங்குதான் நீளமாகத் தந்ததோர் விரலி னாலே
பங்குமுன் நான்கதாகக் கொண்டது பருமனாகும்
அங்கது நாலின் மூன்றுந் தலையது சுற்ற தாகும்
தொங்கிய தேக மாகக் கொண்டதோர் தூசி தானே. 408

இ-ள். தேவாலயங்கள் கோலுமிடத்து சங்குஸ்தாபனம் பண்ணயத்தனிப்பார். ஆதலாலந்தச் சங்குக்களவு நீளம் பருமன் இவைகள் சொல்லுமிடத்து சங்கு ௰உ-விரலளவு நீளம். அதனை நாலுகூறிட்டு, அதிலே மூன்றுகூறு தலைச்சுற்றும் ஒருகூறு ஊசி நீளமாக மரத்தால் சங்குபோல் கடைச்சலிட்டு வைப்பார், எ-று.

---

வேறு.

சயகுதிர ளும்பருமன் தாரமது நீளம்
சங்குதலை யின்பருமன் தன்னடியின் முக்கால்
பொங்கு புனல் மட்டமது கோல வவுபூமி
பங்கது நடுப்பட நடுப்பரிசு தானே 409

இ-ள். யாதொரு நீளமிட்டது சங்கின் பருமன், அச்சங்கின் பருமனிலொன்று முக்கால் தலைப்பருமன் ஒருமுழத்தின் பரப்பிலே நடுப்பட நாட்டுவது, எ-று.

வானுறையுந் தேவர்முதல் மாந்தருக்கு மாகும்
தானுடைய சங்குமரந் தக்கவகை சொல்லில
ஆன்பலா வாளரசு மத்தியிச்சு மாந்தர்
கானமர் பரம்பைகருங காலிதேவர்க் காமே. 410

இ-ள். தேவருக்கும் மனிதருக்கும் சங்கு கடைந்துவைக்கும் மாவகை சொல்லில் பால்சுரக்கின்ற பலா, ஆல், அரசு, அத்தி, இச்சி இவைகள் மனிதருக்கும் முள்ள பரம்பை கருங்காலி முதலி யன தேவர்களுக்குமாம், எ-று.

---

## சங்கு முகூர்த்தம்.

பண்ணிய சங்கு வைக்கப் பார்தனை மட்ட மாக்கி
நிண்ணிய வொருகோல கொண்ட நீளமு மகலமாக
உண்ணிய மட்ட நீளம் உரியவே கொண்ட பின்னும்
திண்ணிய பொருளி னுலே திடமுள சஙகு வையே. 411

இ-ள். சங்குவைக்குந் தானத்திலே பூமியில் ஒருகோல் முறைக்கு அகலமும் நீளமும், சர்வசாரிரவி முகூர்த்தங்கொண்டு நடுவே பொருள்வைத்து அதின்மேல சங்குவைத்து முகூர்த்தங்கொள்ளவும், எ-று.

## சங்கு முகூர்த்தநாள்.

ஆவணியு மைப்பசியு மானநெறி தேனும்
பூவணி மலர்க்குழலி னுள்மணருங் காலம்
தேவணி தெரிந்த வைகள் சேரவரு நாளில்
தாவணி முகூர்த்தமது சங்குநட லாமே. 412

இ-ள். ஆவணி, ஐப்பசி, கார்த்திகை முதலான கல்யாண முகூர்த்த நாட்களிலே நல்ல சுபமுகூர்த்தத்தில் மத்தியான வேளையில் சங்கு நடவும், எ-று.

ஒன்பது மேழு மைந்தும் உற்றதோர் பதினைந் தாக
அன்புட னறையச் செய்தே யதினடு பொன்னைவைத்து
முன்பல தானி யங்கள் முத்துடன் சுற்றும் வைத்து
பின்பது அலங்கு வித்து பேழையை மனையில் வைப்பாம்.

இ-ள். ஒன்பது, ஏழு, ஐந்து, பதினைந்து இவைகளில் இயன்ற மட்டும் அறைகள் செய்வித்து நடுவறையில் பணியும் பொன்னு மிட்டு மற்றுமுண்டான அறைகளில் பலதானிய வகைகளும் முத்து பவளம் முதலானவைகளும் வைத்து மனையினுள்ளே பேழையை வைப்பார்கள், எ-று.

சாலையின் மையந் தன்னிற் சதுரமா யகலந் தன்னைக்
கோலியே யொன்பதாகக் குறித்துள மேற்கு நாலும்
வாலிய கிழக்கு மூன்றும் தெற்குமோர் நான்கும் விட்டு
சீலமாய் வடக்கு மூன்றும் நடுவது கெற்பஞ் செய்யே 414

இ-ள். அந்தசாலையின் மையத்தை ஒன்பதாகப் பங்கிட்டு மேற்கில் நாலும், கிழக்கில் மூன்றும், தெற்கில் நாலும் விட்டு வடக்கில் மூன்றும் கெற்பம் வகுப்பார்கள், எ-று.

## பதவி.

காலிநிலத்தில் தேவாலய முதலிய கிரகங்களெடுக்கவேண்டிய போது வாஸ்துபதம் கூ-ச-போட்டு பதவின்யாசம்செய்து வாஸ்து ஓமம், வாஸ்துபூசை, வாஸ்துபலி, வாஸ்து சாந்தியும் விதிப்படி செய்து முகூர்த்தம் செய்யவும்.

---

## கடைக்கால் சங்கு ஸ்தாபனமாவது.

வாஸ்து ஒருமனையின் ஈசான்ய மூலையில் சிரசும், நிருதிமூலையில் காலுமாக இடக்கையைக் கீழேவைத்துப் படுத்திருப்பன, சிரசிலிருந்து காலுபங்கு தள்ளி ஐந்தாம் பங்கை மூன்றுபங்கு செய்து இரண்டுதள்ளி மற்ற பங்கில் கடைக்கால் போடவும், சங்கு ஸ்தாபனம் பண்ணவும் சுபம்.

---

## மனை அகலம் வைக்கவேண்டிய அடிகளின் பலன். மனைகள் அகலம் நிகளத்துக்கு வீட்டுக்குள் அறைகள் கூடங்கள் வாசல்கள் முதலியவைகள் வைப்பதற்கு லட்சணம்.

அவனவன் காலினாலே அளந்து காலடியு மெண்ணிக்
கவனமாய் அகல நீளங் கணக்கது கண்டு தானே
புவனிமேல் வீடுகட்டப் பொருத்தமுள் ளளவு வைத்துச்
சிவனுமைக் குரைத்த தோர்சிற் சிற்பசாத்திரமீ தாமே. 415

இ-ள். உலகிற் பிறந்த ஒவ்வொரு மனிதரும் அவனவன் காலடியால் அளந்து காலடி எத்தனை யென்று அகலமும் நீளமும் கணக்கிட்டுக்கொண்டு இத்தனையடிக்கு நல்ல பொருத்த முள்ளதென் றறிந்து அடியிற்கண்ட செய்யுட் பிரகாரம் அடியளந்து வீடுகட்ட மிகவும் நன்மையுண்டாகு மென்று (சாக்ஷாத் பரமசிவன் பார்வதிக்குபதேசித்த) ஓர்சிற்பசாஸ்திர மிதுவானதால இதிற் கண்டவண்ணம் மாட கூட மாளிகைகள் கட்ட உத்தமம், எ-று.

ஒன்றுட னிரண்டு மூன்றோ டோங்கும்நான் கைந்திலுக்குள்
நன்று கொட்டகை தாழ்வாரம் நடைவழி யமையச் செய்யில்
நன்றுபாற் பசுவிருத்தி கனதனந் தீர்க்க வாயுள்
என்றுமே நன்மை யென்றே இயம்பினு ரீசன்றனே. 416

இ-ள். ஓரடி யீரடி மூன்றடி நான்கடி ஐந்தடிக்குள் எத்தனை யடியாயிருந்தாலும் கொட்டகை, தாழ்வாரம், நடைவழி முதலியன செய்யில் நன்மையாம். அதன்பலன், கன்றுகாலி விருத்தியும், பால் பாக்கிய விருத்தியும், தனதானிய விருத்தியும், ஆயுள் விருத்தியும், எந்நாளும் நந்நாளாய் நன்மையுண்டாமென்று யீசன் உரைத்ததா மென்பதாம், எ-று.

ஆறடி யகலநீளம் அமைத்திடும் வீட தாகில்
சோறடி தானியங்கள் சுகமுநற் பாக்கி யங்கள்
சேறடி மனையாள் க்ஷேமம் செல்வமும் மிகுதி யாகும்
வீறடி விமலை யாலே மேன்மைசேய் விருத்தி யுண்டே. 417

இ-ள். ஆறடி யகல நீளம் அமைத்தவீடு கட்டினால்-இலட்சுமி கடாட்சத்தால் தானியப் பெருக்கமும், தன் மனைவிமக்கள் க்ஷேம மும், தக்க சுகபோஜனமும், தனமென்னுஞ் செல்வச் சிறப்பும் மிக்க விருத்தியாய்ச் சகல பாக்கியமும் உண்டாயிருக்கு மென்ப தாம், எ-று.

ஏழடி யகலநீளம் எண்ணியே அமைப்பா ராகில்
தாழுவே பொருளு மேகுந் தரித்திரம் மிகவுண்டாகும்
ஊழதால் வினையு முண்டாம் உறவுளோர் பகையு மாகிப்
பாழதாய்ப் போகு மென்றே பரமனு முரைசெய் தாரே. 418

இ-ள். ஏழடி யகலநீளமாக மனைகோவில்-கையிலுள்ள பொரு ளும் போகும் ..ஆக் தரித்திரமும் மிகவுண்டாகும், ஊழ்வினை வந்து சூழும் உறவோரும் பகைவராவர் உற்றமனையும் பாழடை ந்துபோம், எ-று.



எட்டடி யகல நீளம் இசைந்துவீ டெடுப்பா ராகில்
அட்டதிக் கிரகமுண்டாம் சுதன்பெறு மனைவியுண்டாம்
மட்டிலாச் செல்வ மோங்கும் மைந்தரால் உதவியுண்டாம்
பட்டதோர் மாந்தளிக்கும் பாக்கிய மிகவுண் டாமே. 419

இ-ள். எட்டடி அகல நீளமாகில்-அம்மனைக் குரியவர் அஷ்ட திக்கிரகமும், மகப்பள்ள மனைவியும், மட்டிலாச்செல்வமும், மைந்தரால் இல்லற வாழ்வும், தீர்க்காயுசும் மாந் தளிர்த்ததுபோல் பாக்கியம் பெற்று வாழ்வார், எ-று.

ஒன்பதா மகலநீளம் ஒக்கிடி லுயிருஞ் சேதம்
அன்புட னதனில் வாழ்ந்தா லருங்குடி நசித்துப் போகும்
இன்பமெந் நாளுமில்லை யெவர்களுஞ் சலிப்பாய்ச் சொல்வர்
முன்புள பொருள்போ மென்றே முக்கண்ண னியம்பினாரே.

இ-ள். ஒன்பதடி யகல நீளம் ஒழுங்காய் வீடு அமைத்திருந்தாலும்-இன்பமெந்நாளுமில்லை, இவன் குடி நசித்துப்போகும் வந்தவர் நின்றவர் கண்டவர் எவர்களுஞ் சலிப்பாய்ப் பேசுவார்கள் உயிருக்கும் பொருளுக்கும் உடனே சேதம்வரும், எ-று.

பத்தடி யகல நீளம் பரிவுடன் வைத்த பேர்க்கு
கொத்துட னாடு மாடுங் குறைவிலாச் செல்வ முண்டாம்
மெத்தவே நன்மை யெய்தும் விளைவுவே ளாண்மை காணும்
கத்தனா ரிவைக டம்மைக் கருதியே சொன்னார் தாமே. 421

இ-ள். பத்தடி அகல நீளமாகில்—ஆடு மாடுகள் விருத்தியும், அகலாச் செல்வமும், வேளாண்மை செழிப்பும் பாலுஞ் சோறும் மிக்க நன்மையும் உண்டாம், எ-று.

பத்துட னொன்ற தாகிற் பலனது சொல்லக் கேளாய்
அத்தமும் நகையு முண்டாம் அசனமு மிகுதி யுண்டாம்
சத்துரு விலகிப் போவார் சங்கரன் கிருபை யுண்டாம்
மெத்தவே பாக்கி யங்கள் மென்மேலும் பெருகி வாழ்வாம்.

இ-ள். பதினோரடி அகல நீளமாகில்—ஆடையாபரணங்களும், அத்தமாகிய திரவியமும், அன்னமாகிய அகலமும் மிகுதியுண்டாம் சத்துருக்கள் வந்தாலும் விலகிப்போவார்கள், சங்கரன் கிருபை யால் சகல பாக்கியமும் மென்மேலும் பெருகி வாழ்வார், எ-று.

ஈராறு அடிய தாகில் இன்பமுஞ் சுகமு மில்லை
போரும் பிணியி னாலே பெண்டுபின் ளைகளும் நைவார்
வாராத ஆபத் தெல்லாம் வந்திடும் பொல்லாப் புண்டாம்
மாராத கலக்க மென்றே வழுத்தினர் வானுந் தானே. 423

இ-ள். பனிரண்டடி அகல நீளமாகில்—இன்பசுகங்களெல்லா மிழந்து வியாதியாற் றுன்புற்று தேகம் மிகமெலித்து பெண்டு பின் ளைகளுந் திண்டாட்டமாய்வாட அவர்களால் இடையூறும் பொல் லாப்பு முண்டாகி வருந்துவான், எ-று.

ஏழுட னறதாகில் எண்ணிய கருவந் தீதாம்
தாழ்வுடன் செல்வம் போகுந் தரித்திர மிகவுண்டாகும்
வாழ்வுடன் மக்கள் நோயாம் மகிழ்ச்சி யெந்நாளு மில்லை
பாழ்படு மென்றே யீசன் பகவதிக் கியம்பினரே. 424

இ-ள். பதின்மூன்றடி அகல நீளமாகில்-நினைத்த காரியம் முடி யாமல் தாழ்வுபெற்று செல்வத்தை யிழந்து தரித்திரமுண்டாகிப் பெண்டு பிள்ளைகள் பிணியால் தேகம் மெலியத் துன்பப்படுவ தோடு அம்மனையும் பாழ்படும், எ-று.

எட்டுடன் ஆறுமாக இயல்மனை கோலு வானேல்
தட்டுமுட் டெல்லாந் தோற்றுத் தரித்திர மிகுதியாகும்
பட்டுடன் பணிகள் போகும் பைந்தொடி வேசி யாவள்
கட்டிடும் பெண்டிழந்தே கவலையுற் றிருப்பான் பாரே. 425

இ-ள். பதினான்கடி யகல நீளமாகில்—தட்டு முட்டுகளாகிய பண்ட பாத்திரங்களுந் தோற்றுத் தரித்திர மிகுதியால், பட்டு

வஸ்திரங்களையும், பணிதிகளாகிய ஆபரணங்களையுந் தாலிகட்டிய மனையாளையும் பிறர்பால் கொடுத்தாக் கவலையுற்றிருப்பான், எ-று.

மூவைந்து அகல நீளம் மூபந்தியாய் வைப்பாராகில்
தாவந்த மதிக மாகுந் தரித்திரம் மிகவு முண்டாம்
பாவமும் பழியும் நோயாற் பாரில்வீற் றிரோக மாகும்
ஆவது வேண்டா மென்றே ஆகமத் துரைத்த வாறே.

இ-ள். பதினைந்தடி யகல நீளமாகில்—தாகந்தமாகிய இக்கட்டும், தரித்திரமாகிய வறுமையும், பழிபாவமும், வியாதியால் மெலிதலும் மனக்கிலேசமும் உண்டாம், எ-று.

பத்தாட் டுறைதாகிற் பாக்கியம் மிகவும் சேரும்
ரத்தின பரணமுண்டு நற்றொழிற் செட்டி மூண்டு
சத்துரு விலகிப் போவார் சங்கைக ளொன்று மில்லை
மெத்தவும் அடிமையுண்டு வேளாண்மை மிகுதி யாமே. 427

இ-ள். பதினாறடி யகல நீளமாகில்—அழியாச் செல்வமும் ஆபரணச் சேர்க்கையும், அடிமையாள் விருத்தியும் சத்துருக்களால் நன்மையும், வியாபார விருத்தியும், வேளாண்மை பலிதமும் உண்டாம், எ-று.

ஈரைந்தோ டேழு மாகில் எதிரியும் வணங்கி நிற்பன்
பாரினிற் பெண்டு பிள்ளை பாக்கியம் ஆக்க மூக்கம்
வீரிய விருத்தி ராஜ வெகுமதி வித்தை நாளும்
தாரியல் கொன்றை சூடும் சங்கர ருதவி யுண்டே. 428

இ-ள். பதினேழடி யகல நீளமாகில்—ஆக்கமும் ஊக்கமும் அதிக பாக்கியமும், அரசர் வெகுமானமும், மனைவி மக்கள் க்ஷேமமும், மாற்றலர் கண்டால் வந்து வணங்கலும், மட்டடங்கா வித்தையும், மகாதேவ ருதவியு முண்டாம், எ-று.

எட்டுடன் பத்த தாகில இலக்குமி விருப்ப தில்லை
பட்டுடன் பணிநி யெல்லாம் பலரிடம் விலைக்கு விற்பர்
கட்டுள மனையாள் நோயாற் கலங்குவள் கடனு முண்டாம்
தட்டுதான் செய்யு மென்றே சங்கர னுரைத்தார் பாரே. 429

இ-ள். பதினெட்டடி அகல நீளமாகில்—இலட்சுமி கடாட்சம் நீங்கி தரித்திரம் மேலிட்டு ஜீவன நிமித்தம் கட்டும் பட்டாடைக ளும், கைகால் காது கழுத்து முதலிய இடங்களிலணியும் ஆபர ணாதிகளையும், வெருரிடம் காண்பித்து விலைக்கு விக்கிரயஞ்செய் தும், மனையாள் வியாதியால் மனம்வாடி மெலிதலும், கடனுக்குள் ளாகிக் கஷ்டப்படுதலு முண்டாம், எ-று.

ஈரொன்ப தொன்று மாகில் எத்திசை அடியாள் சாவள்
பாரினிற் செட்டு செய்யப் பலியாது தீது மெத்த
வீரிய மனையா டாளும் வீடுவிட் டகன்று போவள்
காரியக் கெடுதி யென்றே கத்தனு முரைசெய் தாரே. 430

இ-ள் பத்தொன்பதடி அகல நீளமாகில்-அடியாள் மரணமும் அன்னிய புருடனைத் தேடி யருமை மனையாளகலவும், காரியக்கெ டுதியும், வியாபாரஞ் செய்தும் கைப்பொருள் நஷ்டமு முண் டாம், எ-று.

இருபது அடியதாகில் ஏற்றமாங் கிரகம் நன்றும்
பிரபலக் கீர்த்தி யோங்கும் பெறுவது பிள்ளை யாகும்
வருவது அசுவ யோகம் மன்னவர் நேய முண்டாம்
திருவுடன் மகிழ்ச்சி யெய்தும் செய்தொழில் விருத்தி யாமே.

இ-ள். இருபதடி அகல நீளமாகில்—மனைசெழிப்பும், மகவுற் பத்தியும், அதிக விர்த்தியும், பிரபலக் கீர்த்தியும், அசுவயேற்ற மும், திருமகளாகிய இலட்சுமி கடாட்சமும் வர்த்தகப் பலிதமு முண்டாம், எ-று.

காலைந்து வொன்று மாகில் நாரணன் கிருபை யாலே
பாலுள பசுக்கள் மெத்த பாக்கியம் வந்தே யெய்தும்
சாலவே அயலூர் வாசம் சஞ்சல மகன்று வாழ்வன்
ஆலமு முண்ட வீச ரருளினு ருமைக்குத் தானே. 432

இ-ள். இருபத்தோரடி அகல நீளமாகில்—நாரணன் கிருபை யாலே பாற்பசுக்களும், அழியாச் செல்வமும், அடிக்கடி அயலூர் வாசமும், செழித்தவாழ்வு முண்டாம், எ-று.

மூவேழு மொன்று மானல் மூத்தவள் வாச மாகும்
சாவது பெண்டு பிள்ளை சலிப்புவந் தெய்துங் கண்டாய்
பூவது பூத்தி டாது புண்ணிய மெய்தி டாது
ஆவதை யவனி மீது அறிந்தான் சொன்ன தாமே. 433

இ-ள். இருபத்திரண்டடி அகல நீளமாகில்—அம்மனையில் மூதேவி வாசஞ் செய்வதன்றி பெண்டு பிள்ளை மரணமும் தீராக் கிலேசமும் பூவாது காயாது பூத்திடாது என்ற பழிபாவமும் உண்டாம், எ-று.

இருபது மூன்றே யாகி லெய்திடுங் கொடிய நோய்கள்
வருவது கலங்கி நிற்கும் வாழ்வுமே அற்ப மாகும்
திருமகள் கடாட்ச மேகும் செல்வமும் நசித்துப் போகும்
மருவலர் பயமு முண்டாம் வயலில்வே ளாண்மை போமே.

இ-ள். இருபத்து மூன்றடி அகல நீளமாகில்—தீராதநோயும், சரித்திரமும், மூதேவி கடாட்சமும், பொருட்சேதமும், வேளாண்மை யழிவு முண்டாம், எ-று.

உருநான்கு மிருபதாகி லுற்றதோர் வயது குன்றும்
ஒருநான்கு மிருபத் தொன்றி லுமையவள் கடாக்ஷமேகும்
இருநான்கோ டெட்டுப்பத்தி லிலகும் நோய் கவலையென்றே
தருமனேன் மணியாள் பங்கன் சதாசிவன் சொன்ன தாமே.

இ-ள். இருபத்து நான்கடி அகல நீளமாகில்—ஆயுள்குன்றும், இருபத்தைந்தடி யகல நீளமாகில்—உமையவள் கடாட்சமேகும்,

இருபத்தாறடி அகல நீளமாகில்—தேகபீடையும் தீராக் கவலையு முண்டாம், எ-று.

ஏழுட னிருப தாகில் எய்திடுங் குபேர வாழ்வு
தாழ்விலா வாழ்வுபெற்றுத் தரணியோர் மதிக்க வாழ்வர்
பாழ்படும் பயிர்களெல்லாம் பலிதமாய் விளையும் பாரு
ஊழ்வினை யொன்று மில்லை யென்றா னுரை செய்தாரே. 436

இ-ள். இருபத்தேழடி அகல நீளமாகில்-நிறைந்த செல்வமும் குபேர வாழ்வும் வேளாண்மை செழிப்பும், தீமை விலகலு முண்டாம், எ-று.

இருபது மெட்டு மாகு மின்பமுஞ் சுகமு மில்லை
கருவுகி லுதித்த பிள்ளை காலனார் கடுகி யேகும்
வரும்பொரு ளதுவுஞ் சேதம் வறுமையு மிகவுண்டாகும்
தருகுமில் விட்டு நீங்கச் சதாசிவ னுரைத்த வாறே. 437

இ-ள். இருபத்தெட்டடி அகல நீளமாகில்-அசௌக்கியமும், புத்திரர் மரணமும், தனச்சேதமும், தரித்திரமு முண்டாம், ஆதலால் அம்மனையே விட்டு நீங்குதலே உத்தமமாம், எ-று.

ஒன்பது மிருபதாகி லோங்கிய செல்வ மெய்தும்
ஒன்பது மிருபத் தொன்றி லுலகெலாம் புகழ்ச்சி யுண்டாம்
அன்புள மனையா டானும் ஆண்பெணைப் பெற்று வாழ்வள்
இன்பமும் மனச்சந்தோஷ மிலங்குமென் றானுந் தானே. 438

இ-ள். இருபத்தொன்பதடி அகல நீளமாகில்-அழியாச்செல்வ முண்டாம், முப்பதடி அகல நீளமாகில்-புகழ்ச்சியும் இலேச நிவர்த்தியு முண்டாம், எ-று.

முப்பது மொன்று மானால் முக்கண்ண னருளுண்டாகும்
முப்பது மிரண்டு மாகில் முகுந்தனார் கிருபை யுண்டாம்
செப்பிய மனைவி யின்பம் சேயருற் பத்தி நன்மை
தப்பிலை பொருள் வரத்து சகலமும் விருத்தி யாமே. 439

இ-ள். முப்பத்தோரடி அகல நீளமாகில்—முக்கண்ணனாகிய பரமேஸ்பரர் கிருபையால் சகல பாக்கியமு முண்டாம், முப்பத்திரண்டடி யகல நீளமாகில்-மகாவிஷ்ணுவின் கடாக்ஷத்தால் சகல பாக்கியமும், புத்திரோற்பத்தியும் சொல் மேன்மையும் செழித்த வாழ்வு முண்டாம், எ-று.

ஐயாறு மூன்று மாறு லவனியிற் செல்வ முண்டாம்
ஐயாறு நான்குமாகி லம்மனை குடிவிட் டோட்டும்
ஐயாறு மைந்து மாறு லட்டலட்சுமியுஞ் சேர்வள்
ஐயாறு மாறு மாகி லரசரோ டரசாள் வாரே. 440

இ-ள். முப்பத்து மூன்றடி யகல நீளமாகில்-செல்வம் விர்த்தியாம், முப்பத்து நான்கடி யகல நீளமாகில்—அம்மனை நசித்துப் போம், முப்பத்தைந்தடி யகல நீளமாகில்—அஷ்டலட்சுமி கடாட்சமுண்டாம், முப்பத்தாறடி யகல நீளமாகில்—இராஜபாக்கிய முண்டாம், எ-று

ஏழைந்து மிரண்டு மாகி லின்பமும் பொருளு முண்டாம்
ஏழைந்து மூன்று மாகி லிருப்பிடம் பசாசு சேரும்
ஏழைந்து நாலு மாகி லின்பமுஞ் சுகமு முண்டாம்
ஏழைந்தோ டைந்து மாகி லெஞ்ஞான்றுங் கலிப்புண் டாமே.

இ-ள். முப்பத்தேழடி யகல நீளமாகில்-சந்தோஷமும், செல்வமு முண்டாம், முப்பத் தெட்டடி யகல நீளமாகில்—அம்மனையிற் பூதப்பிரேத பசாசுகள் வசிக்கும், முப்பத்தொன்பதடி யகல நீளமாகில் செல்வமும் சுக சௌக்கியமும் உண்டாம், நாற்பதடி யகல நீளமாகில்—நீராச் கிலேசமுண்டாம், எ-று.

என்னைந்து மொன்றேயாகி லெய்திடுங் [illegible] செல்வம்
கண்ணவே யெழாறுகில் இலக்குமி கடாட்ச முண்டாம்
திண்ணமா வேழைந்தெட்டின் சிறப்பிலை தீங்குண்டாகும்
கண்ணவே யாறுமெட்டின் கண்கெட்டும் போவார்தாமே. 341

இ-ள். நாற்பத்தோரடி யகல நீளமாகில்-குபேர செல்வ முண்டாம், நாற்பத்திரண்டடி யகல நீளமாகில் இலட்சுமிகடாட்சத்தால்

சகல பாக்கியமு முண்டாம். நாற்பத்து மூன்றடி யகல நீளமாகில் பொல்லாப்புண்டாம், நாற்பத்து நான்கடி யகல நீளமாகில் நீங்கா வியாதியும் பொருட்சேதமு முண்டாம், எ-று.

நாற்பதோ டைந்துமாகில் லட்சுமி கடாட்ச முண்டாம்
நாற்பதோ டாறு மாகில் நாயக னிருக்க மாட்டான்
நாற்பதோ டேழுமாகில் நலமிலை வறுமை யுண்டாம்
நாற்பதோ டெட்டுமாகில் நட்டந்தீப் பட்டுப் போமே. 443

இ-ள். நாற்பத்தைந்தடி யகல நீளமாகில்—லட்சுமி கடாட்ச முண்டாம், நாற்பத்தாறடி யகல நீளமாகில்—அம்மனைக்குத் தலைவனாகிய நாயகன் இருக்கமாட்டான், நாற்பத்தேழடி யகலநீளமாகில்—என்னாளும் வறுமையுடையவனா யிருப்பான், அம்மனையைவிட்டு நீங்கில் அவன் வறுமையும் நீங்கி விடுமென்று சொல்லவும், நாற்பத்தெட்டடி யகல நீளமாகில்—அவ்வீடு தீப்பட்டுப் போகுமென்பதாம், எ-று.

ஐம்பதிற் குறையொன்றானு லதிலே மூதேவி வாசம்
ஐம்பது சரியதானு லாவுபால் பாக்கியந்தான்
ஐம்பது மொன்று மானு லட்டலெட் சுமியும் வாசம்
ஐம்பது மிரண்டு மானு லதிகசம் பத்துண் டாமே. 444

இ-ள். நாற்பத்தொன்பதடி யகல நீளமாகில்—அம்மனையில் மூதேவி வாசமாம், ஐம்பதடி யகல நீளமாகில்—ஆவுபாற் பாக்கியங்கள் அதிக விர்த்தியாயிருக்கும், ஐம்பத்தோரடி யகல நீளமாகில்—அம்மனையில் அஷ்ட லெட்சுமிகளும் வாசஞ் செய்வார்கள். ஐம்பத்திரண்டடி யகலநீளமாகில்-அதிக சம்பத்துண்டாகும், எ-று.

ஐம்பது மூன்றுமாகி லடர்பிணி கவலையுண்டாம்
ஐம்பதும் நாலதாகி லதிகமாஞ் செட்டு லாபம்
ஐம்பது மைந்துமாகில் ஆக்கமும் பொருளும் நஷ்டம்
ஐம்பதும் ஆறுமாகி லத்தமுங் குபேர வாழ்வே. 445

இ-ள். ஐம்பத்து மூன்றடி யகல நீளமாகில்—அதிகக் கவலையும் அடர்ந்தநோயுங் கொண்டிருப்பன், ஐம்பத்து நான்கடி யகல நீளமாகில்—செய்யும் வியாபாரத்திற் செட்டு லாப மதிகமுண்டாம்,

ஐம்பத்தைந்தடி யகல நீளமாகில்—புத்திர ராக்கமும் பொன்பொருளும் நஷ்டமாம், ஐம்பத்தாறடி யகல நீளமாகில்—குறையாத செல்வமும், குபேரவாழ்க்கையும் உண்டாம், எ-று.

ஐம்பது மேழுமாகி லசுவவா கனமு முண்டாம்
ஐம்பது மெட்டுமாகி லத்தநா மன்று போகும்
ஐம்பது மொன்பா னாகில் யாசக மெடுத்து வாழ்வன்
ஐம்பதும் பத்துமாகி லதிகபாக் கியமு மாமே. 446

இ-ள். ஐம்பத்தேழடி யகல நீளமாகில்—அரசர் வாழ்க்கையும் அசுவ வாகனமும் உண்டாம் ஐம்பத்தெட்டடி யகல நீளமாகில்—திரவிய நாசமும் நீராரோகமும் மரணக்கவலையு முண்டாம், ஐம்பத்தொன்பதடி யகலநீளமாகில்—பிச்சை யெடுத்துண்பன், அறுபதடி யகல நீளமாகில்—ஆடியாடு விருத்தியும் அதிகப் பொருள வரத்தும், பாக்கியமு முண்டாம், என்றவாறு.

---

## நிலை சொல்லும்படி.

கன்னிலை தேவர்க் காகுங் கனமறை யோர்க்கு வேம்பாம்
மன்னவர்க் காச்சா தேக்கு வைசியர்க் கிலுப்பை யாகும்
பன்னுவே ளாளர் கட்டுப் பகர்தெங்கு முசிலை யாகும்
இன்னவை தமிழி னூலே யியம்பினர் வேதத் தோரே. 447

இ-ள். கல்நிலை தேவர்களுக்காம், மறையவருக்கு வேம்பாகும், அரசர்களுக்கு ஆச்சாதேக்காகும், வைசியர்க்கு இலுப்பை மரமாகும், தென்னமரமும், உசிலை மரமும்—வேளாளர்க்காகு மென்றவாறு.

நிலைதனை யகலங் கொள்ளில் நேர்படச் சேர்க்கும் போது
நிலையக லத்தி னூலே கனமது நீடிக் கேண் மின்
நிலையக லித்து முக்கா லரைபத்துக் கோலே யாதல்
நிலையக லத்தால் வந்த நிலத்தள வொத்த தாமே. 448

இ-ள். நிலை யகலம் கொள்ளும்படி நிலை யகலத்தால் கனங் கொள்க, நிலை யகலத்தில் நூக்கா லிலையென்ன நிலை யகலக்கால் வந்த நிலத்தளவு ஒக்குமென்றவாறு.

மட்டுக் கொண்ட நிலைநீளம் வளையின் கீழ்மன் னவர்க்காகும்
எட்டுக் கூறிட் டாறுமொன்று மிச்சம் மூன்று படியாகும்
வட்ட மலைபோற் றனம் படைத்த மங்காய் துங்க மதிமுகத்தாய்
சட்ட மாக மயனுரைத்த சங்கைதெளிது விது வாமே. 449

இ-ள். நிலை நீளத்துக்குப் பிரமாணம் வளையின்கீழ் மன்னவர்க் காகும், எட்டுக் கூறிட்டு ஆறறை மிச்சங்கொள்வது, அதனை எட்டுக்கூறிட்டு நடு சு, க-கூட்டி துளை இரண்டும் கொள்வது, முன் சொன்ன கூறு சு-யும் ரு-கூறு செய்து கூறு துளையில் கடாவிநீக்கி நின்ற ந-கூறும்படியாக வைப்ப தென்றவாறு.

ஓதிய நிலைநீ ளத்தை யொன்பது கூறு செய்து
நீதியா யிரண்டு மைந்து மிதில் விரல் முறியா வண்ணம்
பாதியாம் விரலை யொற்றிக் கொள்வது பழுதொன் றில்லை
மீதியா யிரண்டொன் பானல் மேலைந்து கீழ் நால் காண்க, 450

இ-ள். நிலை நீளத்தை ஒன்பது கூறுசெய்து உ, ரு-இதில் விரல் முறியாமல் பாதிவிர லொற்றிக் கொள்வது உ, கூ-கூறு செய்து மேல் ரு-கீழ் ச-கொள்வதென்றவாறு.

மட்டுறை நிலைநீ றத்தை மன்னிய வேழு செய்து
ஒட்டொடா றிரண்டு நீக்கி யொன்றினை யொன்பதாக்கி
இட்டதோர் கூறு தன்னில் மேலைந்து கீழ் நான் காகும்
லெட்டிடிற் பாதி போலும் விரலொற்றிக் கொள்வர் தாமே. 451

இ-ள். நிலை நீளத்தை எ-கூறுசெய்து, சு, உ-கூறு நீக்கி நின் றதை ஒன்பது செய்து மேல் ரு, கீழ்—ச, உ-கூட்டிற் பாதிபோம் விரலொற்றிக் கொள்ளவ தென்றவாறு.

அறியதோர் சுவர் கனத்தை யாறுள கூறு செய்து
நிரையாக நின்ற கூறில் நிலே யது மையந் தன்னில்
சரியாக வைக்க வேண்டாஞ் சாத்திரப் படியே நின்ற
தொருகூறு வொத்தித் தள்ளி யுள்ளாக வைக்க நன்றே. 452

இ-ள். வைத்த சுவர் கனத்தை சா-கூறு செய்து நின்ற கூறின் மையத்தில் வைக்கவேண்டாம். முன்னோர்கள் சொன்ன சாஸ்திரத் தின்படியே நின்றதில் க-கூறு ஒத்தித்தள்ளி உள்ளாக வைக்க நன்று, எ-று.

---

## கதவுகளி னியல்பு.

காவலும் தேவர்க் காகும் நான்மறை யோர்க்கு வேம்பாம்
மேவுமன் னர்க்குத் தேக்காம் மிக்க வைசியர்க் கிலுப்பை
தாவுவே ளாளர் தெங்கு தனி யெட்டி யெவர்க்கு மாகா
காவிய மாகச் சொன்னோ கதவுக ளியலபு தானே. 453

இ-ள். காவல் தேவர்க்காகும், வேப்பு மறையோர்க்காகும், தேக்கு அரசர்க்காகும், இலுப்பை வைசியர்க்காகும் தென்னமரம் வேளாளர்க்காகும், எட்டிமரம் யாவர்க்கு மாகாது.

சிறப்புடை தேவர்க் கண்டல் புறத்தலா மிரண்டு மாகும்
சிறப்புடை வடமி ரண்டா யடைத்தலுந் திறத்தல் தானும்
சிறப்புடை யகல மொன்று தேவர்கட் கன்றி யாகா
சிறப்புடன் கதவுங் கோலுஞ் சிக்கெனச் செய்தால் நன்றே. 454

இ-ள். சிறப்புடைத்தாகிய தேவர்கட்கு அண்டல் புறத்தலாகிய கதவு இரண்டுமாகும், அகண்ட கதவு ஒன்றாகில் தேவர்க்கன்றி மனிதர்க்காகாது, சிறப்புடைத்தாகிய கதவுங் கோலும் சிக்கெனக் கொள்க, என்றவாறு.

நிலையுறு மரங்கள் தானும் நீள்முடி நிலையு மட்டங்
கலக் கமாங் கதவுக் கான சூத்திரப் படிது ணைக்கோள்
நிலக்க மாங் தாப்பாளொன்று இரண்டுமே யளவ தாகும்
பலக்க கட்டிடவும் வேண்டில் பன்னி ரண்டளவு கொள்வாம். 455

இ-ள். நிலைக்கான மரங்களில் நீளமும், நிலையும் மட்டமுங் கொண்டு கதவுக்கானபடியே துளைகொண்டு தாப்பாள் ஒன்றிரண் டளவாகும். பலதாளிடவேண்டில் தாப்பாள் பன்னிரண்டளவு கொள்ளலா மென்றவாறு.

---

## கதவி னோசை.

தாளவை யொன்று மூன்று மைந்துபாற் கதவு திறக்க
மீளவே கதவு தானும் விடுமத னோசை வேறு
காளமாங் கழுதை செக்குக் காலது கவலை யாக்கும்
தாளம்வே ழத்தி னோசை சங்கொலி மிகவும் நன்றே. 456

இ-ள். தாள் க, ங, ரு-மாம் கதவுதிறக்கப்—பின்னும் கதவி னோசை காளம்போன்றும் கழுதைபோன்றும் செக்குபோன்றும், சப்திக்குமாகில் தீமையைத்தரும், தாளம்போன்றும் யானையைப் போன்றும் சங்குபோன்றும் சப்திக்குமாகில் உத்தமமாம், எ-று.

அங்கியே லாடுமாகில் அரசராற் கேடுண்டாகும்
சிங்கமே லாடுமட்கிற் சிவனுக் கிடறு சொல்லும்
தங்கிய நிருதி தன்னில் தனியிலாச் செங்கோ லாகும்
மங்குற வருணனேக்கி லாருயிர்க் கழிவு தானே. 457

இ-ள். கதவானது வடகீழ் மூலையில் நின்றாடில்—இராஜாக்க ளால் கேடுவரும், தெற்கேநின்றாடில்—சிவனுக்குக் கேடுவரும், தென்மேல் மூலையில் நின்றாடில்—பொருட் சேதமாம், மேற்கேநின் றாடில்—உயிருக்கழிவா மென்றவாறு.

---

## வாசலுதயம்

### வேறு.

சிங்கம் ஜனிக்கில் தென்வாசல் சேவுங் கனிறுந்தான் ஜனிக்கில்
கொங்கார்மேற்கும்வடக்குமதாங்கொடியே ஜனிக்கில்நாற்றிசையாம்
சிங்கம் பெருமாள் கோயிலுக்காஞ் சேவே மகாந் தேவர்க்காம்
கொங்காரானை கணபதிக்காம் கொடிதான் யாவர் தமக்காமே. 458

இ-ள். சிங்கம் ஜனிக்கில்—தென்வாசலாம், ரிஷபம்ஜனிக்கில்—மேற்கு வாசலாம், யானை ஜனிக்கில்—வடக்கு வாசலாம், கொடி ஜனிக்கில்—கிழக்கு முதல் நான்கு திசையுமாம், அவற்றுள் சிங்கம் ஜனிக்கில்—பெருமாள் கோயிலுக்காம், ரிஷபம் ஜனிக்கில்—மகாதேவர்க்காம், யானைஜனிக்கில்—விநாயகர்க்காம், கொடிஜனிக்கில்—யாவர்க்குமாம், எ-று.

பத்திகள் பத்திசேரிற் பதியுட னிருந்து வாழ்வர்
பத்திகள் கலையு மாகிற் பதியது கலையு மென்ன
உத்திரந் தூண்கள்தானு மொழுங்கிலே நில்லாதாகில்
சத்துருவாலே யந்தச் சாலைதீப் படுவ தாமே. 459

இ-ள். பத்திசேரில்—பத்திபுடன் இனிதாக வாழ்வர், பத்திகள் கலையுமாகில்—பதிகுலைந்து போம், உத்திரம் தூண் ஒழுங்கில் நில்லாவிட்டால்—சத்துருக்களால் மனை தீப்படும், எ-று

வளவது வாசல் தன்னை மன்னிய மயனூர் சொன்ன
அளவினில் மனையைக் கோலி யன்புட னிருப்பா ராகில்
உளமது மகிழ மிக்க உறவுட னினிது வாழ்வார்
இளமை திங்களினு டன்னி லிலட்சுமி கரமுண்டாமே. 460

இ-ள். மனைகோல வேண்டில் மயனென்னும் தேவசிற்பாசாரியார் சொல்லிய நியமப் பிரகாரம் அளவெடுத்து வாசல் முதலியன அளவோடு விட்டு பரப்பு பரப்பி சுபநாளிற் குடிபுகுந்தால் இலட்சுமி கடாட்சம் பெற்று சுகித்து வாழ்வார்கள், எ-று.

## மனைக்கு கருப்பதிக்க முகூர்த்தம்.

வெள்ளி வியாழஞ் சனி திங்கள் மேவும் புதனுஞ் சராசி
தெள்ளுஞ் சோதி யுத்திரங்கள் திருவோணமகம் புனர்பூசம்
உள்ளசதய மிருகசிர ரூரோகணி யனுஷ மிரேவதியில்
என்னுமட்டமி யுவாவுடனே இருத்தை நீக்கிக் கருப்பதியே.

இ-ள். வாரங்களில் வெள்ளி, வியாழம், சனி, திங்கள், புதனும், இராசிகளில் சராசிகளும், நட்சத்திரத்தில் உத்திரம், உத்திராடம், திருவோணம், மகம், புனர்பூசம், சதயம், மிருகசீரிடம், ரோகணி, அனுஷம். ரேவதி, இவையுட்பட அஷ்டமியும், உவாவும், இருத்தையும் நீக்கி கருப்பதிக்கவும், எ-று.

ஆட்சிமீனங் குடியாகும் ஆடுமெருதும் நோய் செய்யும்
சூட்சமிதுனந் துயர்விளைக்குந் துய்யநண்டு நிதியாகும்
காட்சிக்கினிய புதல்வருண்டு கன்னி கருமங் கைகூடும்
மாட்சிகோலுந் தேளுமுடன் மனையாள் பெரிதாய் வாழ்வர்களே.

இ-ள். மீனராசியிற் பதிக்கில்—சுபகரமாம், மேஷம் ரிஷபத்திற் பதித்தால்—நோயுண்டாம், மிதுனத்திற் பதித்தால்—துக்கமுண்டாம், கர்க்கடகத்திற் பதித்தால்—செல்வமும் புத்திர சம்பத்துமுண்டாம், கன்னியிற் பதித்தால்—நினைத்த தெல்லாங் கைகூடும், துலாத்திலும் விருச்சிகத்திலும் பதித்தால்—மனைவி புதல்வாகளுடனே சிறப்புற்று வாழ்வார்கள், எ-று.

கோலமறியில் குறைவயதாங் கொடிதாங் கும்பமீன்சேரில்
சாலமிதுனந் தன்மனையாள் சார்நண் டரியுமகன் வாழ்வாம்
ஏல கோல்தேள் நீர்ப்பிணியா மிக்க சுருச்சா லின்பமதாம்
மால் தானுரைக்க வேதமுனி வகுத்தார் புட்பமணி குழலே.

இ-ள். மேஷத்திற் பதித்தால்—ஆயுசு க்ஷீணித்துப்போகும், கும்பம் மீனத்திற் பதித்தால்—தீமையைத்தரும், மிதுனத்தில் பதித்தால்—மனையாள் நட்புண்டாம், கர்க்கடகத்திலும் சிங்கத்திலும்

பதித்தால்—புத்திர சம்பத்துண்டாம், அலாக்கிலும் விருச்சிகத்திலும் பதித்தால்—ஜலதோஷமுண்டாம், மீனத்திலும், கும்பத்திலும் சுபமுண்டாம், எ-று.

---

## குடிபுகுது நாள்.

தத்துங் கதிர்சே யிவையாகா சனிபொன் புந்தி மதிவாரம்
அத்தம் சித்திரை புனர்பூசம் அனுஷஞ் சோதி யசுபதியும்
உத்தரங்க ளொருமூன்று மோணரேவதி யிவைநன்றும்
எத்துங்குடங்தேள சதுர்த்தியுவா வதையும்நீக்கிக்குடிபுகுமே.

இ-ள். வாரங்களில்—ஞாயிறு, செவ்வாயாகாது. சனிவியாழம், புதன், திங்கள்-நன்று, நட்சத்திரங்களில் அஸ்தம், சித்திரை, புனர்பூசம், அனுஷம், விசாகம், அசுபதி, உத்திரம், உத்திரட்டாதி திருவோணம், ரேவதி-நன்று. ராசிகளில் கும்பம், விருச்சிக-மாகாது பட்சங்களில் சதுர்த்தி உவா இருத்தை—யாகாது இவைநீக்கி குடிபுகுதவும், எ-று.

அட்டமி யுவாவிருத்தை யருக்கன்சேய் மூலை மாதம்
விட்டிலும் விஷக்கடிகை வெள்ளியே யெதிரில் மூடனு
சுட்டிய வலக்கண் அங்கன் சூலமும் நேரேயாதல்
நட்டமா மனைபுகுந்தால் நாசமென் றுரைக்க லாமே 465

இ-ள். உவா-இருத்தை ஞாயிறு செவ்வாயும் மூலையாதமாகிய பங்குனி, ஆனி, புரட்டாசி, மார்கழியும் விட்டியும் விஷகடிகையும் வெள்ளி எதிரும் மூடம் பாடு வலக்கண் வெள்ளியும் சூலமெதிரும், குடிபுகுவாராகில் நஷ்டமாம், எ-று.

கடகமுஞ் சிங்கந்தானுங் கதிரவன் திசையிற் செல்விற்
படமுடை யரவந்தீண்டும் பார்மனை பாழ தாகும்
இடமனை யதனிற் புத்து சேர்ந்திடக் காணலாகும்
விடமெனும் விழியினளே விதிவழி திண்ணந் தானே. 466

இ-ள். கடகத்திலும் சிங்கத்திலும் சூரியன் திக்கில்—குடிபுகுந்தால்—விஷத்தையுடைய பாம்பு கடிப்பதல்லாமல் வீடும் பாழாகிப் புற்றெழும்பும், எ-று.

துலாமொடு தேளுந் தெற்கு தோனுதல் செய்வானுகில்
பலாபல னெல்லாம் பாழாடப் பதியுடன் குடிபோ மென்று
நிலாவெனும் விழிகண் மாதே நிறைமனை யெடுக்க லாகா
தலாதல முன்னே சொன்னேன் சகைமயமாக் திங்களுண்டே.

இ-ள். துலாத்திலும் விருச்சிகத்திலும் தென்றிசையிற் குடி புகுந்தாலும் மனைகோலினும்—தன்னுடைய சம்பத்தை யிழப்பது மன்றி குடும்பமும் கரந்துப்போம், எ-று.

மகரமாங் கும்பம் மேற்கே வாழ்மனை புகுவானுகில்
நிகரமாக் தலங்கள் வேறாய் நிறைமனை யழிகத்த போகும்
சிகரமாக் தலைவன் சாவன் சிதைவுறாக் திண்ணமாகும்
அகரமாக் தலமல்லாது ஆட்சியு மல்ல கேடே. 468

இ-ள். மகரத்திலும் கும்பத்திலும் மேற்கே குடிபுகினும் மனை கோலினும்—அம்மனை நாசமடைவதன்றி யசமானிறந்து குடும்பம் பலவாறு சிதைந்துபோம், எ-று.

மங்கைஞா யிற்றுநாளில் மனைபுகில் வாழ்வு மீறுங்
திங்களி லில்லஞ் சேரிற் றிருமகள் கடாக்ஷ முண்டாம்
பங்கமாஞ் செவ்வாய் நாளில் மனைபுகில் சண்டை யுண்டாம்
மங்கையே மயனுர் சொன்ன வண்மையை யறிந்து கொள்ளே.

இ-ள். ஞாயிற்றுக்கிழமையில் குடிபுகுந்தால்—சம்பத்துண்டாம், திங்களிற் குடிபுகுந்தால்—இலட்சுமி கடாட்ச முண்டாம், செவ்வாயிற் குடிபுகுந்தால—தீராத சண்டையுண்டாம், எ-று.

பொங்கிய புதனே யாகிற் போனவ ரகத்தில் வாழ்வார்
மங்கிய வியாழ நாளில் மனைபுகின் வாழ்வுண் டாகும்
பங்குற வெள்ளி நாளிற் பாரியாள் வேசி யாவள்
தங்கிய சனியிற் போனுல் சலிப்பில்லா சுகமதாமே. 470

இ-ள். புதவாரத்திற் குடிபுகுந்தால் அம்மனையிற் சுகித்திருப் பர், வியாழக்கிழமையிற் குடிபுகுந்தால்—சம்பத்துண்டாம், வெள் ளியிற் குடிபுகுந்தால—மனையாள் வேசியாவள், சனிக்கிழமையிற் குடிபுகுந்தால—சுபகாமுண்டாம், எ-று.

## சுவர்பிளவு லட்சணம்.

எடுத்த மனையின் சுவர்பிளக்கி லெண்ணிக் கிழக்கு முதலாகக்
தொடுத்த நாசஞ் சிலுகுடனே துக்கமழகு சுகஞ் சாவு
அடுத்த லாபம் மரணமுட னெகவெட்டுத் திசை தனக்கும்
விடுத்து வலமாய்த் தான்கண்டு மிக்கபலனை விளம்பீரே. 471

இ-ள். எடுத்த மனைக்குள் சுவர் பிளக்கில் கிழக்கு முதலாக எண்ணித் தொடுத்துச் சொல்வது, கிழக்காகில—நாசம், தென் கிழக்காகில்—சிலுகு, தெற்காகில்—துக்கம், தென்மேற்காகில்—அழகு, மேற்காகில்—சுபம், வடமேற்காகில்—சாவு, வடக்காகில்-இலாபம், வடகிழக்காகில—மரணம், எ-று.

---

## புற்றெழுமி லட்சணம்.

நடுவுங் கிழக்கு முதலெட்டும் நடுவனை தன்னிற் புத்தெடுத்தால்
நடுவா யெண்ணிப் பலன்சொல்லு மதனிற் சாவு செல்வமதாம்
இடியுந் தெற்கு துக்கமதா மெண்ணுஞ் சிறிய புத்திரனும்
மடியும் மரணம் நன்மையதாம் மற்ற வியாதி யதுவாமே. 472

இ-ள். நடுவுங் கிழக்கு முதலெட்டுத் திசையிலும் மனையில் புத்தெடுக்கில் அடைவிலே எண்ணிப் பலன் சொல்வது, நடுவா கில்—சாவு, கிழக்காகில்—செல்வம், தெனகிழக்காகில்—மனையிடி யும், தெற்காகில்—துக்கம், தென்மேற்காகில்—பசியுண்டாம், மேற் காகில்—புத்திரருண்டாம், வடமேற்கு—மரணம், வடக்கு-நன்மை, வடகிழக்கு—வியாதியுண்டாம், எ-று.

---

## செஞ்சிதல்.

செஞ்சிதல் மனையில்வந்து சேர்ந்திடிற் பலன்க டன்னை
முன்சொன்ன நடுகிழக்கு முதலண்ட மெட்டின் கொள்க
மிஞ்சிய கேடு நன்மை விருத்தமா மின்ப மாகும்
மஞ்சுறு மனையேசெல்வ மனையுமே வாழ்வு பீடை. 473

இ-ள். செஞ்சிதல் மனையிலுண்டாவது, நடுவாகில்—சாவு, கிழக்காகில்—செல்வம், தென்கிழக்காகில்—மனையிடியும், தெற்காகில்—துக்கம், தென்மேற்காகில்—பசி, மேற்காகில்-புத்திரவிர்த்தி, வடமேற்காகில்—மரணம், வடக்காகில்—நன்மை, வடகிழக்காகில்-வியாதியுண்டாம், எ-று.

## கூறைக்கால் நாட்டல்.

அகலத்தை யொன்பதாக்கி யதிலொன்று குறைக்கக் காலாம்
புகலுற்ற குழிக் கிரண்டு போக்குமே லாறு சுற்றின்
மிகலுற்பற கவர்வதற்கு மேலது வொன்று போக்கு
சகலர்க்கும் நடுவோரைந்து கூறெனச் சாற்றினாரே. 474

இ-ள். அகலத்தைப் பிடித்து கூ-கூறுசெய்து அதில் ஒன்றைக் குறைக்கக் காலாம், கீழே குழி காட்டுகைக்கு உ-கூறும் மேலே கவருகிறதற்கு க-கூறும் போக்கி நடுவில் ரு-கூறு நிறுத்தவும்.

## மூலைக்கால் நாட்டும் விதி

முன்னிய முகூர்த்தந் தன்னின் முதல்வனைப் பூசை செய்து
பொன்னொடு மணியும் பாலும் பொலிவுடன் குழியிற் பெய்து
தென்மேல் மூலைக்காலைச் சிறப்புடன் முந்த நாட்டித்
தென்கீழும் வடகீழ் மேலை மூலையுந் தெரிந்து நாட்டே. 475

இ-ள். நல்ல முகூர்த்தத்தில் விநாயகரைப் பூசைசெய்து பொன்னும் நவமணியும் பாலுங் குழியில்விட்டு முதல் தென்மேல் மூலைக்காலைநாட்டி தென் கீழ் மூலை, வட கீழ் மூலை, வடமேல் மூலைக்காலும் அடைவுசேர நாட்டவும், எ-று.

## மரமிசைத்தல்.

இசைமுது தலைகீழாக விளந்தலை மேலதாகப்
பசையுட னோர மாகிற் பருந்தலை யுள்ளதாக
வசமுற விசைப்பா ராகில் வாழ்வொடு சம்பத்துண்டாம்
பிசகுதல் வருமே யாகிற் பிணியொடு கேடதாமே. 476

இ-ள். மரமிசைக்கும்போது முதுதலை கீழாகவும் இளந்தலை மேலாகவும் ஓர் இசையாகில் முதுதலையுள்ளாகும், இளந்தலை புறத்தியுமாக இசைப்பது நன்று; இதற்குப் பிசகுவருமாகில் பிணியுங் கேடுமுண்டாம். இளந்தலை கீழும் முதுதலை மேலுமாக இசைப்பாராகில் நோயுண்டாகும், எ-று.

முதுதலை யிரண்டுந் தென்மேல் மூலையிற் கூட வைத்து
இதமுற விசைக்கும் போது தென்றலை மேலதாக
மதியிளந் தலையிரண்டும் வடகீழ் மூலை தன்னில்
விதிவட தலைகீழாக விளம்பினர் பிணைக்கத் தானே. 477

இ-ள். முது தலை இரண்டுந் தென்மேல் மூலையில், பொருந்த வைத்துத் தென்றலை மேலாகவும், இளந்தலை இரண்டும் வடகிழக்கு மூலையிற் பொருந்த வைத்து வடதலை கீழாகப் பிணைக்கவும், எ-று.

இளந்தலை யிரண்டும் வேறே யிடத்தினி லிசைக்க லாகா
வளம்படு முதுதலைகள் வகுத்த தென் மூலை யன்றி
விளம்பினே மிசைப்பா ராகில் வெறுமை நோய் கலியு மென்றே
தெளிந்தவ ருரைக்கலுற்றார் சிற்பியின் நூலை யாய்ந்தே 478

இ-ள். இளந்தலை இரண்டும்—வடகீழ் மூலையொழிய வேறிடத்தி லிசைக்கலாகாது, முதுதலை இரண்டும்—தென்மேல் மூலையிலேயொழிய மற்றவிடங்களி லிசைக்கலாகாது, இசைக்கில் வறுமையும் நோயுமுண்டாம், எ-று.

பரப்பினிற் பாதி தன்னைப் பன்னிரு கூறு செய்து
நிரப்புறு மைந்து கூறு நின்றது மேற்ற மஞ்சாம்
இரப்புமந் தாலகையாகு மேழது கவேரங் கையா
நரப்புகோ டாகை யெட்டு மொன்றிது கோடி தானே. 479

இ-ள். பரப்பிற் பாதியைப் பனிரெண்டு—கூறுசெய்து இதில் ஐந்து—கூறு ஏற்ற மஞ்சு, ஆறு—மஞ்சாலை, ஏழு—கவிவாலை, எட்டு—மாமிசைக் கோடாலை, ஒன்பது—கோடி என்பதாம்.

---

## கதவுக்கு நெம்பு மூளை ஏடுகளுக்கு இரட்டைத் துவாரமிடும் விதி.

காலுக்கும் மூன்றுக்கும் நிலவுக்கும் நடுவே
காலுக்குங் கதவுக்குங் கம்பைக்கு மிதுவே
மேலுக்குங் கீழுக்கும் நிலைவுக்கு முட்டலாம்
ஓலைக்கும் நாலுக்கும் உறைமூற்றும் வையே. 480

அகலத்தோர் பாதி தன்னை யாறிரு கூறுசெய்து
சகலர்க்கு மைந்துகூறே தக்கதோ ரேற்ற மஞ்சாம்
இகலுமஞ் சாலை யாறும் எழுது கவிவாங் கைக்கு
முகலுங்கோ டாலை யெட்டு மொன்பது கோடி தானே. 481

அஞ்சினி விரண்ட தான லைக்குச்சற் றளவு நீளம்
மிஞ்சிய முழமூன் றூர வேதித்து வொன்றை யேற்றித்
தஞ்சமி லத்தோ டெட்டுத் தாட்பணற் றக்க காலாம்
மிஞ்சிடா திரண்டு தாளும் பிறனாலை யென்ன லாமே. 482

---

## நில அளவு

நிலவக லங்கள் கொள்ள நேர்படச் செல்லும் போது
நிலவக லத்தி னுலே கனமது நீட்டிக் கொண்டு
நிலவக லத்தில் மூக்கா லரையது காலே யாதல்
நிலவக லத்தால் வந்த நிலத்தனை லொத்த தாமே. 483

வெண்பா.

ஒத்த நிலவகல மூன்மையுட னுரைக்கில்
எத்த நிலத்தளவன் றெய்தினுன்—மற்றதெலாம்
எண்கூறிட் டாறறையு மேற்கத் தலேயிரண்டும்
மண்பாகக் கொள்வ ராம் பார். 484

பார்க்குங்கூ றொன்றரையும் பஞ்சமஞ்சு கூர்செய்து
ஆர்க்கவே யோகை யறியொன்பான்—சீர்க்க
விருகூறு மீர்துலேக டாவிரிவை மூன்றும்
வருமாம் படி யாகவை. 485

வைத்த சுவர்கனத்தை வாக்காறு கூறு செய்து
ஒத்ததில் மையங்கி ருப்புக்குத்—அத்துப்
புறம்பாக்கி காலாம் பொருந்து மன்னர்க்குத்
திறம்பாமல் நூலாற் றெளி. 486

## நிலநீளம் வைக்கும் விதி.

இ-ள். ஒன்ருக நீளம் ஒருவிர லொத்தித் தள்ளிவைப்பது யாதொரு நீளத்தையும் அ-யங்கு செய்து எ-உட்கூடு க-கூ-செய்து மேல் ரு-கீழ் ச-தள மட்டம் வைப்பது நிலநீளத்தை கூ-செய்து உட்கூடும் உ-கூ-செய்து மேல் ரு-கீழ் ச-வேறு நிலநீளத்தை எ-செய்து கூ-உட்கூடு க-கூ-செய்து மேல் ரு-கீழ் ச-நிற்பதங்கள்பற்றி வைக்கவேண்டு மென்பதே உட்கூடு விரல் மூறியாமல் வைப்பது உட்கோட்டிற் பாதிபோம் விரலொற்றிக் கொள்வது.

## சகுனபலன்.

நிறைந்திடு குடமே காணில் நிலேயதாய்ச் செல்வ மெய்துங்
குறைந்திடு குடமே காணில் குறிப்பதாய்த் துன்ப முண்டாம்
இறைந்திடு பாம்பு காணில் இயல்பிலாப் பகையுண்டாகும்
அறைந்திடு நெருப்பு காணில் அருங்குடி கசித்துப் போமே. 487

கரியது காணுமாகிற் காயத்தி ஞேயே யாகும்
உரியதோ ரெலும்பு காணி லுற்றோர் வனைத்துஞ் சாவாம்
பிரியமா யுமியே காணில் பெரும் பொரு ளனைத்துங் கேடாம்
எரியுறு விறகு காணில் இகழ்ச்சியாம் வினையுண்டாமே. 488



## குழியில் ஜலம்விட்டறிய.

அலங்கிய குழியைச் செல்விச் சுத்தநீர் விட்டபோது
வலம்புரி வருமே யாகில் வாழ்வொடு சம்பத் துண்டாம்
இலங்கிய திடமே யாகில் இயற்றிடில் மனையை யக்காற்
குலமுதல் நசித்துத் தானுங் கொடிய நோய்க் கிரையா வானே

சூரியன் வீச்சே யாகிற் றுலைவிலாச் செல்வ மூண்டாம்
பாரிய மதிதான் நின்றாற் பணமிலை யோக மில்லை
சாரியா யிரண்டும் பார்த்துத் தயவுடன் வன்னி நின்றாற்
பாரினைக் கோல்பவர்க்குப் பாக்கியம் மெத்த வுண்டாம். 490

---

## மனையிற் புற்றெழுமி லட்சணம்.

அறையு மிந்திர னுனகிழக் கினில்
நிறையுஞ் செல்வம் நெருங்கிப் பெருகிடுந்
இறையு மக்கினி தென்கிழக் காயிடிற்
குறையு மேமனை குமுறி யிடியுமே. 491

போற்று மேமன் புகலுந்தெற் காயிடில்
தோற்று துக்கந் தொடருமே மாந்தர்க்கு
ஏற்று நிருதி யெங்குந்தென் மேற்கிடில்
காற்றிசை கீர்த்தி கவிலும்வாழ் வுண்டாமே. 492

கொண்ட வருணன் கூறுமேற் காயிடில்
வண்டமிழ்ப் பாலர் வருக்குஞ்செல் வங்களாம்
தண்டிடா வாய்வு தகும்வட மேற்காகில்
பண்டி தங்கள்போய் யாது மாணமே. 493

பாரு மேகுப்ப ரக்வடக் காயிடில்
சீருஞ் செல்வஞ் சிறப்புமுண் டாகுமே
வாரு மீசன் வடகிழக் காயிடில்
கோரும் வியாதி குடியும் நசிக்குமே. 494

பாரி லட்டமர் பகரும் நடுவினிற்
சேரும் பிரமஞ் சிறக்க விவற்றின்முன்
கூரும் கட்டங் குறைத்திடிற் போகதலாங்
கோருஞ் சிந்தை குமிக்குந்தெய் வங்களே. 495

வஞ்சி நேஞும் வருக்குக் கருமமாம்
மிஞ்சு பிர்மம் மிகுத்திடுங் தானத்தில்
செஞ்சொல் புற்று செழிக்கக் கிளம்பிடிற்
கஞ்ச னுமை கருதமிதச் சாவே. 496

---

## வீடுகட்டும் ராசி லட்சணம்.

மேசத்தில் வீடு மனையெடுத் திடவே
மேன்மையும் புகழு முண்டாகும்
மாசத்தி லவற்கு வருமபடி யதிகம்
மனைவியும் வலியவே வருவாள்
தேசத்திற் பெரியோர நேசம துண்டாம்
நிலத்தி லறும்பல பயிரும்
ஆசத்தி கிருபை யருளுந்தா னியங்கள்
யாவுமே வந்துசேர்ந் திடுமே. 497

எறை மிடபந் தனில்மனை யெடுக்க
எந்தினை யிருக்திடா வாழை
காறினற் கட்டும் பூவதிற் கிக்கி
கககமிடும் வாறுபோ லாகும்
வறிடும் பின்பா லுடலது மெலியும்
உற்றநற் பிள்ளையு முதவாப்
பேறிடும வீட்டிற் பிரபலம குன்றும்
பிழைப்பிலா தலைகுவன் பெண்ணே. 498

மிதுனத்தில் வீடு மனைதனை யெடுக்க
வீண்வழி வந்துமே சேரும்
அதனமாய்ப் பொருட்கள் செலவுக ளாகும்
ஆயிழை யகன்றுமே போவள்
பதனமாய்ப் பதியுந் துலக்கம திலலை
பாடுபட் டலையவே வேண்டும்
விதனமா யக்காள் பலவழி யதனால்
விளைந்திடுங் கலகமுண் டாமே. 499

கண்டகதில்வீடு மனையெடுத் திடவே
கல்லதோ ரிஷ்டர்கள் பகையாம்
தெண்டமும் வருமே தேசமன் னவராற்
செலவுமேற் செலவ துண்டாகும்
கொண்டவள் பிரிவாள் கொடும்பிணி யதனாற்
குடும்பத் திற்குறைபல வுளவாம்
அண்டினோ ரடுத்தோர் கண்டவர் இன்றோர்
யாவரும் பேசி யேசுவரே. 500

சிங்கத்தில் வீடு மனைதனை யெடுக்கத்
திருமகள் கொழுநனைப் போலத்
தங்கமும் பொன்னுந் தனமுமே புதைப்பன்
தருமத்துக் குடையவ னாகிப்
பங்கினில் வளரும் பயிர்வினை யாகப்
பாரினில் மனமது புரிந்தே
மங்கைய ரோடு வாழ்மனை யதனில்
மகவின்பே துண்டென வழுத்தே. 501

கன்னியில் வீடு மனைதனை யெடுக்கக்
கனகபூ ஷணநவ மணிக்கு
மன்னவ னாகிப் பிரபல மடைவன்
வரும்பல ஆதியம் வளரும்
பன்னகா பரணன் கிருபையு முண்டாம்
பாலுட னன்னமும் புசிப்பன்
உன்னத மனையிற் பாரிமக் களுமே
உண்டென வுலகினி லுரையே. 502

துலாத்தினில் வீடு மனைதனை யெடுக்கச்
சுகமுடன் சகலபாக் கியமும்
சலாசலம் பெருகுந் தானியம் பலிக்கும்
சந்ததி வளரும்வா ழலவும்
நிலாவெனச் சொலிக்கும் நிதியும் பூஷணமும்
நிலைபெற வாழ்குவன் நிதமும்
உலாசமாய் நடக்கும் மனையலங் காரம்
உண்டென மயனுரைத் தனரே. 503

தேளினில் வீடு மனைதனை யெடுக்கத்
திருமக ளகன்றுமே போவன்
ஆளினில் ஆளாய் அடிமைய தாகி
யவதிபட் டவனியி லலைவன்
கோளினிற் கோளாங் குண்டுணி யாலே
குழந்தையுந் தேவியும் பிரிவர்
ஊழினில் விதித்த விதியென நினைத்தே
உடல்மெலிந் துயிர்பிழைப் பானே. 504

வில்லினில் வீடு மனைதனை யெடுக்க
வீசனமுந் துக்கமுந் தோன்றும்
சொல்லினும் பந்து மித்திரர் கலகம்
சுகமில்லை கைப்பொருள் சேதம்
யல்லியும் காலை பக்கமே பகரும்
பார்த்தவர் மதிக்கவே மாட்டார்
தில்லையில் வாழும் யீசனே யென்று
தெருவினிற் றிரிந்திடு வானே. 505

மகரத்தில் வீடு மனைதனை யெடுக்க
மாண்டிடும் மக்களும் பெண்டிர்
நகரத்தில் வாழும் லட்சுமி யகல
நாளுக்கு நாணிதி நழுவும்
அகரத்தி லுலவும் ஆடுமா டுகளும்
அகன்றிடும் நிலங்கள வீடும்
சிகரத்தி லுருவாய்ச் செழித்திடுஞ் சிவன்
சிதைத்திடச் சிந்தை வாடுவனே. 506

கும்பத்தில் வீடு மனைதனை யெடுக்கக்
　　கூர்விழிக் கொம்மனை சேர்வள்
நம்பினை யோர்க்கும் இரப்பவர் தமக்கும்
　　நன்மையே செய்குவன் நாட்டில்
தம்பியுந் தமயன் தாய்பிதா சுற்றந்
　　தாரமுந் தனயரும் வாழ
அம்பிகை பாத தெரிசனஞ் செய்தே
　　அருளுடன் பொருளைவைத் தாள்வன். 507

மீனத்தில் வீடு மனைதனை யெடுக்க
　　வேண்டிய பொருளெலா மிருக்கும்
தானத்தி லிருந்தே புராணகா வியங்கள்
　　தன்னையே கேட்டுளங் களிப்பன்
வானத்தை வில்லாய் வளைக்கும்வல் லபனும்
　　மனைமகப் பேறுடன் வாழ்வன்
ஞானத்திற் சிந்தை நன்மதி கூடும்
　　நாடிய பொருள்வரத் தாமே 508

---

## வீடுகட்ட மாதபலன்கள்

### சித்திரை மாதம்

செப்புஞ் சித்திரை சிறந்த மதிதனில்
ஒப்பு மாளிகை யொவ்வி யமைந்திடிற்
றப்பி லாமற் றனமதற் கானியாம்
மெய்ப்பு டன்மயன் விரும்பி யுரைத்ததே 509

### வைகாசி மாதம்

பேசும் வைகாசி பெருமனை கட்டிடில்
தேசம் புருஷ செயப்பிர தம்களாம்
நேச மாய்பெண்டிர் நெருங்குங் கபாமலம்
மூசி லாமயன் மன்னர்க் குரைத்ததே 510

ஆனி மாதம்

உள்ள ராசி யுரைக்கிறேன் மாந்தர்க்கு
தென்னு மானியிற் றிடமாளி கட்டிடில்
பிள்ளை குட்டி புகல்மிகுத் தபயம்
கொள்ள மாமயன் கூறிய துண்மையே 511

ஆடி மாதம்

சொல்லு மாடி தொடர்ந்தில்லங் கட்டிடில்
சொல்லுங் காரம் பசுக்கன்றுங் டங்களும்
சொல்லுஞ் செல்வமுஞ் சீரு மழிந்திடும்
சொல்லு மாமயன் தொகுத்தநற் சிற்பமே 512

ஆவணி மாதம்

உரைத்து மாவணி மாளிகை கட்டிடில்
நிரைத்த பந்துவின் வர்க்கம் வரத்துமாம்
மரைத்து மாமயன் வாக்குப்பொய் யாதுகாண்
பரைத்தி டும்பஞ்ச ணத்தார்க் கறைந்ததே 513

புரட்டாசி மாதம்

தேயு மேபுரட் டாசி மதிதனில்
ஏயு மாளி பொழில்பெறக் கட்டிடில்
வாயு நோயும் மகாரோக மெய்திடுக்
தாயு மேமயன் தயவா யுரைத்ததே 514

ஐப்பசி மாதம்

காணு மைப்பசி கனவீடு கட்டிடில்
ஆணும் பெண்ணு மரிய கலகமாம்
பூணு மாடை புகலுமா பரணமும்
வேணுஞ் சேதம் வினையுமென் மேலுமே 515

கார்த்திகை மாதம்

கனத்த மாரிகற் கார்த்திகை மதியதிற்
றனைத்த மாளி தகைமையாய்க் கட்டிடில்

அனர்த்தம் வாரா தொருகாலும் மாந்தர்க்கு
நினைத்த லட்சுமி நீங்கா திருப்பளே — 516

மார்கழி மாதம்

சொல்லு மேதிரு வாதிரை மார்கழி
யல்லும் மாளி புகழுவே கட்டிடில்
கொல்லு மேபயக் குவலயந் தன்னிலே
வெல்லு மாமயன் விரும்பி யுரைத்ததே — 517

தை மாதம்

இரணம் வீசுங் கிளர்க்குந்தை மாதத்தில்
பூரண மாக முகில்மாள் கட்டிடில்
மரண மேதரு மக்கினி பயமதாம்
சரணம் பண்ணித் தவிப்பது நன்மையே — 518

மாசி மாதம்

அருமை யாக அறைகிறேன் சிற்பநூல்
பெருமை யாய்மாசி பெட்பில்லங் கட்டிடிற்
வறுமை நீங்கி வழங்குஞ்செல் வங்களாம்
ஒருமை யாக வுரைக்கும்நூற் சிற்பமே — 519

பங்குனி மாதம்

மெள்ளப் பங்குனி வீடுமே கட்டிடில்
உள்ள ரத்ன முறையுமா பரணமும்
தெள்ளு மட்ட திசைபுகழ் செல்வமும்
கொள்ளை போமெனக் கூறுவர் சிற்பரே — 520

ஆடுத்தேள் விடையாழ் விற் கயற்குடம்
அன்பு டன்மனை கோலக் குறிப்பிடில்
நாடும் பூமி நகரமுஞ் சித்திக்கும்
நல்ல பெண்களும் புத்திரர் வாழுவார்
தேடும் நற்பொருள் திரவியங் கூடிடும்
தேசபாஷை தமிழ் தனைப் பாடுவான்
மாடும் மக்களால் மன்னவ னாகியே
வைய மீதிற் சுகமுடன் வாழ்வரே — 521

சித்திரைமாதம் வீடுகட்டினால் தனஹானி
வைகாசிமாதம் வீடுகட்டினால் ஜெயப்பிரதம்
ஆனிமாதம் வீடுகட்டினால் மிருத்துவுபயம்
ஆடிமாதம் வீடுகட்டினால் பசுக்கள் நஷ்டம்
ஆவணிமாதம் வீடுகட்டினால் ஸர்துவர்க்கம் வரவு
புரட்டாசிமாதம் வீடுகட்டினால் ரோகம்
ஐப்பசிமாதம் வீடுகட்டினால் கலகம்
கார்த்திகைமாதம் வீடுகட்டினால் இலட்சுமிவாசம்
மார்கழிமாதம் வீடுகட்டினால் பயம்
தைமாதம் வீடுகட்டினால் அக்கினிபயம்
மாசிமாதம் வீடுகட்டினால் பாக்கியமுண்டாம்
பங்குனிமாதம் வீடுகட்டினால் ரத்தின பூஷணம் நாசமாம்.

---

## இராசிபலன்.

ஆடுதுலை கன்னியரி மீனமொடு கும்பம்
காடியதி லேமனை யெடுக்கிலது நன்றாம்
மாடுமக்கள் பாரிசுக வாழ்வுமிக வுண்டாம்
நீடுபுகழ் சேயருடன் நிகழ்நிதியு மாமே. 522

அங்கிமிது னந்தனுவி லகமனை யெடுக்கில்
மங்கையொடு மக்களை யிழப்பர்பின் னிரப்பர்
பொங்குவிடை நண்டினொடு தேள்மகர மாகில்
செங்கமல மாதுதிரு மால்தனையுஞ் சேராள். 523

சொல்லும் மேடம் சுபப்பிரத் தங்கனாம்
நல்லதோ ரிடபந்தன லாபமாம்
வெல்லு மேமிது னம்பசு விர்த்தியாம்
புல்லும் நண்டு பொருந்தச் சமனதே. 524

அறையுஞ் சிங்கம் அரும்பத்து சேர்தலாம்
நிறையுங் கன்னி நெருங்கும் மகாரோகம்
இறையு மேதுலா மேருஞ் சவுக்கியம்
நறையுந் தேளுக்கு நாட்டர்த்த லாபமே. 525

கலியும் வில்லில் கவிலர்த்த ஹானியாம்
சலியும் மானது தானிய விர்த்தியாம்
இலியுங் கும்பம் இரத்தின லாபமாம்
ஒலியும் மீனமு மோங்கும் பயமதே. 526

கண்டு மோசி ககசினி மானிடர்
விண்டு மேசிற்சி விளம்பும் வாக்கியம்
கொண்டு சேரிடைக் குறிப்பின் பிரகாரம்
மூண்டி டாமல் முடிப்பது இன்னமே. 527

| | | | |
|---|---|---|---|
| மேஷத்தில் | சுபப்பிரதம் | துலாத்தில் | சௌக்கியம் |
| ரிஷபத்தில் | தனலாபம் | விருச்சிகத்தில் | அர்த்தவிர்த்தி |
| மிதுனத்தில் | பசுவிர்த்தி | தனுசில் | அர்த்தஹானி |
| கடகத்தில் | லாபநஷ்டம் | மகரத்தில் | தானியவிர்த்தி |
| சிங்கத்தில் | பந்துசேர்தல் | கும்பத்தில் | இரத்தினலாபம் |
| கன்னியில் | ரோகம் | மீனத்தில் | பயமுண்டாம் |

## திதிப் பலன்

தெறியும் பூர்வ பட்சமது தேருஞ்சுபத்தின் பிரதமதாம்
செறியும் அமர பட்சமது சிறந்த விரவி போனதின்பின்
பெருகுந் திரிதி கைமுதலாய்ப் பிறக்கும்பூர்ண தொடங்கி
உருகுஞ் சத்த மீவரைக்கும் ஓங்கும்பூர்வ பட்சமதே 528

மற்ற நான்கிருஷ்ண பட்ச முதலாகா
உற்ற பிரதமை யோங்குஞ்சஷ் டிகளும்
முற்று மேசா தசியிது வேகத்தை
பெற்ற திப்பலன் பேரர்த்த ஹானியே 529

வாரிட் டார்துதி மைசத்த மீகளும்
ஓரிட் டேத்துவா தசிபத் திரைதிதி
நேரிட் டித்திதி நிகழ்பலன் பந்தனம்
கூரிட் டம்மயன் குறித்தது முண்மையே 530

தக்க வட்டமி தாக்குந் திரிதிகை
பக்க மேதிர யோதசி தன்முதல்
மக்கண் சயத்திய திதியாகு மாமிவை
சிக்குஞ் சுபமெனச் செப்பினர் சிற்பரே 531

சீர் சதுர்த்தியுந்தீய நவமியும்
தார் செறியுஞ் சதுர்த்தசி தன்முதல்
ஏர் பெறுமிருத் தைத்திதி யின்பலன்
போர் செறிமிருத் துவின் பயமதே 532

சொல்லும் பஞ்சமி தோற்றுந் தசமிதான்
வெல்லும் பவுர்ணமி வேண்டிம்பூ ரணைதிதி
புல்லு மிப்பலன் போற்றுஞ் செயப்பிரதம்
அல்லு யமாவாசி யர்த்தமும் ஹானியே 533

இ-ள். சுக்கில பட்சம் சுபப்பிரதம், அமாவாசி போன திதிகைமுதல் பௌர்ணமிபோன சத்தமி வரையில் சுக்கில பட்சமாகும் மற்றநாட்கள் கிருஷ்ண பட்சம் ஆகாது.

| பிரதமை | சஷ்டி | ஏகாதசி | நந்தைதிதி | இதன்பலன் | அர்த்தஹானி |
|---|---|---|---|---|---|
| துதிகை | சப்தமி | துவாதசி | பத்திரைதிதி | இதன்பலன் | பந்தனம் |
| திரிதிகை | அஷ்டமி | திரயோதசி | சயத்தியதிதி | இதன்பலன் | சுபம் |
| சதுர்த்தி | நவமி | சதுர்த்தசி | இருத்தைதிதி | இதன்பலன் | மிருத்துபயம் |
| பஞ்சமி | தசமி | பௌர்ணமி | பூரணைதிதி | இதன்பலன் | பிராணஹானி |



## வார பலன்.

இனிய வார மெழில்பெறும் ஞாயிறு
அனிய செவ்வா யதிலக்கி னீயயம்
குனிய திங்களும் கூறிடும் நற்சுபம்
தனிய வேமயன் சாற்றிய துன்மையே 534

உண்மை யாம்புத னுற்றவி யாழமும்
தன்மை யாம்வெள்ளி தாக்குஞ் சுபாசுபம்.

வண்மை யாஞ்சனி வாரமுஞ் சோரமாம்
அண்மை வாரம் 1 அறிந்தில்லங் கட்டிடே 535

இ-ள். ஞாயிறு செவ்வாய்—அக்கினிபயம், திங்கள்—நற்சுபம், புதன் வியாழம் வெள்ளி—சுபம், சனி—சோரபயம், இவ்வாறு பல னறிந்து வீடுகட்டவேண்டும்.

## நட்சத்திர பலன்.

ஓது மஸ்த மூறையு மூரோகணி
நீதி யாமவிட் டஞ்சதை யங்களும்
கோதி லாமிருக சிரிடம் பூசமும்
நீதி லாத்திரு வோணமும் நன்மையே. 536

நன்மை யாஞ்சோதி நாட்டு மனுஷமும்
அன்மை யில்லாத் அட்சித்தி ரையுடன்
வன்மை ரேவதி வளமுத்தி ரட்டாதி
பன்மை யுத்திரா டம்பார்க்கச் சுபமிதே. 537

பார்க்க வுத்திரம் பகரும்நட் சத்திரம்
ஏர்க்க வேபதி னென்குஞ் சுபந்தரும்
தீர்க்க மாஞ்சிற்ப நூலாய்த் திரட்டியே
மார்க்க மாமயன் வகுத்தமை சொன்னதே. 538

இ-ள். ரோகணி, அஸ்தம், திருவோணம், மிருகசீரிடம், சித்திரை, அவிட்டம், பூசம், அனுஷம், உத்திரட்டாதி, சோதி, சதயம், ரேவதி, உத்திரம், உத்திராடம், இப்பதினான்கு நட்சத்திரமும், சுபம்.

## யோகபலன்.

தங்கு மேசுகர் தாக்கும்பி ராமியம்
பொங்கு மாகேந்திரம் போற்றும்நற் சாத்தியம்
எங்கு மேசிவம் ஏற்குஞ்சுப் பிரமுடன்
அங்க மாயுஷ்மா னகுஞ்சென பாக்யமே. 539

காணுக துருவங் கழறும்வை திருதியாம்
வேணுறு சோபனம் விருமபுசு சுபமதாம்
தோணும் பிரீதியுந் தோற்றுசுசித தஞ்சித்தி
பூணுட யோகம் புகலும் பதினுன்கே. 540

மாறுவி யாகாதம் வரூத்துங் கண்டங்களாம்
கோது சூலங் குரிக்கும் விஷ்கம்பமாம்
ஓதும் வச்சிர மோங்கு மதிகண்டம்
நீதி யாம்விதி பாதம் பொல லாதிதே. 541

பொல்லா தையா புகலும்ப ரீகமும்
நல்லதல்ல திருதியோ சங்களும்
பொல்லாப் பென்று புகலுவார் சிற்பர்கள்
புல்லா வொன்பதும் போற்றும் பொல்லாதிதே. 542

இ-ன். பிராமியம், மாகேந்திரம், சாத்தியம், சிவம், சுப்பிரம், ஆயுஷ்மான், சௌபாக்கியம், துருவம், வைத்ருதி, சோபனம், சுபம், பிரீதி, சித்தம், சித்தி, இப்பதினான்கும், சுபம்.

வியாகாதம், கண்டம், சூலம், விஷ்கம்பம், வச்சிரம், அதிகண்டம், வியதிபாதம், பரிகம், திருதி, இந்த யோகம் ஒன்பதும் ஆகாது.

---

## கரணபலன்.

பண்ணும் பாலவம் பகரும் பவமுடன்
அன்ன லாகுரை யறையுங் கௌலவம்
என்னுங் தைதுலே யேற்குங் கரசையாம்
நண்ணும் பத்திரை நற்சுப மியுமே. 543

உய்பு நாகவ மோங்குஞ் சகுனியாம்
பைய வேசதுஷ் பாதம் வணசையும்
மெய்ய வேகிமிஸ் துக்கின மைந்துமே
கையு மக்கர ணம்பொல்லா தென்னுமே. 544

இ-ள் பாலவம், பவம், கௌலவம், தைதூலை, கரசை, பத்திரை இக்கரணம் ஆறும் சுபம்.

நாகவம், சகுனி, சதுஷ்பாதம், வணசை கிமிஸ்துக்கினம் இந்தக் கரணம் ஐந்தும் ஆகாது.

---

## சூரியசாரபலன்.

கூறும் பரணி குறிக்கிரு பாதமும்
வீறங் கார்த்திகை விளங்குநாற் பாதமும்
கோறும் ரோகணி குறித்த முன் பாதமும்
வாறு மேழில் வருக்கும் பரிதியே. 545

பரிதி நின்ற பாம்மனை கட்டடில்
குருதி யக்கினி கொடிய பயன் சொலும்
பரிதி போல்மயன் பகருநம் சாத்திரம்
கிருதி மாந்தர்க்கு கோர யுரைத்ததே. 546

இ-ள். பரணி நட்சத்திரம் முதல் பாதமும், இரண்டாம்பாதமும், கார்த்திகை முதல் இரண்டு மூன்று நான்குபாதமும், ரோகணி முதற் பாதமும், இப்பாதங்களேழிலும் சூரியனிருக்க வீடுகட்டினல் அக்கினி பயமுண்டாம்.

---

## குஜசாரபலன்.

செப்பு மிம்மதி சிறந்ததோர் கார்த்திகை
ஒப்பி மும்பூச மோங்கு மகமுடன்
வெப்பும் பூரம் விளங்கிடு மஸ்தமும்
தப்பில் ரேவதி மூலம் பொல்லாதிதே. 547

பொல்லா தையா புகலுங் குருமொழி
கொல்லும நட்சத் திரம்பல வேழிலும்
வெல்லுஞ் செவ்வா யிருக்க மனைகட்டில்
புல்லும் பூமியிற் புத்திர ஹானியே. 548

இ-ள். கார்த்திகை. பூசம், மகம், பூரம், அஸ்தம, மூலம், ரேவதி இந்த நட்சத்திர மேழிலும் அகாரகனிருக்க வீடுகட்டினால் புத்திரஹானி என்பதாம், எ-று.

---

## செவ்வாய் தோஷபரிகாரம்.

வஞ்சி கேளும் வழங்கு மகரமும்
மிஞ்சு மீனம் விளங்குங் கடகமும்
செஞ்சு பூரண செயராசி யாமெனக்
கஞ்ச மாமயன் கழறும்நூல் பொய்யாதே 549

வருத்தி டுந்துலாம் வழங்கும் விருச்சிகம்
தொகுத்தி டுமேடந் தோன்று மிகப்பாதம்
வகுத்தி டுஞ்சல ராசியு மென்னலாம்
நிகழ்த்து மாமயன் கோர யறைந்ததே 550

பாரிற் கும்பம் பகருக் ரிஷபமாம்
சேர சிம்மஞ் சிறக்க விலைகளும்
சீரு மர்த்த சலராசி யென்னலாம்
பேரு மாமயன் பேணி யுரைத்ததே 551

பாரெலாங் கன்னி பகரு மிதுனமாம்
எருறுந்தனு சேற்க விவை மூன்றும்
கார்த்திகைச் சல ராசியெ னப்படும்
சீரும் பூரணஞ் சேர்சல ராசியே 552

எந்த மிந்த வெழில்பெறும் ராசியிற்
போந்த மாளி புகல வமைத்திடில்
வேந்த னுத்தம மானரா சியதில்
கூந்தல் வேனிற் குருவுஞ் சுக்கிரனுமே 553

ஆமே சந்திர னுறையும்பார் வைதனில்
தாமே மாடந் தனிமனை கட்டிடில்
போமே யங்கார தோஷம் பொலிவில்லை
நாமே சிற்பநூல் நவில வுரைத்ததே 554

இ-ன். கடகம் மகரம் மீனம் இம்மூன்றும் பூரணசலராசி
துலாம் விருச்சிகம் மேடம் இம்மூன்றும் பாதசலராசி
சிங்கம் கும்பம் ரிஷபம் இம்மூன்றும் அர்த்தசலராசி
கன்னி தனுசு மிதுனம் இம்மூன்றும் நிறைசலராசி

பூரண சலராசியில் வீடுகட்டினால் உத்தமம், உத்தமமான நட்சத்திரத்தில் சந்திரன், குரு, சுக்கிரன் பார்வையினால் வீடு கட்டினால் அங்காரக தோஷந் தேவையில்லை.

---

## புதசார பலன்.

பொன்னு மஸ்தம் புகலு மசுவனி
மன்னு மூத்திரம் மாமிரு சீரிடம்
வின்னும் ரோணி விளங்கிடுஞ் சித்திரை
றன்னில் வாறுந் தொகுப்பா யுரைத்ததே 555

உரைத்தி டும்பதி யோங்கும் புதனிருக்
திரைத்தி டும்லக்க னத்தினி லாவது
உரைத்தி டும்பதி யுச்சத்தி லாவது
குரைத்தி டாமனை கட்டுவ தாட்சியே 556

ஆட்சி யென்னி லணிபெறும் புத்திரர்
மாட்சி மேவும் அதிகமா மன்னவர்
காட்சி யாவுங் களித்திடு மிப்பலன்
தாட்சி யின்றித் தனிய வறைந்ததே 557

இ-ன். அஸ்தம், அசுவனி, உத்திரம், மிருகசீரிடம், ரோகணி, சித்திரை இவ்வாறு நட்சத்திரத்தில் புதனிருந்தாலும், லக்கினத்திலாவது உச்சத்திலாவது வீடுகட்ட ஆரம்பஞ் செய்தாற் புத்திர சம்பத்துடன் சுகமாயிருப்பார்கள்.

## குருசார பலன்.

ஆய வுத்திர மான திருவோணம்
றாய வுத்ராட மூத்திரட் டாதியும்
ஏய பூராட மேற்குமா ரோகணி
காய தாமிருக சீரிடங் கழறுமே 558

பூச மேவும் புகலுவி லாயில்யம்
வாசம் விசும வருக்குங்கட் சத்திரம்
நாசம் போக்கும் நவிலவொன் பானுமே
நேசஞ் செய்யும் நெருக்கும் பலமதே 559

செல்ல வுத்ரஞ் செழிக்கக் குருவிற்கில்
வல்ல லக்னம் வழங்குமுச் சத்திலும்
செல்ல மாளி விளங்கவே கட்டினல்
நல்ல லட்சுமி நடனம் புரிவளே 560

இ-ன். உத்தரம், திருவோணம், உத்திராடம், உத்திரட்டாதி, பூராடம், மிருகசிரிடம், ஆயிலியம், ரோகணி, பூசம் இந்த ஒன்பது நட்சத்திரத்தில் குருவிருக்க அல்லது லக்கினத்திலாகிலும், உச்சத்திலாகிலும் இருக்க வீடுகட்டினாலும், ஆரம்பஞ் செய்தாலும் இலட்சுமி கடாக்ஷமுண்டாகும்.

---

## சுக்கிரப்பலன்

நண்ணுங் கேட்டை நவிலும் புனர்பூசம்
ஒண்ணுஞ் சித்திரை யோங்கும் அசுவனி
வண்ண மேவும் வருக்கும்பூ ராடமாம்
அன்ன லாறுரை யறையு மவிட்டமே 561

மேவி டும்மனு ஷக்விசா கத்துடன்
தாவு மேதிரு வாதிரை தன்முதல்
மேவுஞ் சதயம் விளம்புமிப் பத்திலும்
தாவு சுக்கிரன் தோன்றலும் நன்மையே 562

நன்மை யாம்பதி நாடிடிற் சுக்கிரன்
வன்மை யாக வலுத்துமே நின்றிடிற்
புன்மை யாம்மனை பொருந்தவே கட்டிடில்
அன்மை நீக்கிச் சுகந்தரு முண்மையே 563

இ-ள். கேட்டை, புனர்பூசம், சித்திரை, அசுவனி, பூராடம், அவிட்டம், அனுஷம, விசாகம, திருவாதிரை, சதயம், இந்தப்பத்து நட்சத்திரத்திலும, சுக்கிரனிருக்க வீடு கட்டுதலும், ஆரம்பித்தாலும் சுபம் நன்மையைத்தரும், எ-று.

---

## சனிசார பலன்

வருஞ்சதையம் வருக்கும்பூரட்டாதி
இருஞ்சுவாதி யெழிலுத்திரட்டாதி
ஒருபரணியா மோங்கு மவிட்டமும்
தரு வனுஷமுந் தாக்கிய கேட்டையே 564

இந்த நட்சத் திரபல னெட்டிலும்
தொந்த மேவுந் தொடருஞ் சனிதற்றில்
அந்த மாக வறைமனை கட்டிடல
பந்த மற்றுப் பகருமு தேவ்யாள்

அடையும் பூத மறையும் மனைதனில்
படையு மறறுப் பகருமூ தேவியாள்
அடையு மேபிர்ம ராட்சத னெப்போதும்
இடையுஞ் சிதேவி யெழிலவாக்குத் தப்பாதே 566

இ-ள். சதயம், பூரட்டாதி, சுவாதி, உத்திரட்டாதி, பரணி, அவிட்டம், அனுஷம், கேட்டை, இந்த எட்டு—நட்சத்திரத்திலும், சனியிருக்க வீடு கட்டுதலும், ஆரம்பித்தாலும், பேய்பிரம ராட்சதர்கள் வாசஞ் செய்வார்கள எ-று.

---

## இராகுசார பலன்

சொல்லு மேவுந் தொடருமி ராகுதான்
வெலலும் லக்கின மேவு மெதிர்சாரம்
புத்து மேபதி காலுடை சதங்கம்
கொல்லு மிருத்வ சாரம்பொல லாததே 567

பொல்லா லதயா புகலு மந்தசாரம்
நல்ல மாளிகை நவில வமைத்திடில்
சொல்லொ ணாமலே தோற்றிடுந் துன்பமும்
அல்லுடன்பக லுறைய வொண் ணாதிதே 568

இ-ள். இராகு இருந்த லக்கனத்துக்கு எதிர்சாரம் பதினொன்கு நட்சத்திரமும், மிருத்துவு சாரமானபடியால் அந்த சாரத்தில் வீடுகட்ட ஆரம்பஞ் செய்யலாகாது.

---

## குருசுக்கிர வஸ்தமன பலன்

கூறு டன்சுக்கி ரன்குரு தன்முதல்
வீறு மஸ்த மனம்போது தன்னிலும்
கூறு மேவுங் குறிக்குஞ் சத்திலும்
தூறு மேபகை தோன்றலு முண்மையே 569

உண்மை யாக வுறையுஞ்சேத் திரபதி
தண்மை யாஞ்சத்து ருக்க விருக்கினும்
வண்மை யில்லம் வகுக்கவே யாகாது
கண்மை யாமயன் கண்டு வுரைத்ததே 570

கூரு மாளி குறிக்கு மதிகாரம்
தூரு மெத்தத் துறைசாதி யானாலும்
சேரு மந்தச் சிறந்திடுஞ் சாதிக்கு
கோருங் கோட்கள் குறிக்கப் பொல்லாதிதே 571

குறிக்கச் சத்துரு கூட விருக்கினும்
தெறிக்க வேதிக முஸ்தம னப்போதும்
முறிக்க நீச்ச முடிவுதா னத்திலும்
மறிக்க மாளி யமைப்பது துன்மையே 572

கூருந் துன்பன் குறிக்கும் மனிதர்க்கு
நேருஞ் சஞ்சர்ப்பம் நிகழுமெக் காலமும்
கூரு மன்னியர் கூட்டமிட் டேவந்து
பாரு மக்கிராம மாகக்கொள் வார்களே 573



இ-ள். குரு சுக்கிரன் அஸ்தமன மாகிலும், நீசத்தானத்திலாகிலும் பகை க்ஷேத்திரத்திலாகிலும், சத்துருக்களுடன் கூடினலும் வீடுகட்டலாகாது. வீட்டுக்குக் கர்த்தன் எவ்வித சாதியானலும் அந்தந்த சாதிகளுக்குரிய கிரகம் சத்துருக்களுடன் கூடினலும் அஸ்தமானலும் நீச்சத்தானத்தி லிருந்தாலும் வீடுகட்டினல் அன்னியர் அபகரித்துக் கொள்ளுவார்கள், எ-று.

---

## ஸ்திரலக்கின ராசிகள்பலன்.

பால சிங்கம் பகரு மிடபமாம்
ஞால கும்பம் கவிலும் விருச்சிகம்
சீல மாமிந்தச் சேத்திரந் திரமென
எலவே நன்மை யென்றுமுண் டாகுமே. 574

சாரு மேஷண்டு சாற்றிடு மேஷமும்
சேரு மேதுலாஞ் சிறந்த மகரமும்
நேரும் காலும் நிகழ்சர லக்கினம்
பாரும் மத்திமம் பகர் சிற்ப நூலிதே. 575

ஏய கன்னி யெழிலா மிதுனமும்
தூய மீனத் தொடருந் தனுசுவும்
ஆய நான்கு மறையுஞ் சுபபலன்
நேய ராசி யுபயமு மானதே. 576

ஆன தாலறை மாளிகை கட்டிடில்
கான மேவுங் கடும்ராசி பொல்லாது
ஊன மாக வுறைலக்கி னதிபன்
போன கோட்கள் புகலப்பொல் லாதிதே. 577

இலகு சத்துரு க்ஷேத்திரந் தன்னிலு
குலவு லக்கினங் கூறுங்க ணேகான்
அலகு சத்துரு வானக்ஷேத் திரத்திலும்
நிலக லக்கினம் பத்தா மிடமதே. 578

இருந்த மாளி யெழிலா யமைத்திடில்
பொருந்த வேளை புகலப்போல் லாதிது
பருந்து பேதும் பராதீன மாய்ப்போகும்
தெரிந்து மாமயன் தெளிய வுரைத்ததே. 579

இ-ள். இடபம், சிங்கம், விருச்சிகம், கும்பம், இந்நான்கும் ஸ்திர லக்கினம், உத்தமம்.

மேடம், கடகம், துலாம், மகரம், இந்நான்கும் சரலக்கினம், மத்திமம்.

மிதுனம், கன்னி, தனுசு, மீனம், இந்நான்கும் உபயலக்கினம் அதமம், இதுவும் அபாவமான உபயராசி யாகையால் வீடு கட்டக் கூடாது, ஆரம்பலக்கினத்திலிருந்து கிரகத்துக்குச் சத்துருக்ஷேத்திரமான லக்கினேசுவரன் சத்துரு க்ஷேத்திரத்திலிருந்தாலும் ஆரம்ப லக்கினத்திற்குப் பத்தாமிடத்திலிருந்தாலும் அப்படிப்பட்ட வேளையில் வீடு கட்டினால் பாரதீனமாய்ப்போகும்.

---

## வாரத்தியாச்சியம்.

ஞாயிறு நாலெட்டாம் நற்றிங்க ளாறேழாம்
ஓயசேய் பொன்முப்பத் தொன்றாகும் எயபுதன்
நாற்பத்தி ரண்டாகும் கல்லவெள்ளி மூவேழாம்
காற்சனியீ ரேழுவிஷங் காண். 580

இ-ள். ஞாயிறுக்கு—32-நாழிகைக்கு மேலும், திங்களுக்கு—42-நாழிகைக்கு மேலும், செவ்வாய்க்கும் வியாழத்துக்கும்—31-நாழிகைக்கு மேலும், புதனுக்கு—42-நாழிகைக்குமேலும், வெள்ளிக்கு—21-நாழிகைக்குமேலும், சனிக்கு—14-நாழிகைக்குமேலும் உந-நாழிகை தியாச்சியமாம்.

---

## கிராமக்ஷேத்திர நிர்ணய சொருப லட்சணம்,

சொல்லுங் கத்திரி தோன்றுகோல் போலவும்
வெல்லு முக்கோணம் விளம்பிய போலவும்
புல்லுங் சேத்திரம் புனற்றண போலவும்
கல்லு மேதலை கருதிய போலவே. 581

போல மத்தளம் புகல வடைக்காய்போல்
ஆல வுள்ளு மறிய புறம்புமாய்
கோல மான குவலயந் தன்னிலே
ஏல மாளி யிசையவொன் ணுதிதே. 582

சேரு மூப்பு சிறக்குங் கிராமத்தில்
சேரு மத்தியம் செருங்குமூ லையினும்
பாரும் பள்ளம் பசர்நில மாகிலும்
ஊருந் தண்ணீரா யோடும் நிலமதே. 583

வரவு சொல்லும் வகுக்கும் பலபேர்கள்
திரமு டன்கூடா தென்ற நிலத்திலும்
உரையுங் கோபுர மூற்றநி லத்திலும்
திரையர வம்புத்துச் சேரிட மாகாதே. 584

பத்தும் பத்துப்பேர் பகரும்வாய் சிறிய
சத்து மேவுஞ் சதுர்நில மாகிலும்
தொத்து மேவுஞ் சுடலைப் பதியிலும்
சித்து மாடுகள் சேரிட மாகாதே. 585

சேதம் மேற்குச் சிறந்த கிழக்குடன்
நீதி யாமனை நிறைதப் பிருந்தாலும்
போத மேசலம் புகழ்கெருக் காகிலும்
வேத மோத விளங்கிடும் செய்யதே. 586

செய்யு டன்தயிர் சேரும்புத் தேனுடன்
கொய்யு மெண்ணெய் குறிக்கு முதிரமும்
பைய மச்சம் பகருஞ் சலமுடன்
வெய்ய பட்சி யிருக்கை யொல் லாதிதே. 587

பொல்லா இந்தப் புகலும் உழிமுறை
வல்லமங்கண் டறிந்து மிவை யெலாம்
செல்லுணர்ந்த நற் சிற்பநூற் பண்டிதர்
கல்ல லாகும்நூற் காட்சிமெய் தானிதே 588

இ-ள். கத்திரிக்கோல் போலும், மூன்று மூலைபோலும், க்ஷேத்திரம்போலும், தலைபோலும், மத்தளம்போலும், கொட்டைப் பாக்குபோலும், உள்ளும் புறம்புமா யிருக்கப்பட்ட பூமியிலும், உப்புநிலம் கிராமத்திலும், அல்லது அதற்கு மூலையிலும், பள்ள நிலத்திலும், தண்ணீரோடுகிற நிலத்திலும், பலர் கூடாதென்று தடுக்கும் நிலத்திலும், கோயில் நிலத்திலும், பாம்புப்புற்று இருந்த நிலத்திலும், சுடுகாட்டு நிலத்திலும், ஆடு மாடு கட்டப்பட்ட நிலத்திலும், கிழக்குமேற்கு அகலங் குறைந்த நிலத்திலுந் தண்ணீர் சமீபித்த நிலத்திலும், தேன், நெய், தயிர், எண்ணை, உதிரம், மீன், சலம், பட்சி இவைகளின் வாசனைபொருந்திய நிலத்திலும், வீடுகட்டலாகாது. கட்டில் பலவித துன்பமுண்டாம், எ-று.

---

## பூமியைச் சோதித்து வீடுகட்டும் நியமம்

கூறும் பூமி குழிக்கும் வெளுப்புடன்
வீறுக் தித்திப்பு விரும்பும் குசியுடன்
பேறுந் தாமரை வெருத்தபூ வாசனை
ஏறும் பூமி யிருக்க மிகநன்றே 589

நன்று மாரியர் நவில்மனை கட்டிடில்
குன்று தெக்காளுங் கூறக் குடும்பமும்
நின்று யோங்கும் நிலம்பெறும் நற்சுபம்
என்று யிலக்குமி யுல்லி லிருப்பளே 590

ஓதும் பூமி யுயர்ந்த சிவப்புமாய்
காத லாக்துவர் கருதிய பூமியும்
ஏத லாம்பரி மெழில்மணம் போலவும்
பூத லத்திற் புகழ்மனை கட்டவே 591

கட்டினல் மாளி காசினி ராசாக்கள்
எட்டி னம்வாழ் பகருங் குபேரன்போல்
கட்டம்; நீங்கிக் காட்சி மிகப்பெற்று
அட்டி யில்லா தருமையாய் வாழ்வரே 592

இ-ள். வெளுத்தபூமி, தித்திப்பானபூமி, தாமரைப்பூ வாசனை யுள்ளபூமி, இவைகளில் பிராமணர் வீடுகட்ட உத்தமம்.

சிவந்தபூமி, துவர்ப்புள்ளபூமி, குதிரை வாசனையுள்ளபூமி, இவைகளில் அரசர்கள் வீடுகட்டினால் உத்தமம்.

கறுத்தபூமி, கசப்பு, காரமுள்ளபூமி, தானியவாசமுள்ளபூமி, இவைகளில் சூத்திரர் வீடுகட்ட உத்தமம்.

பச்சைப்பூமி, புளி, உப்பு, பொருந்தியபூமி இவைகளில் சங் கம சாதிகளும் வீடுகட்ட உத்தமம்.

---

# க்ஷேத்திர ஆரூடம்

இந்தத்திக்கில் வீடு கட்டினால் நல்லதாவென்று கேட்கும் போது அந்தத் திக்கிலிருப்பவர்க்கு எதுவோ அந்தக் கணக்கை வலப்பக்கத்தில் வைத்து கர்த்தனு மாதி அட்சாவாக்குக் கும் இதுவே, அந்தக் கணக்கு இடப்பாகத்து எட்டேட்பேருக்குக் கொடுக்க மிகுந்தது தனம். முன் வலப்பாகத்திலிருந்த கணக்கை இடப்பாகத்தில் வைத்து எட்டுப்பேருக்குக் கொடுக்க மிகுந்தது குணம், தனம் அதிகமாயிருந்து குணம் குறைவாயிருந்தால் நல் லது குணம் அதிகமாயிருந்து தனங் குறைவாயிருந்தால் நல்ல தல்ல தனமும் குணமும் சரியாயிருந்தால் ஆதாயமும் விரையமுஞ் சமமாயிருக்கும்.

---

## கயிறு பிடித்தளக்கும் இலட்சணம்

பிராமணன் க்ஷத்திரியர் பூமியை முதல் முழங்காலாற்றொட்டு நக்கவேண்டும் மறுபடியும் பிராமணன் தெர்ப்பையால் தொட்டு நக்கவேண்டும், வைசியனும், சூத்திரனும் திரித்தபூக்தண்டால் நக்கவேண்டும். க்ஷத்திரியர் தேங்காய்க் கயிற்றினால் நக்கவேண்டும். வைசியர் பனைநார்கயிற்றினால் நக்கவேண்டும், சூத்திரர் நூற்கயிற்றினால் முப்புரியோட்டு அதனால் நக்கவேண்டும். இந்தக் கயிற்றினால் கோயில்களுக்கும் பிராமணன்வீட்டுக்கும் க்ஷத்திரியர் வீட்டுக்கும் அளக்கலாம். பின்பு இரட்டைப்புரி நூற்கயிற்றினால், வைசியர், சூத்திரர், இவர்கள்வீட்டுக்கும் அளக்கலாம் இந்தக் கயிறு பிடித்தளக்கும் போதளந்தசீவன் தாண்டுகிறதோ அந்தசாதியெலும்பு அகப்படும் அதையெடுத்துபோட்டுவிட்டவும் கைகயிற்றினால் அளக்கும்போது கோழிதாண்டினால் பட்சியெலும்பு, கீழ் மூலை பாரிசத்திலிருக்கும் பூனை தாண்டினால், அதின் எலும்பு அக்கினிமூலையிலிருக்கும் எருமை தாண்டினால் ஆயலெலும்பு ஈசானியத்திலிருக்கும். பசுதாண்டினால் அதனெலும்பு வருணமூலையிலிருக்கும், கழுதை தாண்டினால் அதனெலும்பு வாய்வு மூலையிலிருக்கும் குதிரை தாண்டினால் அதனெலும் வடக்கு மூலையிலிருக்கும், மனிதர் தாண்டினால் அவ்வெலும்பு மத்தியிலிருக்கும், ஒருமனிதன் என்னை தேய்த்துக்கொண்டு எந்த மூலையில் நின்று பார்க்கிறானோ அந்தத்திக்கில் 7½-அங்குலம்ஆழம் பள்ளமெடுத்துப் பார்த்தால் மனிதரெலும்பு இருக்கும். வைத்தியம் பிடித்தவன் எந்த மூலையைப் பார்க்கிறானோ அந்த மூலையில் 8—அங்குலந் தோண்டிப்பார்த்தால் மனிதரெலும்பு அகப்படும். இந்தப்படி பூமியைச் சோதித்து வீடு கட்டவேண்டும்.

---

## மனையில் எலும்பிருக்கில் குணலக்ஷணம்

வீடு கட்டும்போது பூமியைச் சோதனை செய்யாமல் வீடு கட்டின பலன் யாதெனில் பசுவிருந்து பாலில்லாமலிருந்தால் குழந்தைகளெலும்பு கிழண்டையிருக்கும் பசுக்களிருந்தும், பால் கறவாது அரைத்தனத்தார் கோபமுண்டா யிருந்தால் குதிரை

யெலும்பு அக்கினி மூலையிலிருக்கும் ஆகிலும் எக்காளும் யோக முண்டாம், யானை யெலும்பு தென்வண்டை யிருந்தால் எக்காளும் குணக்காரனுயிருந்து துக்கப்படுவான். பன்றி யெலும்பு நிருதி மூலையி லிருந்தால் என்றைக்கும் அவமிருத்து தோஷம் வந்தடையும், எருதெலும்பு மேற்கே யிருந்தால் என்றைக்கும் ஆருடஞ் சொல்லுவார், பின்னும் போக்குவந்தது சொல்லுவார், கழுதை யெலும்பிருந்தால் என்றைக்கும் அர்த்தநாசனமா யிருக்கும், ஆட்டெலும்புவடக்கேயிருந்தால் அண்டை யயலார் என்றைக்குஞ் சண்டையா யிருப்பார். ஈசானியத்தில் காயெலும்பு இருந்தால் வீட்டி லெக்காளும் கலகமாயிருக்கும், நடு வீட்டில் தலைமண்டையோடிருந்தால் — அவ்வீட்டு மனையை ஆளசாணளவு மண்ணெடுத்து சோதனை செய்து வீடு கட்டினல் சுகமுண்டாகும், கோயில்கள் கட்டவேண்டுமானல் அந்தப்பூமி யெவ்வளவோ அவ்வளவு விஸ்தாரம் ஏழு சாணுழம் மண்ணெடுத்து சோதித்துப் பார்த்துக் கட்டவேண்டும். வைசியனுனல் நாலுசாண் மண்ணெடுத்துப்பார்த்துக் கட்டவேண்டும் சூத்திரன் மூன்று சாண் மண்ணெடுத்துப் பார்த்துக் கட்டவேண்டும்.

---

## சலதாரைலட்சணம்.

அண்டை வீட்டுத் தண்ணீர் தன் வீட்டுக்கு வரக்கூடாது தமது வீட்டுத் தண்ணீர் கிழக்கே போனல் உத்தமம். அக்கினி மூலையிற் போனல் எஜமானனுக்கு ஆகாது வாயுவு மூலையிற்போனல் மக்கள் நஷ்டமாகும். வடக்கே போனல் தனமுண்டு ஈசானிய மூலையிற் போனல் சுபகாருமுண்டாகும், தன் வீட்டில் தானே தண்ணீரிருந்தால் நாசமாம்.

---

## கிரகப்பிரவேசம்.

ஆனி, ஆடி, புரட்டாசி, மார்கழி, மாசி, பங்குனிமாதங்களும், ஞாயிறு, செவ்வாய், வியாழம், இவ்வாரங்களும், அசுவனி, மிருக

சிரம், புனர்பூசம், அஸ்தம், சித்திரை, சோதி, மூன்றுத்திரங்கள், அனுஷம், திருவோணந் தவிர மற்ற நட்சத்திரங்களும், விருச்சிகம், கும்பம் இருத்தையும் ஆகாவரம், அஷ்டமசுத்தமுள்ள லக்கினர், உத்தமம்.

### இராவிழிப்பு ராசியாவன

மேஷம், ரிஷபம், மிதுனம், கர்க்கடகம், தனுசு, மகரம் ஆகு.

### பகல்விழிப்பு ராசியாவன

சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், கும்பம், மீனம் ஆகு.

## திதிகளின் பலன்.

நந்தை, இருத்தை, பத்திரை, அமாவாசை, பௌர்ணமி, இவைகளில் ஸ்தம்பப் பிரதிஷ்டை செய்யக்கூடாது மற்ற திதிகளிற் செய்யலாம்.

## நட்சத்திரப் பலன்.

அஸ்தம், ரேவதி, அசுவனி, சதயம், அவிட்டம், பூசம், திருவோணம், புனர்பூசம், ரோகணி, சித்திரை, அனுஷம், உத்திரம், உத்திரட்டாதி, இந்த நட்சத்திரங்களில் பிரதிஷ்டை செய்யில் தனமும் புத்திர சுகமும் உண்டாகும்.

## இலக்கின சுபக்கிரக குரூர நிர்ணயம்.

நாலாம் ராசி, பத்தாம் ராசி, ஏழாம் ராசி, ஒன்பதாம் ராசி, ஐந்தாம் ராசி, இவைகளில் சுபக் கிரகமிருந்தாலும், சுபக்கிரகம் லக்கனத்தைப் பார்த்தாலும், சுபக்கிரகம் உச்சந்திலிருந்தாலும், பாவக் கிரகம், ஆறும் ராசி, மூன்றும் ராசி, பதினோராம் ராசியிலிருக்க ஸ்தம்பப் பிரதிஷ்டை செய்யில் சுபகாரமுண்டாம்.

---

# நட்சத்திரம் மிருகம் பட்சி மரம் கணம்.

| நட்சத்திரம் | மிருகம் | பட்சி | மரம் | கணம் |
|---|---|---|---|---|
| அசுவனி | குதிரை | இராசாளி | எட்டி | தேவகணம் |
| பரணி | யானை | காக்கை | நெல்லி | மனுஷகணம் |
| கார்த்திகை | ஆடு | மயில் | 0 அத்தி | இராட்சதகணம் |
| ரோகணி | பாம்பு | ஆந்தை | 0 நாவல் | மனுஷகணம் |
| மிருகசீரிடம் | சாரை | கோழி | கருங்காலி | தேவகணம் |
| திருவாதிரை | நாய் | அன்றில் | செங்கருங்காலி | மனுஷகணம் |
| புனர்பூசம் | பெண்பூனை | அன்னம் | மூங்கில் | தேவகணம் |
| பூசம் | கடா | நீர்க்காக்கை | 0 அரசு | தேவகணம் |
| ஆயிலியம் | ஆண்பூனை | சிச்சிலி | 0 புன்னை | இராட்சதகணம் |
| மகம் | ஆணெலி | ஆண்கழுகு | 0 ஆல் | இராட்சதகணம் |
| பூரம் | பெருச்சாளி | பெண்கழுகு | 0 பலாசு | மனுஷகணம் |
| உத்தரம் | எருது | சிள்வண்டு | 0 அலரி | மனுஷகணம் |
| அஸ்தம் | எருமை | பருந்து | 0 ஆத்தி | தேவகணம் |
| சித்திரை | ஆண்புலி | மரங்கொத்தி | வில்வம் | இராட்சதகணம் |
| சுவாதி | கடா | தேனீ | மருது | தேவகணம் |
| விசாகம் | பெண்புலி | செவ்வாழ்குருவி | விளா | இராட்சதகணம் |
| அனுஷம் | பெண்மான் | வானம்பாடி | மகிழ் | தேவகணம் |
| கேட்டை | கலை | சக்கரவாகம் | 0 பிராய் | இராட்சதகணம் |
| மூலம் | பெண்நாய் | செம்போத்து | 0 மரா | இராட்சதகணம் |
| பூராடம் | ஆண்குரங்கு | கவுதாரி, பகண்டை | 0 வஞ்சி | மனுஷகணம் |
| உத்திராடம் | மலட்டுப்பசு | வலியன் | 0 பலா | மனுஷகணம் |
| திருவோணம் | பெண்குரங்கு | நாரை | 0 எருக்கு | தேவகணம் |
| அவிட்டம் | காமதேனு | வண்டு | வன்னி | இராட்சதகணம் |
| சதயம் | பெண்குதிரை | அண்டங்காக்கை | கடம்பு | மனுஷகணம் |
| பூரட்டாதி | புருஷாமிருகம் | உள்ளான் | 0 தேமா | மனுஷகணம் |
| உத்திரட்டாதி | பாற்பசு | கோட்டான் | வேம்பு | மனுஷகணம் |
| ரேவதி | பெண்யானை | வல்லூறு | 0 இலுப்பை | தேவகணம் |

யானைக்குப் பகை—சிங்கம், மநுஷனுக்குப் பகை—புலி, குதிரைக்குப் பகை—எருமை, ஆட்டுக்குப் பகை—நாய், பாம்புக்குப் பகை—குரங்கு, எலிக்குப் பகை—பூனை, மானுக்குப் பகை—நாய்.

# நாம நக்ஷத்திர எழுத்துக்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| சு | சே | சோ | லா | அசுவனி |
| லி | லு | லே | லே | பரணி |
| அ | ஈ | உ | எ | கார்த்திகை |
| ஒ | வா | வி | வு | ரோகணி |
| வே | வோ | கா | கி | மிருகசிரிடம் |
| கு | க்க | ஙு | ச | திருவாதிரை |
| கெ | கோ | ஹ | ஹி | புனர்பூசம் |
| கு | ஹெ | ஹொ | ய | பூசம் |
| டி | டு | டே | டோ | ஆயிலியம் |
| மா | மி | மூ | மே | மகம் |
| மோ | டா | டி | டு | பூரம் |
| டே | டோ | பா | பி | உத்திரம் |
| பு | ஷ | ணா | ட்டா | அஸ்தம் |
| பே | போ | ரா | ரி | சித்திரை |
| ரு | ரே | ரோ | த | சுவாதி |
| தீ | து | தே | தோ | விசாகம் |
| நா | நீ | நு | நே | அநுஷம் |
| நோ | யா | யீ | யூ | கேட்டை |
| யெ | யோ | ப்யா | ப்பி | மூலம் |
| பூ | தா | ப | ட | பூராடம் |
| பே | போ | ஜா | ஜி | உத்திராடம் |
| ஜூ | ஜெ | ஜொ | க | திருவோணம் |
| க | கி | கு | கே | அவிட்டம் |
| கோ | சா | சி | சு | சதயம் |
| ஸெ | ஸொ | த | தி | பூரட்டாதி |
| து | ஸ | த்தா | த்தி | உத்திரட்டாதி |
| தே | தோ | ச்சா | ச்சி | ரேவதி |

## கிரகப் பார்வை.

குரு, 5, 7, 9—ஐயும், சனி 3, 7, 10—ஐயும், செவ்வாய் 4, 7, 8—ஐயும், குளிகன் 7, 12—ஐயும் மற்றக் கிரகங்கள் 7—ஐயும் பார்ப்பர்.

---

## பார்வையி னளவு.

சேரு முதலா மேழிடங்கள் முழுநோக் கொன்ப தெட்டு மரை
பாரி ரைந்தா அரைநோக்கம் பத்தும் நான்குங் காலோக்கம்
ஆறும் மூன்றும் பன்னொன்றும் அரைக்கா லோக்கா மாஅடனே
நாரி யிரண்டும் பன்னி ரண்டும் நாட்ட மில்லை கல கோட்டே

இ-ள். 1, 7—முழுப்பார்வை 8, 9—முக்காற் பார்வை, 5—அரைப்பார்வை 4, 10—காற்பார்வை 3, 11—அரைக்காற்பார்வை.

---

## கிரகப்பலன்.

வியாழம், வெள்ளி வாரமும் லக்கினம் நாலு ஏழிற்—கபர், ஆறிலும், மூன்றிலும்—பாவமிருக்க கோபுரம், சாலை, வீடு, மாளிகை இவைகள் கட்டில் நாறு வயது பெற்று விளங்கும்.

ஜென்ம லக்கினத்துக்குக் கேந்திரத்தில் சந்திரன் நிற்கப் பதினொன்றில்—இராகு, செவ்வாய், சனி இவர்களிருக்கில்—மனை முகூர்த்தஞ் செய்தால்—வயது நூறுவருஷம் விளங்கும். லக்கினத்தில் குருவும், சந்திரனுமிருக்கும் மூன்றில்—சூரியனிருக்க ஆறில்—செவ்வாயிருக்க முகூர்த்தஞ் செய்யிலதை மனை நூறுவருஷம் விர்த்தியாய் விளங்கும்.

லக்கனத்தில் சந்திரன் நிற்க 4—ல் புதனிருக்க குரு உச்சமாக முகூர்த்தஞ் செய்யில் அந்தமனைக்கு அறுநூறு வயதாகும்-இலக்

மூலையின்—இடுப்பும், நிருதிமூலையில்—வாலும், இதன் பின்பக்கம் வந்து சிம்மம், கன்னி, துலாம் இந்த மூன்று—சங்கிராந்தியிலும் வாயு மூலையின்—சிரசு, நிருதிமூலையில் — இடுப்பும், அக்கினி மூலையில்—வாலும், இதன் பக்கமாய் வந்து விருச்சிகம், தனுசு, மகரம் இந்தமூன்று—சங்கிராந்தியிலும், நிருதி மூலையிற்—சிரசும், அக்கினிமூலையின்—இடுப்பும், ஈசானிய மூலையின்—வாலும், இதன் பக்கம் வந்து கும்பம், மீனம், மேஷம் இந்தமூன்று—சங்கிராந்தியிலும், அக்கினிமூலையின்—சிரசும், ஈசானிய மூலையில்—இடுப்பும், வாயு மூலையில்—வாலும் இவ்விதமாகயிருக்க ஸ்தம்பப் பிரதிஷ்டைசெய்யில் சுபப்பிரதம், சிரசில் செய்யின்—மிருத்துவுபயம், முதுகின்மேற் செய்யில் கெடுதியுண்டாம். வாலின்மேற் செய்யில் சலனம். இப்படியிருக்கிற விடத்தில் ஸ்தம்பப் பிரதிஷ்டை செய்யில் சம்பத்துண்டாம்.

---

## ஆசிகா சங்கராந்தி நிர்ணயம்

ரிஷபம், கடகம், மிதுனம் இந்த சங்கராந்தியில்—சூரியனிருக்கக் கன்னி, சிங்கம், துலாம் இதில் சம்பந்தமானாலும் உத்திரம் அஸ்தம் சித்திரை இந்தமூன்று—நட்சத்திரத்திலும் சந்திரனிருக்க அக்கினிமூலையில்—ஸ்தம்பப் பிரதிஷ்டை செய்யலாம் கும்பம் மீனம் மேஷம் இந்த சங்கராந்தியின்—சூரியனிருக்க ரிஷபம் மிதுனம் கடகம் இந்தச் சம்பந்தமானாலும் ரோகணி மிருகசீரிடம் புனர்பூசம் இந்த மூன்று நட்சத்திரத்திலும் சந்திரனிருக்க நிருதி மூலையின் ஸ்தம்பப் பிரதிஷ்டை செய்யவும், இந்தப்படிக்குப் பிரதம ஸ்தம்பப் பிரதிஷ்டை செய்யலாம் சுபப்பிரதம் அன்னிய மார்க்கத்தில் செய்தால் கேடுவரும் வீட்டுக்கு லக்கின கேந்திர கிரகபலன் பிரபலமாயிருக்கும், லக்கினத்தில்—ஸ்தம்பப் பிரதிஷ்டைபண்ணி புதனிருக்கிற லக்கினத்தில்—அபமேத்தி, சுக்கிரனிருக்கிற லக்கினத்தில் ஓடு கூடினால் அந்த வீட்டுக்கு அக்கினிபயம் சோரபயம் ராஜபயமுமில்லை சலாரசியின்—சந்திரனிருக்கவாகிலும், 5—ல் 9—ல் சந்திரனிருக்க சுக்கிரவாரத்தில் வீடுகட்டினால் சம்பத்துண்டாம்.

---

## இராஜயோகம்.

குருவாரத்தில்—கடகம் மீனம் தனுசு இந்த லக்கினத்தில் பிரகஸ்பதியாகிலும் சுக்கிரனாகிலுமிருக்க வீடு கட்டினால் அந்த வீட்டில் சவுக்கியமாய் ராஜாதிபதியாய் புத்திர சம்பத்துண்டாகி சுகமேயிருப்பார்கள், சுக்கிரகம் 10—ல் இருந்தாலும் லக்கனத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாலும் அப்படிப்பட்ட வேளையில் ஸ்தம்பப் பிரதிஷ்டை செய்தால்—சுபப்பிரதமாகும் மீன லக்கினத்தில் சுக்கிரனிருக்கவாகிலும் 4—ல் பிரகஸ்பதி யிருக்கவாகிலும் 10-ல் 2—ல் உச்சஸ்தானமாயிருந்த சனி 11—ல் இருந்தாலும் அப்படிப்பட்ட லக்கினத்தில்—ஸ்தம்பப் பிரதிஷ்டை செய்தால் சுபமுண்டாகும்.

---

## ஜென்ம நட்சத்திரம் பார்க்கும் நிலை.

ஜென்ம நட்சத்திரமுதல் கடைசி நட்சத்திரம் வரைக்கும் எண்ணின தொகையை நாலிற்பெருக்கி திதிவாரங்கூட்டி நவக்கிரகத்தில் கிழக்கே நின்றது ஆதித்தன் சோமன் லாபயோகம் அங்காரகன் மிருத்தியு புதன் பிரகஸ்பதி லாபம் சுக்கிரன்—சவுக்கியம், சனி—மகாபாண்டம், ராகு—காதபாதம், கேது—மகதயன். இது நித்தியபலன்.

லக்கினத்தில் பிரகஸ்பதியிருந்தாலும், சுக்கிரனிருந்தாலும், அப்போது வீடு கட்டினால்—ஐன்னூறு வருஷம் சுகமே யிருப்பார்கள், லக்கினத்தில் புதனிருந்தால்—ஐம்பது வருஷம் ஸ்தம்பப் பிரதிஷ்டை, லக்கினத்தில் பிரகஸ்பதி நாலில் சந்திரனும், அங்காரகனும், சனியும் கூல் இருக்க, நாற்பது வருஷம் சுபமாகவிருக்கும், லக்கினத்தில் சுக்கிரனிருக்க நூறுவருஷம், சிங்கம் கன்னி துலாம் இந்த மூன்று ராசியிலும், சூரியனிருக்க ஈசானியத்தில் ஸ்தம்பப் பிரதிஷ்டை செய்யவேணும், கும்பம் மேஷம் இந்த இரண்டு ராசியிலும்சூரியனிருக்க நிருதிமூலையில் ஸ்தம்பப்பிரதிஷ்டை செய்யவேணும் ரிஷபம் கடகம் மிதுனம் இந்த மூன்று ராசியில் சூரியனிருக்க அக்கினிமூலையில் ஸ்தம்பப் பிரதிஷ்டை செய்யவேணும், இந்தப்படிக்கு விவாகமுதலானதற்கும் ஸ்தம்பப்பிரதிஷ்டை செய்யவேணும், இப்படிப் பார்த்துச் செய்யாமல் அன்னியமாகச் செய்தால் தரித்திரமுக் துக்கமும்வரும், புருஷனுக்கு ஆனியாம்.

## வாசற்படிவைக்கும் இலட்சணம்.

ஒரு வீட்டுக்கு நாலுபாகத்திலும் வாசற்படி வைத்திருந்தால் விசுவதோ முகமென்று சொல்லப்படும். அதன் பலன் விர்த்திப் பிரதம், கிழண்டை வாசற்படியில்லாமல் மூன்று பக்கத்துக்கு மிருந்தால் வியாக்கிராத மென்னப்படும், இதன்பலன் பசுவுகளுக் கும் மிருகங்களுக்கும் பாதைபாய்த் திருடர் பயமாகும், தெற்கு முகம் வாசற்படியில்லாமல் மற்ற மூன்று பக்கத்திலு மிருந்தால் பாக்கியப்பிரதம், மேற்கு முகமாக வாசற்படி யில்லாமல் மற்ற மூன்றுபக்கத்துக்கு மிருந்தால் ஸ்ரீவிஜயமென்று சொல்லப்படும், இதன்பலன் நன்மூக வாழ்வார்கள். வடக்குமுகமாய் வாசற்படியில் லாமல் மற்ற மூன்றுபக்கத்திலு மிருந்தால் சூரியவிஜய மென்னப் படும். இதின் பலன் ராஜபயம், கிழக்கு தெற்கு முகத்தில் சுவரில்லாம லிருந்து கோண மத்தியில் சுவரிருந்தால் அது புண்டரீகமென்னப் படும். இதன்பலன் மத்தியம்.

---

## விசால லட்சணம்.

தெற்குமுகம் மேற்குமுகம் கட்டினவீடு விசாலத்துக்கு கமலா சனமென்னப்படும் இதன்பலன் லட்சுமி பிரதம் மேற்குமுகம் வட க்குமுகம் கட்டினவீடு விசாலத்துக்கு சுவர்ணபல மென்னப்படும். இதன்பலன் சோரபயம் பீடையுண்டாம், வடக்குமுகமும் கிழக்கு முகமும் கட்டின வீடு விசாலத்துக்கு புஷ்கதருஷ்டிக மென்னப் படும் இதன்பலன் சோரபயமும் விஷபயமுமாகும் தெற்கு மேற்கு வடக்கு கட்டின வீட்டுக்கு கிழக்கு அவட்த்தில் வாசற்கால் வைத் தால் புத்திர முஷ்டிக மென்னப்படும். இதன்பலன் பயம் வடக்கு கிழக்கு தெற்கு கட்டின வீட்டுக்கு மேற்கில் வாசற்கால்வைத்தால் அதிசயமென்னப்படும், இதன்பலன் ஆனி கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு கட்டின வீட்டுக்கு வடக்கில் வாசற்கால்வைத்தால் நல்ல சுகமுண்டாகும், மேற்கு கிழக்கு வடக்கு இந்த மூன்று பக்கத்தி லும் வாசற்காலிருந்தால் சுவீபாண பதமென்னப்படும். இதில் சம் பத்துண்டாம் கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு இந்த நாலுபாக் கத்திலும் வீடு கட்டியிருந்தால் அது சதுர்ச்சாலை யென்னப்படும். இதன் பலன் உத்தமம்.

சாளிய மூலையும், கன்னிமூலையும், அகைவழி வாங்கிக் கழி றளப்பது.

## இவ்வாரங்களுக்குக் கரண மறிய

| | |
|---|---|
| ஆதிவாரத்துக்கு | வணிசவ கரணம் |
| சோமவாரத்துக்கு | கரசவா கரணம் |
| மங்களவாரத்துக்கு | கைதூலவா கரணம் |
| புதவாரத்துக்கு | கௌலவா கரணம் |
| குருவாரத்துக்கு | பவ கரணம் |
| சுக்கிரவாரத்துக்கு | பவகரணம் |
| சனிவாரத்துக்கு | பத்திரைவா கரணம் |

## நட்சத்திரப் பலன்.

அசுவனி, மிருகசிரிடம், உரோகணி, பூசம், அஸ்தம், சித்திரை அனுஷம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம் இந்தப் பதினொரு நட்சத்திரமும் உத்தமம்

திருவாதிரை, புனர்பூசம், உத்திரம், சேட்டை, உத்திரட்டாதி, ரேவதி இந்த ஆறு நட்சத்திரமும் மத்திமம்,

பரணி, கார்த்திகை, ஆயிலியம், மகம், பூரம், பூரட்டாதி, சுவாதி, பூராடம், விசாகம், மூலம் இந்தப் பத்து நட்சத்திரமும் அதமம்.

——(⊛)——

## யோகபலன்

வச்சிரம், பரிகம், வியதிபாதம், வைதிருதி, கண்டம், சூலம், அதிகண்டம் விஷ்கம்பம். வியாகாதம், இந்த ஒன்பது யோகமும் நலமல்ல மற்றயோகம் பதினெட்டும் உத்தமம்.

## நட்சத்திரத்துக்கும் யோகத்திற்கும் அமிசை.

| | | | |
|---|---|---|---|
| அசுவனிக்கு | அரிஷணம் | மூலத்துக்கு | சுபம் |
| ரோகணிக்கு | பிரீதி | திருவோணத்துக்கு | விருத்தி |
| புனர்பூசத்துக்கு | வியதிபாதம் | பூரட்டாதிக்கு | மாகேந்திரம் |
| மகத்துக்கு | சோபனம் | இந்த ஒன்பது நட்சத்திரயோகத் | |
| அஸ்தத்துக்கு | சிவம் | துக்கும் தனம் | 4 |
| விசாகத்துக்கு | திருதி | | |

| | | | |
|---|---|---|---|
| பரணிக்கு | விஷ்கம்பம் | பூராடத்துக்கு | கண்டம் |
| மிருகசீரிடத்துக்கு | சித்தி | அவிட்டத்துக்கு | சுப்பிரமம் |
| பூசத்துக்கு | சௌபாக்கியம் | உத்திரட்டாதிக்கு | வியாக்காதம் |
| பூரத்துக்கு | பரிகம் | இந்த ஒன்பது நட்சத்திரயோகத் | |
| சித்திரைக்கு | சுகர்மம் | துக்கும் தனம் | 3 |
| அனுஷத்துக்கு | சாத்தியம் | | |

| | | | |
|---|---|---|---|
| கார்த்திகைக்கு | வச்சிரம் | உத்திராடத்துக்கு | பிராமியம் |
| திருவாதிரைக்கு | ஆயுஷ்மான் | சதயத்திற்கு | துருவம் |
| ஆயிலியத்திற்கு | வரியான் | ரேவதிக்கு | வைதிருதி |
| உத்திரத்திற்கு | அதிகண்டம் | இந்த ஒன்பது நட்சத்திரயோகத் | |
| சுவாதிக்கு | சித்தம் | துக்கும் தனம் | 12 |
| கேட்டைக்கு | சூலம் | | |

## நட்சத்திரத்திற்கும் யோகத்திற்கும் தாராபலன்

| | | நட்சத்திரத் தியாச்சியத் துருவமாவன. | |
|---|---|---|---|
| அசுவனிக்கு | பேசிதாரம் | அசுவனி | 50 |
| ரோகணிக்கு | சரிதாரம் | பரணி | 24 |
| புனர்பூசத்துக்கு | பேசிதாரம் | கார்த்திகை | 30 |
| மகத்துக்கு | சரிதாரம் | ரோகணி | 40 |
| அஸ்தத்துக்கு | பேசிதாரம் | மிருகசீரிடம் | 14 |
| விசாகத்துக்கு | சரிதாரம் | திருவாதிரை | 11-21 |
| மூலத்துக்கு | பேசிதாரம் | புனர்பூசம் | 30 |
| திருவோணத்துக்கு | சரிதாரம் | பூசம் | 20 |
| பூரட்டாதிக்கு | பேசிதாரம் | ஆயிலியம் | 32 |
| பரணிக்கு | சரிதாரம் | மகம் | 30 |
| மிருகசீரிடத்துக்கு | பேசிதாரம் | பூரம் | 20 |
| பூசத்துக்கு | சரிதாரம் | உத்தரம் | 18 |
| பூரத்துக்கு | பேசிதாரம் | அஸ்தம் | 22 |
| சித்திரைக்கு | சரிதாரம் | சித்திரை | 20 |
| அனுஷத்துக்கு | பேசிதாரம் | சுவாதி | 14 |
| பூராடத்துக்கு | சரிதாரம் | விசாகம் | 14 |
| அவிட்டத்துக்கு | பேசிதாரம் | அனுஷம் | 10 |
| உத்திரட்டாதிக்கு | சரிதாரம் | கேட்டை | 14 |
| கார்த்திகைக்கு | பேசிதாரம் | மூலம் | 20-56 |
| திருவாதிரைக்கு | சரிதாரம் | பூராடம் | 24 |
| ஆயிலியத்திற்கு | பேசிதாரம் | உத்திராடம் | 20 |
| உத்திரத்திற்கு | சரிதாரம் | திருவோணம் | 10 |
| சுவாதிக்கு | பேசிதாரம் | அவிட்டம் | 10 |
| சேட்டைக்கு | சரிதாரம் | சதயம் | 18 |
| உத்திராடத்துக்கு | பேசிதாரம் | பூரட்டாதி | 16 |
| சதயத்திற்கு | சரிதாரம் | உத்திரட்டாதி | 24 |
| ரேவதிக்கு | பேசிதாரம் | ரேவதி | 30 |

இந்நாழிகைக்குமேல் 4-நாழிகை தியாச்சியம்.

# இலக்கின நியாச்சியம்.

மேஷம், ரிஷபம், கன்னி, தனுசு ஆக நாலுக்கும் மூதனில் அரை நாழிகையும், மிதுனம், சிங்கம், துலாம், கும்பம் ஆக நாலுக்கும் நடுவில் அரை நாழிகையும், கர்க்கடகம், விருச்சிகம், மகரம், மீனம் ஆக நாலுக்கும் கடைசியில் அரை நாழிகையுமாம்.

| சரராசியாவன. | | ஸ்திரராசியாவன. | | உபயராசியாவன. | |
|---|---|---|---|---|---|
| மேஷம் | | ரிஷபம் | | மிதுனம் | |
| கடகம் | ௬௪ | சிங்கம் | ௬௪ | கன்னி | ௬௪ |
| துலாம் | | விருச்சிகம் | | தனுசு | |
| மகரம் | | கும்பம் | | மீனம் | |

## கரண பலன்.

பவம், பாலவம், கௌலவம், தைதுலே, இந்நான்கு கரணமும் உத்தமம்.

கரசை, வணிசை, இவ்விரண்டு கரணமும், மத்திமம்.

பத்திரை, சகுனி, நாகவம், சதுஷ்பாதம், கிமிஸ்துக்கினம், இவ்வைந்து கரணமும், அதமம் நஷ்டம், அமிசை, மத்திய அமிசை, இம்மூன்றும் அதிகமாயிருக்கக் கோசார அமிசை, புத்திர அமிசை யென்னப்படும். இப்படியாக அங்குலம் ௧, அமிசை ௬, அமிசையல் லாமல் வேறு அதிகமுங் குறைவும் வருகிறதில்லை ௩-௬, நன்மை. ௪-ஆகாது. அமிசை கூடாது, கர்த்தனுக்கு ௯ம்-லயனுக்குமேலிருக் தால் பாக்கியப் பிரதம். ௯ம்-லயனுக்குக் குறைவானால் ஆனிப்பிர தம், தேவேந்திர கர்த்தனானால் சுபப்பிரதம், அக்கினிக்கர்த்தனானால் கீழ்மேலாகச் செய்விக்கும்.

| ஊர்த்தமுக நட்சத்திரம் | புறமுக நட்சத்திரம் | அதோமுக நட்சத்திரம் |
|---|---|---|
| திருவோணம் | சுவாதி | பரணி |
| திருவாதிரை | சித்திரை | கார்த்திகை |
| பூசம் | அசுவனி | ஆயிலியம் |
| ரோகணி | மிருகசீரிடம் | விசாகம் |
| | அஸ்தம் | பூரம் |
| உத்தாடம் | அனுஷம் | பூராடம் |
| உத்தரட்டாதி | ரேவதி | பூரட்டாதி |
| சதயம் | புனர்பூசம் | மூலம் |
| அவிட்டம் | கேட்டை | மகம் |
| ஆக—9 | ஆக—9 | ஆக—9 |

இந்தப் புறமுக நட்சத்திரத்தில் சுவர் வைக்கவும் யானை குதிரை, ஆடு, மாடு இவைகள் வாங்கவும் உத்தமம்.

அதோமுக நட்சத்திரத்தில் கிணறு, குளம், ஏரி இவைகள் வெட்டலாம். அஸ்திவாரக் குழி வெட்டலாம். கணக்கு, அப்பியாசம், களஞ்சியம், இவைகள் செய்யலாம். தனம் புதைக்கலாம், சங்கு ஸ்தாபனம் பண்ணலாம், ஸ்தம்பப் பிரதிஷ்டை பண்ண முதற் சாமம் உதயம், இரண்டாஞ் சாமம்—சங்கிதாரம், மூன்றாஞ் சாமம்—அஸ்தமம், நாலாஞ்சாமம் — சந்தியாகாலம் இராக்காலம இவைகளில் மேற் சொன்னவைகள் செய்யக்கூடாது.

---

# கெர்ப்பமோதிவது

வெண்பா.

[illegible] —றிற் பதிக்குமுடிதே முக்கோணமேல்
நுனிக்கு கெர்ப மதுகாவே—யானே தேகள்
கண்டு முதல் தேனளவு காலையே மாகாணி
கொண்டதனு சுக்கொண்டே 59௧

---

## விலக்கு நாள்

மாதாந்தம் மூன்று நாளும் வருடாந்த மொருபத் தைந்துந்
திதாந்த இரானைத் திகதிக் திசைமுகம்பின் சேர்ந்த வேழும்
சாதாந்த கண்ணுய் நாளிற் கடையிரு கடிகை தானும்
வேதாந்த முணர்ந்தோர் நீக்கென் றுரைத்தனர் மிகவுந் தானே 596

---

## காலாமிருத சுலோகத்தின் கருத்து

விடுகட்ட நிச்சயிக்கும்போது நட்சத்திரங்கள் நிற்கும் நிலை.

வீடு அஸ்திவார முகூர்த்தம் ஸ்தம்பப் பிரதிஷ்டைக்கும் சூரியன் கார்த்திகை, பரணி, 4—ம் பாதம் ரோகணி முதற்பாதம் இருக்கினும் டை சந்திரன்—கார்த்திகையி லிருக்கினும் டை செவ்வாய்—கார்த்திகை, மகம், ரேவதி, உத்திராடம், அஸ்தம், மூலம். பூசம், இந்த 7—நாளிலும் இருந்தால் இரகபதியாகிய எஜமானுக்கு அத்தியந்த துக்கமுண்டாம்

அந்த வீடானது அக்கினியில் பஸ்மமாய்ப் போம். 1 டை சனி, அனுஷம், கேட்டை, சுவாதி, பூரட்டாதி, உத்திரட்டாதி பரணி, இந்த ஆறு நாளிலே இருக்க எந்த வீடு கட்டினாலும் அந்த வீடு சீக்கிரமாய பிசாசபூதங்கள் வாசமபண்ணும் டை சுபக்கிரகமானாலும், பாவக்கிரகமானாலும், சந்திரகு க்ஷேத்திரத்திலிருந்து லக்கினத்துக்குப் பத்திலாவது ஏழிலாவது இருந்தால அந்தவீடு பாழிமையாய்விடும். டை புதன் சித்திரை அசுவனி, உத்திரம், அஸ்தம், மிருகசீரிடம், ரோகணி இந்த ஆறிலும் இருந்தால எஜமானுக்கு ஐஸ்வரிய முண்டாம.

ரோகணி, பூசம், மிருகசீரிடம், ஆயில்யம், திருவோணம், உத்திரம், உத்திராடம, உத்திரட்டாதி, பூராடம இந்த ஒன்பதிலும் குருவிருந்தால் புத்திரப்பிராப்தம. டை சுக்கிரன் அசுவனி புனர்பூசம, அவிட்டம, விசாகம, சதயம, சித்திரை இந்த ஆறிலுமிருந்தால — தானியப்பிராப்தம ஏழாம் வீட்டில்—சுக்கிரனிருந்தால் தானிய விருத்தியுண்டாம்.

---

## சனத் குமார வாஸ்து சொல்லியது

தருமதி காலாங் காலிற் றழலகுண் மூதற்கால் தன்னிற்
பரிதிதான் நிற்கும் போது பாலக ராக தாகும்
மரமய னிலேயே செம்பொன் மன்னனிதுள் மனைகள் செய்யில்
எரியகுக் கிடுத லுண்மை யெனச் சனத் குமார் சொன்னார் 597

---

### எந்த மாதங்களில் வாசற்கால் வைத்தாலும் திசையறிந்து வைக்கவேண்டும்.

கடகம், சிங்கம், இந்த இரண்டு ராசியில் சூரியன் நிற்க வீடு கட்டினால்—கிழக்குப்பார்த்த வாசற்படி வைக்கலாம்.

துலாம், விருச்சிகம், இவ்விரண்டு ராசியிலும் சூரியனிருக்க வீடு கட்டினால்—தெற்குப்பார்த்த வாசற்படி வைக்கலாம்.

மகரம், கும்பம், இவ்விரண்டு ராசியிலும் சூரியனிருக்க வீடு கட்டினால்—மேற்குப்பார்த்த வாசற்படி வைக்கலாம்.

கன்னி, மிதுனம், தனுசு, மீனம், இந்த ராசிகளில் சூரியனிருக்க வீடு கட்டினால்—வாசற்கால் வைக்கலாகாது.

கடகம், விருச்சிகம், மீனம் இந்த மூன்று ராசிக்காரருக்கும்—கிழக்குப் பார்த்தவீடு.

ரிஷபம், கன்னி, மகரம் இந்த மூன்று ராசிக்காரருக்கும்—தெற்குப் பார்த்த வீடு.

மிதுனம், துலாம், கும்பம் இந்த மூன்று ராசிக்காரருக்கு மேற்குப் பார்த்தவீடு.

மேஷம், சிங்கம், தனுசு இந்த மூன்று ராசிக்காரருக்கும்-வடக்குப் பார்த்தவீடு.

---

## வாசல விடுகிற ராசிப்பொருத்தம்

கௌர்த்திப விடை யாழ் கண்டு கிழக் குடன் வடக்க தாகும்
அளர்த்தரி யரிவை கோலும் அழகிய கிழக்குத் தெற்காம்

வலத்திசைக் கோலும் வில்லும் கும்பமாம் மேற்குந் தெற்கு
மனத்தி னருட்மீன் மேடம் வாசலாம் வடக்கு மேற்கே 598

கயல் கனி யார்த்தவாசல் கல்வியும் பொருளு முண்டாம்
இயல்பென வியமனை நோக்கில் எண்ணெணுந் துயர மாகும்
வயல் வடக் கதிசை புத்தி வாயிலால் வழக்குச் சண்டை
புயல் பெல மழியுங் கும்பம் புண்ணியர் புகழுண் டாமே 599

---

### வீடுகளுக்குத் தெருவாசற் கால்வைக்குமிலட்சணம்.

ஆவணிமாதங்கட்டும் வீட்டுக்குக்—கிழக்குப் பார்த்த வாசற் படி வைக்கலாம், கார்த்திகைமாதங்கட்டும் வீட்டுக்குத்—தெற்குப் பார்த்த வாசற்படி வைக்கலாம், மாசிமாதங்கட்டும் வீட்டுக்கு—மேற்குப்பார்த்த வாசற்படி வைக்கலாம், வைகாசிமாதங்கட்டும் வீட்டுக்கு—வடக்குப்பார்த்த வாசற்படி வைக்கலாம்.

---

## குளம்வெட்டு மிலட்சணம்.

கண்டவக் கினிமூலைக் கள்ளமாங் குழிகு ளென்கள்
உண்டெனி லடியாள் சாவ னுயிருடன் பொருளும் போகுந்
தெண்டன யமதிக்கிற் சிறப்பில்லை மிடியே யாகும்
இண்டிய கொழுப்பாந் திக்கி லிலட்சமாம் பொருள்வந் தெய்தும்.

இ-ள். அக்கினித் திக்கில் குளம் வெட்டினால் மனையாளிறப் பது மன்றி உயிர்ச் சேதமும் பொருட்சேதமு முண்டாம், இயமன் திக்கில் வெட்டில் அக்குளம் உபயோக மில்லாமற் போவது மன்றி உடையவனுக்கும் தரித்திரத்தை யுண்டாக்கும் ஈசானிய திக்கில் வெட்டில் ஐஸ்வரிய முண்டாம் எ-று.

ஆம்பொருள் கிழக்குச் சோம னத்தமுங் கல்வி தானுந்
தாம்முதல் பலவுஞ் சேருந் தையல்சேர் நிருதி திக்கில்
வெம்பவேந் திசிற் பட்டு மிக்க நோய் வறுமை காணும்
காமிது வுரைத்த நல்ல கன்மயன் வகுத்த வாறே 601

இ-ள். கிழக்கில் வெட்டினால் பொருள் விர்த்தியும், கல்வி விர்த்தியுண்டாம். நிருதிதிக்கில் வெட்டில் குளத்திற் குடையவன் மனைக்கு அக்கினிப்பிரிதியும் நோயும் வறுமையு முண்டாம், எ-று.